# தொடக்கநிலை அரசியல் விஞ்ஞானம்

## (ELEMENTS OF POLITICAL SCIENCE)

— ஆல்பர்ட் ஜான்சன் —







...டுப் பாடநூல் நிறுவனம்

# அரசியல் அறிவின் அடிப்படைகள்

சோவியத் நாடு பிரசுரங்கள்,
சென்னை, 1974

**Fundamentals of**

**Political Knowledge**




Tamil (1974)




***Price : 75 Paise*** **விலை : 75 காசுகள்**

---

Printed by L. V. Sorokin and Published by him at Soviet Nadu Office, 44, Theagaraya Road, Madras-600017, for the Information Department of the USSR Embassy in India. Printed at the New Century Printers, Ambathur, Madras-600058.

# முன்னுரை

மனிதகுலம் ஒரு மாபெரும் குடும்பம். அதற்குப் பொது வரலாறும், பொதுவான எதிர்காலமும் உள்ளது. சில காலங்களில் சில நாடுகள் முன்னேறிச் சென்றதும் இதர சில பின்தங்கி நின்றதும் உண்மையே. வேறு சில முதலில் பின்தங்கி நின்று, பின்னர் பல நாடுகளை முந்திக் கொண்டு சென்றுள்ளன. இதற்கும் ஒரு நாட்டின் நல்ல அல்லது கெட்ட அம்சங்களுக்கும் எவ்வித சம்பந்தமுமில்லை—வரலாற்றில் அவ்வாறு நிகழ்ந்துள்ளது என்பதைத் தவிர வேறொன்றுமில்லை. முக்கியத் துவம் வாய்ந்தது என்னவென்றால், ஒரு குறிப்பிட்ட மக்களின் வரலாறு ஓரளவுக்கு சகல மக்களின் வரலாறுமாகும். நாடுகளிடையே தொடர்புகள் எப்போதுமே சமாதான பூர்வமாக இல்லாதிருந் போதிலும், சில சமயங்களில் காட்டுமிராண்டித்தனமான போர் வடிவத்தைப் பெற்றிருந்த போதிலும், நாடுகள் ஒன்றுக்கொன்று தொடர்பு கொண்டுள்ளன, அறிவையும், பழக்க வழக்கங்களையும், உழைப்புக் கருவிகளையும் பரிமாற்றம் செய்து கொண்டுள்ளன. தனித்து ஒதுங்கியிருப்பது முன்னேற்றத்திற்கு இடையூறாயிருக்கும் அதே வேளை யில், அனுபவங்கள், சீலங்களின் வரலாற்றுப் பரிமாற்றம் ஒட்டு மொத்த முன்னேற்றத்திற்கு உதவி புரிகிறது. ஏகாதிபத்தியம் பல நாடுகளைக் காலனிகளாக ஒதுக்கித் தனிமைப்படுத்தி வந்திருப்பது இதற்கோர் எடுத்துக்காட்டு ஆகும்.

ஒவ்வொரு நாட்டுக்கும் அதற்கென சொந்த வாழ்க்கை முறையும், குணவியல்பும், மரபுகளும், சமூக, பொருளாதாரக் கட்டமைப்பு உள்ளன. எனினும், தேசிய வளர்ச்சியை ஆளுமை செய்யும் பிரதான விதிகள் சகல நாடுகளுக்கும் பொதுவே. இதற்கு எதிரான கருத்தை கொள்வோமேயானால், நாம் மனிதகுலம் ஒரு குடும்பம் என்னும் கோ பாட்டையும், சகல மக்களின் சமத்துவக் கோட்பாட்டையும், ஒட் மொத்த முன்னேற்றக் கோட்பாட்டையும் கைவிட வேண்டியதிருக்கு

முன்னெப்போதும் கண்டிராத மாற்றங்களை தொழில்நுட்ப வியலிலும், பொருளாதாரத்திலும், அரசியலிலும் கொண்டு வந்துள்ள காலமாகும் நமது யுகம். மேலும் மக்கள் தம்மைப் பற்றித் தாமே அதிகம் தெரிந்து கொண்டு வரும் யுகமுமாகும் இது. அவர்கள் தம்மை பற்றியும், சமுதாயத்தில் தமக்குரிய இடம் பற்றியும் நன்றாகப் பரிசீலனை செய்து வருகின்றனர். வாழ்க்கையின் பொருள் யாது? என்னும் சூட்சமமான பிரச்சினை பற்றி முன்பு மனிதன் சிந்தனை செய்து வந்தா நிலைமைகள் ஏன் இவ்வாறு இருக்கின்றன, அதை எவ்வாறு மேலும் நல்லபடியாக மாற்றமுடியும் என்பதைப் பற்றி அறிந்து கொள்வதில்

அவன் இன்று அதிக அக்கறை செலுத்துகிறான். ஆகவே, இப்பொழுது மனிதனையும் சமுதாயத்தையும் பற்றிய அறிவியல் முன்னைவிட அதிக முக்கியத்துவமடைந்துள்ளது. இவை இல்லாமல், நவீன காலத்தில் நம்மால் வேரூன்றி நிற்கவோ அல்லது சமுதாயத்தில் நமக்குரிய இடத்தைத் தேர்ந்து கொள்ளவோ முடியாது.

மனித சமுதாயத்தின் வரலாற்றை ஆளுமை செய்யும் விதிகள் பற்றிய சில அடிப்படை உண்மைகளை இந்நூல் அளிக்கின்றது. இந்தச் சுருக்கமான நூலில் சமுதாய விஞ்ஞானங்களின் சித்தாந்தச் செல்வம் முழுவதையும் இதன் ஆசிரியர்கள் பரிசீலனை செய்ய உத்தேசிக்கவில்லை. எனினும் இதில் ஈடுபாடுடைய வாசகன், விஞ்ஞான சோஷலிசத்தின் மூலவர்களும், உலகத் தொழிலாளி வர்க்கத்தின் மாபெரும் தத்துவ ஆசிரியர்களும் தலைவர்களும் ஆகிய காரல் மார்க்ஸ், ஃபிரடெரிக் எங்கல்ஸ், விளதீமிர் லெனின் ஆகியோரின் நூல்களை நேரடியாகப் படிப்பதன் மூலம் தனது அறிவை விருத்தி செய்து கொள்ள முடியும் என்று அவர்கள் நம்புகின்றனர்.

## நீண்டகால தேட்டத்தின் விளைவான சமுதாய வளர்ச்சியின் ஒரு சித்தாந்தம்

மனித சிந்தனை சமத்துவமின்மையை விளக்குவதற்கான வழிகளை நீண்ட காலமாக ஆராய்ந்து வந்துள்ளது. தொட்டிற் பருவம் தொட்டு சுடுகாடு செல்லும் வரை உழைத்த போதிலும் சிலர் எதனால் பட்டினி கிடந்தார்கள், இன்னல்களுக்கு உள்ளாயினர் என்பது பற்றியும், தமது வாழ்நாள் பூராவும் ஒரு துரும்பைக் கூட எடுத்துப் போடவில்லையென்றாலும் வேறு சிலர் எதனால் ஆடம்பர வாழ்க்கை நடத்த முடிந்தது என்பது பற்றியும் மக்கள் ஆச்சரியப்பட்டனர்.

சகல நாடுகளிலுமுள்ள மிகச் சிறந்த சிந்தனையாளர்கள் வரலாற்றின் போக்கைப் புரிந்து கொள்ள முயன்றனர். சகல விதமான தத்துவங்களும் விரித்துரைக்கப்பட்டன. கண்டனக் கருத்துக்கள் உருவாக்கப்பட்டன. நீதியின் வெற்றி பற்றிய பொதுஜன நம்பிக்கையைப் பிரதி பலிக்கும் லட்சிய சமுதாய அமைப்புகள் வருணிக்கப்பட்டன.

எனினும், விஞ்ஞான அறிவு போதுமானதாயில்லாததால், சென்ற நூற்றாண்டுக்கு முந்திய சமுதாயத்தில் உறவுகள் சரியானபடி வளர்ச்சி அடையாததால், பொது மக்களால் நீண்ட காலத்திற்குச் சமுதாய வளர்ச்சியின் மெய்யான காரணங்களைப் புரிந்து கொள்ள முடியவில்லை.

சரித்திரம் போதுமான புள்ளி விவரங்களை அளித்த 19 ஆவது நூற்றாண்டுவரை, இயற்கையின் சமுதாய அமைப்புகளின் பரிணாமம் பற்றிய விஞ்ஞான அறிவுக்கான அடிப்படை வகுக்கப்படவில்லை. மேலும் மனிதன் தனது [illegible] ப்படுவதற்கு [illegible]

வைக்கும் பிரச்சினை மாபெரும் முக்கியத்துவம் வாய்ந்த பிரச்சினை ஆகுமளவுக்கு ஐரோப்பாவில் முதன் முதலில் சமுதாயத்திலுள்ள முதலாளிகள் என்று அறியப்பட்ட வர்க்கத்திற்கும் தொழிலாளிகளுக்கும் இடையே பகைமை ஏற்பட்டது.

அக்காலத்தின் அனுபவமும், சமுதாய சிந்தனையும் முன்வைத்த பிரச்சினைகளுக்குக் காரல் மார்க்சின் போதனை விடை அளித்தது. உலகத்தினுல் மார்க்சியம் என்ற பெயரில் அறியப்படும் இப்போதனை களின் ஆதாரங்கள் ஜெர்மன் தத்துவமும், ஆங்கிலேயர்களின் அரசியல்-பொருளாதாரமும், பிரெஞ்சுக்காரர்களின் கற்பனுவாத சோஷலிசமும் ஆகும். இவ்வாறு கடந்த காலத்திய உலக சமுதாய சிந்தனையின் மதிப்புக்குரிய அனைத்தையும் மார்க்சியம் தன்வயப்படுத்திக் கொண்டது.

ஜெர்மனியின் சிறப்புமிக்க தத்துவத்தின் இரு தலைசிறந்த பிரமுகர்கள் ஜார்ஜ் ஹெகலும், லுத்விக் ஃபயர்பாக்கும் ஆவர். மனித குலத்திற்கு ஹெகல் ஆற்றிய பெருஞ் சேவை அவரது தர்க்கவியலும், வளர்ச்சி பற்றிய விஞ்ஞானமும் ஆகும். எனினும் அவருடைய சித்தாந்தம் குறைவுடையதாகவே இருந்தது; காரணம், அவர் முழு முதல் கருத்துத்தான் வளருகிறது எனவும், இயற்கையோ சமுதாயமோ அல்ல என்றும் நம்பினுர். ஹெகலின் கருத்துப்படி முழுமுதல் கருத்துத் தான் உலகத்தின் அடிப்படையும், இறுதி ஆரம்பமுமாகும். மறுபுறம், இயற்கையின் விளக்கம் இயற்கையினுள்ளேயே இருக்கின்றது என்றும், முழுமுதல் கருத்துப் பற்றிய மாயாவாத, விஞ்ஞான பூர்வமற்ற எண்ணம் கொள்ள வேண்டியதில்லை என்றும் ஃபயர்பாக் வாதாடினுர். எனினும் அவருடைய கருத்துக்களும் குறைபாடுடையவையாய் இருந்தன; காரணம் அவர் வளர்ச்சி பற்றிய ஹெகல் தத்துவத்தின் மாபெரும் முக்கியத்துவத்தைக் கணக்கில் எடுத்துக் கொள்ளத் தவறினுர். எனினும், ஹெகலின் தர்க்கவியலும், ஃபயர்பாக்கின் பொருள்முதல் வாதமும் தம்முள் அறிவார்ந்த விஞ்ஞானக் கருத்துக் களைக் கொண்டிருந்தன; இவை மார்க்சிய தத்துவத்தின் துவக்க முனையாக விளங்கின.

அரசியல் பொருளாதாரத் துறையில் மார்க்சியத்தின் முன்னேடிகள் ஆடம்ஸ்மித்தும், டேவிட் ரிகார்டோவும் ஆவர். உழைப்புத்தான் சமுதாய செல்வத்தின் பிரதான ஆதாரம் என்று காட்டியதன் மூலம், அவர்கள் ஒரு விஞ்ஞானபூர்வ அரசியல் - பொருளாதாரத்திற்கு வழிகோலினர்.

ஹென்ரி செயின்ட் சைமன், சார்லஸ் ஃபோரியர், ராபர்ட் ஓவன் ஆகிய 19 ஆவது நூற்றுண்டின் மாபெரும் கற்பனுவாத சோஷலிச் வாதிகள் முதலாளித்துவ அமைப்பைக் கடுமையாக விமர்சனம் செய்தனர். மேலும் அவர்கள் சுரண்டலற்ற ஒரு லட்சிய பூர்வ சமுதாயத்திற்கான திட்டங்களையும் முன்வைத்தனர். ஆனுல் அவர்கள்

இந்நோக்கத்தை அடைவதற்கான எதார்த்த பூர்வமான வழிகளை காட்டத் தவறினர். ஒரு லட்சிய பூர்வமான சமுதாயத்தைச் சமைப்ப தற்கான வழி சுரண்டலாளர்களுக்குப் போதனை அளித்து வற்புறுத்து வதே என்று இக்கற்பனாவாத சோஷலிஸ்டுகள் அப்பாவித்தனமாக எண்ணினர். எனினும், அவர்களுடைய கருத்துக்கள் விஞ்ஞான சோஷலிச சித்தாந்தம் தோன்றுவதற்கு உதவி புரிந்தது.

ஆனால் காரல் மார்க்சும், அவரது உற்ற நண்பரும், உறுதுணைவரும் ஆன ஃபிரடெரிக் எங்கல்ஸும், தமது முன்னோடிகளின் கருத்துக்களை வெறுமனே முன்னெடுத்துச் செல்லவில்லை. அவர்கள் அவற்றை விமர்சன ரீதியில் மறுபரிசீலனை செய்து ஒரு புதிய சித்தாந்தத்தை உருவாக்கினர்.

மார்க்சியத்தின் மூலவர்கள் சமூக சிந்தனையைப் புரட்சிகரமாக மாற்றினர், அவர்கள் சமூக விஞ்ஞானத்தை கறாரான விஞ்ஞான அடிப்படையில் நிறுவி அதை பொய்யான கருத்தமைப்புகள், மாயக் கற்பனைகள், கற்பனைத் திட்டங்களிலிருந்து விடுவித்தனர். முதல்தடவை யாக, சமூகக் கருத்துக்களின் ஓர் அமைப்பாகிய சித்தாந்தம், விஞ்ஞானத் தையும் வரலாற்றின் முன்னேற்றத்தை ஆளுமை செய்யும் புறநிலை விதி களின் ஆய்வையும் அடிப்படையாகக் கொண்டதாக மாறிற்று.

மார்க்சியத்தின் மூலவர்கள் சமூக விஞ்ஞானத்தை தொழிலாளி வர்க்க இயக்கத்தின் ஒரு சித்தாந்தமாக மாற்றி, அதை ஆன்மீகவாத மேட்டுக் குடியினருக்கு உரித்தான ஆராய்ச்சிக் கூட்டங்களின் தேக்கத் திலிருந்து விடுவித்து, உழைப்பாளி மக்களின் நலன்களுக்காக நடை பெறும் மாபெரும் வர்க்கப் போராட்ட களத்திற்கு இழுத்து வந்தனர்.

மேலும், அவர்கள் தத்துவத்தின் வறட்டுச் சிந்தனைப் போக்கை தவிர்த்தனர்; சித்தாந்தத்திற்கும் நடைமுறைக்கும் இடையேயான இடைவெளியைச் சுருக்கினர், அதன் மூலம் சமுதாயத்தை மாற்று வதற்கான ஒரு சக்தி வாய்ந்த சித்தாந்த ஆயுதத்தை மக்களுக்கு அளித்தனர்.

## மார்க்சியத்தின் பிரதான அங்கப்பகுதிகள்

சமூகத்தை மாற்றுவதற்கு உலகைப்பற்றிய ஓர் எதார்த்தக் கண்ணோட்டம் அவசியம். மார்க்சியத்தில் தத்துவம் ஒரு கேந்திர அம்சம் ஆகும்; காரணம், இது, இயற்கை, சமுதாயம், அறிவு ஆகியவற்றின் வளர்ச்சியை ஆளுமை செய்யும் மிகமிகப் பொதுவான விதிகளைப் பரிசீலனை செய்கிறது.

ஒரு சமூக அமைப்பு மற்றொன்றை ஏன் அகற்றுகிறது என்ப தைப் புரிந்து கொள்வதற்கு அதன் பொது விதிகளை தெரிந்து கொண்

டால் மட்டும் போதாது. பொருளாதார உறவுகள் அல்லது உற்பத்தி உறவுகள் தான் சமூகத்தின் சகல உறவுகளிலும் முதன்மையான முக்கியத் துவம் வாய்ந்தவை என்பது நிரூபிக்கப்பட்டுவிட்டது. எனவே, மார்க் சியத்தின் மற்ருெரு கேந்திரமான அம்சம் அரசியல் பொருளாதாரம் ஆகும்; இது உற்பத்தி உறவுகளின் வளர்ச்சியின் விஞ்ஞானம் ஆகும்.

மார்க்சியத்தின் மூன்ருவது கேந்திரமான அம்சம் விஞ்ஞான சோஷ லிசம். இதர இரண்டு கூறுகளின்—மார்க்சியத்தத்துவம், அரசியல் - பொருளாதாரம் ஆகியவற்றின்—தர்க்க ரீதியான முடிவு என்ற வகை யில், இது முதலாளித்துவம் ஏன் நிச்சயம் அழிந்தே ஆகவேண்டும் என் பதை எடுத்துக் காட்டுகிறது. மனிதன் தனது சகோதர மனிதர்களை எவ்வகையான சுரண்டுதலுக்கும் உட்படுத்துவதிலிருந்து விடுபட்ட சோஷலிச சமுதாயத்தின் தோற்றம், முன்னேற்றம் ஆகியவற்றை ஆளுமை செய்யும் விதிகளையும் இது நிலை நாட்டுகிறது.

இக்கூறுகள் மார்க்சியத்தின் ''மையம்'' அல்லது முக்கியமான அங்கப் பகுதிகள் என்று வருணிக்கப்பட்டுள்ளன என்பதைக் காணலாம். இதற்குக் காரணம் மார்க்சியச் சிந்தனை ஒரு தத்துவம், அரசியல் பொருளாதாரம், சோஷலிசக் கொள்கை ஆகிய வளர்ச்சிக்கு மட்டுமே தன்னைத்தான் சுருக்கிக் கொள்ளவில்லை. அது சமுதாயத்தின் மனித அறிவின் ஒவ்வொரு துறையையும் - வரலாறு, ஒழுக்கவியல், சட்டம், அழகியல் இத்தியாதி - புரட்சிகரப்படுத்தியுள்ளது. கூருகச் சொல்வ தெனில், அறிவின் இக்கிளைகளும் இதர பலகிளைகளும், அவை மார்க்சிய முறைகளை அதாவது, சமூக இயல் நிகழ்வு சம்பந்தமாக ஒரு மார்க்சிய அணுகுமுறையைக் கடைப்பிடித்தபோதுதான் ஒரு புறநிலை பகுப் பாய்வை மெய்யாகவே எட்ட முடிந்தது.

இதன் விளைவாக மார்க்சியமானது, இயற்கையின், சமுதாயத்தின் வளர்ச்சியை ஆளுமை செய்யும் பொது விதிகளையும், சோஷலிசப் புரட்சியின் வெற்றியையும், சோஷலிசம் கம்யூனிசத்தை நிர்மாணிக்கும் வழிகளையும் குறித்த ஓர் இசைவான விஞ்ஞானக் கருத்தோட்டமாக விளங்குகிறது.

மார்க்சியத்தை ஆராயும்போது, இது அனைத்தையும் தழுவிய ஓர் அமைப்பு என்பதையும் இவ்வமைப்பின் அங்கப்பகுதிகள் ஒன்றுடன் ஒன்று பிரிக்க முடியாத வகையில் இணைந்துள்ளன என்பதையும் மனதிற் கொள்ள வேண்டும்.

## இடையருது வளர்ச்சியுறும் ஒரு சித்தாந்தம்

கடந்த கால சிந்தனையாளர்கள் முழுமையான சிந்தாந்தங்களை வளர்க்க முயன்றனர். சகல பிரச்சினைகளுக்கும் இறுதிப் பதிலிறுப்பதே இதன் நோக்கம். ஆனல், எல்லா சந்தர்ப்பங்களுக்கும் பொருந்திய

அத்தகைய சித்தாந்தம் எதுவுமே கிடையாது. எதார்த்தம் எப்போதும் மாறிக் கொண்டேயிருக்கிறது, அறிவின் எல்லைகள் தொடர்ந்து விரிவடைந்து கொண்டே வருகின்றன. ஒரு சித்தாந்தம் புதிய உண்மைகளைக் கணக்கில் எடுத்துக்கொள்ளத் தவறி மக்கிமழுங்கிப் போன வறட்டுத் தத்துவமாக மாறி 'விடுமேயானால், அது எதார்த்தத்திலிருந்து தன்னைத் தானே பிரித்துக் கொள்கிறது. அது பயனற்றதாகவும், பாதகமானதாகவும் கூட ஆகிவிடுகிறது; காரணம், அது வாழ்க்கையைப் பற்றிய உண்மையான சித்திரத்தை இப்போது தருவதில்லை. எனவே சித்தாந்தம் நடைமுறையை அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டும்.

சர்வாம்சமான அல்லது முற்ற முழுமையான சித்தாந்தங்களை உருவாக்கும் முயற்சிகள் தோல்வியுற்றே தீரும், ஆண்டுகள் செல்லச் செல்ல, இத்தகைய சித்தாந்தங்கள் எந்த வர்க்கங்களின் நலன்களைப் பிரதிபலித்தனவோ அந்த வர்க்கங்களோடு கூடவே மறைந்தொழிந்தன. சமூக சிந்தனைக் கருவூலத்தில் நிலைத்து நீடித்த கருத்துக்கள் எதார்த்தத்தை மிகவும் முழுமையாகப் பிரதிபலித்த கருத்துக்கள்தான். இவை நடைமுறையின் தேவைகளைப் பிரதிபலித்த புதிய சித்தாந்தங்களினால் ஏற்கப்பட்டன.

19ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் உலகம் தனது வரலாற்றில் ஒரு புதிய கட்டத்தில் நுழைந்தது, மார்க்சியத்தின் மூலவர்களால் நிரூபிக்கப்பட்டது போல, ஒரு சோஷலிசப் புரட்சி வாய்ப்பு அண்மையில் தோன்றி தவிர்க்க முடியாததாயிற்று. தொழிலாளி வர்க்கத்தை எதிர்நோக்கும் உடனடிக்கடமை புரட்சிகரமான முறைகளின் மூலமாக முதலாளித்துவத்தை வீழ்த்துவது ஆகும். உலகப் புரட்சிகர சக்திகள் பெருமளவு அனுபவத்தைச் சேகரித்துள்ளன. இயற்கை விஞ்ஞானங்களின் வேகமான முன்னேற்றம் புதிய உண்மைகளையும் புதிய கண்டுபிடிப்புகளையும் விஞ்ஞான பூர்வமான முறையில் தொகுத்துக் கூறுவதை அவசியமாக்கின. மார்க்சியத்தை ஆக்கபூர்வமாக வளர்க்கும் அவசியம் எழுந்தது. இந்த மாபெரும் வரலாற்றுப்பணியை விளதீமிர் லெனின் நிறைவேற்றினார்.

மார்க்சியத்தை ஜடமான சித்தாந்தமாகக் கருதிய வறட்டுத் தத்துவவாதிகளுக்கு எதிரான தனது போராட்டத்தில், லெனின், புதிய வரலாற்று சகாப்தத்தின் நடைமுறையையும், இயற்கை விஞ்ஞானங்களின் மாபெரும் கண்டு பிடிப்புகளின் முக்கியத்துவத்தையும் முழுக்க முழுக்கப் பகுப்பாய்வு செய்தார். அவர் புதிய கருத்துக்களின் மூலம் மார்க்சியத்தைச் செழுமைப்படுத்தினார். அவர் மார்க்சிய தத்துவத்தை வளர்த்தார். அவர், முதலாளித்துவத்தின் ஆக உயர்ந்த கட்டம் என்ற வகையில் ஏகாதிபத்தியத்தின் போக்கை ஆளுமை செய்யும் விதிகளை ஆராய்ந்தார்; சோஷலிசப் புரட்சியின் சித்தாந்தத்தையும், சர்வதேசத் தொழிலாளி வர்க்க இயக்கத்தின் போர்த் தந்திரம் நடை

முறை உத்திகளையும், புரட்சிகரக் கட்சி குறித்த போதனையையும் வகுத்தார். ஏற்கெனவே செயல் படுத்தப்பட்டுள்ள சோஷலிச மாற்றங்களின் ஆரம்ப அனுபவத்தைத் தொகுத்தளித்து, சோஷலிசம் கம்யூனிசத்தை நிர்மாணிப்பதற்கான ஒரு சித்தாந்தத்தை வளர்த்தார். அவர் மார்க்சியத்தின் சகல அம்சங்களையும் வளர்த்து அதை ஒரு புதிய கட்டத்திற்கு உயர்த்தினார் என்பது மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்ததாகும். அதனால்தான் நாம் மார்க்சியம் - லெனினியம் பற்றிப் பேசுகிறோம்.

லெனின் மரணமடைந்து அரை நூற்றாண்டு காலம் கடந்து விட்டது: மனிதகுலத்தின் வாழ்க்கையில் அது முதற்கொண்டு மாபெரும் மாறுதல்கள் நிகழ்ந்துள்ளன. சோஷலிசத்திற்கும் முதலாளித்துவத்திற்கும் இடையேயான சக்திகளின் சமநிலையில் பெரும் மாறுதல் ஏற்பட்டுள்ளது. காலனி ஒடுக்கு முறையிலிருந்து விடுதலை பெற்ற புதிய நாடுகள் உலக அரங்கில் தோன்றியுள்ளன. மார்க்சிய-லெனினியத்தின்—உலகின் முன்னுள்ள வாய்ப்புகள் மீது ஒளி வீசுகின்ற மனித சமுதாயத்தை ஆளுமை செய்கின்ற விதிகள் பற்றிய இம்மாபெரும் விஞ்ஞானத்தின்—மென்மேல் வளர்ச்சியை இப்புதிய நிலைமைகள் கோருகின்றன. இன்று உலகெங்கணும் உள்ள கம்யூனிஸ்டு, தொழிலாளர் கட்சிகளின் நடைமுறை, சித்தாந்த நடவடிக்கைகள் மார்க்சியம்-லெனினியத்தைச் செழுமைப் படுத்துகின்றன.

முதலாவது அத்தியாயம்

# சமுதாயம் எவ்வாறு வளர்ச்சி அடைகிறது?

மனித குல வரலாறு சிக்கலானதாகவும், பன்முகத் தன்மை வாய்ந்ததாகவும் உள்ளது. எண்ணற்ற புரட்சிகள், ஆட்சிக் கவிழ்ப்புகள், போர்கள், நலன்களின் மோதல்கள், கருத்துக்களின் மோதல்கள் நிகழ்ந்துள்ளன. இந்த கொந்தளிப்பு மிக்க உண்மைகள், சம்பவங்களிலிருந்து—இவை ஒவ்வொன்றுக்கும் குறிப்பிட்ட அம்சங்கள், அதற்கென மிகைபாடுகளும் உள்ளன—மனிதன் ஏதாவது பொருளைக் காண முடியுமா? இந்த நிகழ்ச்சிகளை நிர்ணயம் செய்யும் அடிப்படை விதிகள் உள்ளனவா? அல்லது இவை வெறும் தற்செயல் நிகழ்ச்சிகள்தானா?

சமுதாயத்தின் வளர்ச்சியை ஆளுமை செய்யும் விதிகள் பற்றிய மார்க்சிய சித்தாந்தம் இக்கேள்விகளுக்கு விடையளிக்கிறது. இந்த சித்தாந்தத்தின் பெயர் வரலாற்றியல் பொருள்முதல் வாதம். இந்த சித்தாந்தத்தின் உதவியுடன் வரலாற்றின் உள்ளார்ந்த எதார்த்த தர்க்க நியதியை நிர்ணயம் செய்து, நுட்பமான சமூக செல்வாக்குகளின் பாணியிலிருந்து அடிப்படையிலேயே மிக மிக முக்கியத்துவம் வாய்ந்ததும், அவசியமானதும் ஆனவற்றைப் பிரித்தெடுப்பது சாத்தியமே.

## 1. வரலாறு பற்றிய பொருள் முதல் வாதக் கண்ணோட்டம்

### சமுதாயத்தின் வாழ்க்கையும் உணர்வும்

சமுதாயத்தின் வரலாறு இயற்கையின் வரலாற்றிலிருந்து அடிப்படையில் வேறுபடுகிறது. இயற்கையில் போத பூர்வமான சக்திகள் செயல் படவில்லை, அது தானகவே வளர்ச்சி அடைகிறது. சமுதாயமோ முற்றிலும் மாறுபட்டதாயிருக்கின்றது. செயல்படும், சுயவிருப்பம் உள்ள போதமடைந்த ஜீவன்களைக் கொண்டது இது. அவர்கள் நோக்கங்களை முன்வைத்து அவற்றை அடைவதற்காகப் பாடுபடுகின்றனர்.

போத பூர்வமான மனிதன்தான், அவனுடைய கருத்துக்கள் அல்லது நோக்கங்கள்தான் சமூகத்தின் வாழ்க்கையை நிர்ணயிப்பதாகக் கருதப்படலாம். ஆனல், உண்மையில், இது இவ்வாறு அல்ல. உயிர் வாழ வேண்டுமானல் மனிதனுக்கு உணவு, உடை, உறைவிடம் இத்தியாதி அவசியம். அவன் விரும்பினாலும் சரி, விரும்பாவிட்டாலும் சரி, இத்தேவைகள் அவனை இயற்கையுடன் தொடர்பு கொள்ளும் படியும், இதர மக்களுடன் தகவல் தொடர்பு வைத்துக்கொள்ளும்

படியும் கட்டாயப்படுத்துகின்றன. அவன் நிலத்தை உழுகிறான்; வீட்டைக் கட்டுகிறான்; ஆடைகளை நெய்கிறான்; கருவிகளைச் செய்கிறான்; இந்த உழைப்பினால் கிடைக்கும் பண்டங்களை இதர பண்டங்களுக்கு மாற்றாக பரிமாற்றம் செய்து கொள்கிறான். இதுவே மக்களின் பொருளாயத வாழ்க்கை அல்லது அவர்களின் சமுதாய வாழ்வு ஆகும்; இதற்கென எதார்த்த விதிகள் உள்ளன; இது சமுதாயத்தில் நடப்பிலிருக்கும் கருத்துக்களை அல்லது சித்தாந்தங்களைச் சார்ந்திருக்கவில்லை.

சமுதாய ஜீவி என்ற முறையில் மனிதனுடைய வாழ்க்கையின் பிரதான அம்சம் உழைப்பு; மனிதன் உயிர் வாழ்வதற்குத் தேவையான அனைத்தையும் இது உருவாக்குவதே இதற்குக் காரணம். மக்கள் உயிர் வாழ்வதற்கான சாத்தியப்பாட்டை உண்டுபண்ணும் அதே வேளையில், உழைப்பு அவற்றின் பரிணமத்தின் மீதும் படிப்படியான செல்வாக்குச் செலுத்துகிறது. மனிதனுடைய மூளை வளர்ச்சி மட்டுமின்றி அவனுடைய கைகளும்கூட ஒருவகையில் உழைப்பின் ஒரு விளை பொருளே. பல்லாயிரக்கணக்கான ஆண்டு வேலை, அவற்றை மிக மிக நுட்பமான செயற்பாடுகளை நிறைவேற்றும் வல்லமை படைத்த மிகு திறமையான உறுப்புக்களாக மாற்றி விட்டன.

மக்களின் பொருளாயதத் தேவைகளை முதலில் பூர்த்தி செய்திரா விட்டால், அவர்களால் விஞ்ஞானம், அரசியல், அல்லது கலைகளில் ஈடுபடமுடியாது. இதன் பொருள் என்னவென்றால் உயிர் வாழ்வதற்கு அவசியமான நடவடிக்கைகள் (சமுதாய வாழ்க்கை) மனிதனின் மூளை நடவடிக்கைகளை (உணர்வை) நிர்ணயிக்கின்றன.

அப்படியாயின் ஒரே சமுதாயத்தில் வாழ்க்கை குறித்தும், பல்வேறு குழுவைச் சார்ந்த மக்களின் பாத்திரம் குறித்தும், எதிர் காலம் குறித்தும் பல்வேறு கருத்துக்கள் நிலவக் காரணம் என்ன என்னும் கேள்வி எழுகிறது. உதாரணமாக, முதலாளித்துவத்தின் கீழ் முதலாளித்துவ சித்தாந்தம், சோஷலிச சித்தாந்தம் ஆகிய இரண்டுமே உள்ளன. முந்தியது முதலாளித்துவ அமைப்பைப் பாதுகாக்கிறது. அது முதலாளித்துவ வர்க்கத்தையும் அதன் நலன்களையும் பிரதிபலிக்கிறது. முதலாளிகள் தொழிலாளிகளைச் சுரண்டுகின்றனர்; அதிகாரத்தைப் பிரயோகிக்கின்றனர்; வாழ்க்கையின் சகல அனுகூலங்களையும் அனுபவிக்கின்றனர். முதலாளித்துவ நலன்களைப் பிரதிபலிக்கும் சித்தாந்தங்கள் முதலாளித்துவம்தான் மிக மிக முழுமையான, நியாயமான சமுதாய அமைப்பு என்று பறைசாற்றுகின்றன.

மாறாக, பாட்டாளி வர்க்கமும் முதலாளிகளால் சுரண்டப்படும் இதர உழைப்பாளி மக்களின் பகுதியினரும் சோஷலிசக் கருத்துக்களை ஒத்துக்கொள்கின்றனர். பிறருடைய உழைப்பைச் சுரண்டி வாழுபவர்களின் ஆட்சியிலிருந்து விடுதலை பெறுவதற்கான கருத்துக்கள் இவை. சோஷலிச அறிஞர்கள் முதலாளித்துவத்தையும் அதன் தோற்றத்தையும் பற்றி

ஆராய்வதும் அதை ஒழித்துக்கட்டுவதற்கான வழிகளைக் காணுவதும் தொழிலாளர் நலன்களுக்கு உகந்ததாகும். சரியான தருணத்தைப் பொருத்தும் ஒவ்வொரு நாட்டின் விசேஷ நிலைமையைப் பொருத்தும், சோஷலிசக் கட்சிகள் தான் புரட்சிகர நடவடிக்கைக்கான வேலைத் திட்டங்களை வகுத்து, முதலாளித்துவத்தை அதிகார பீடத்திலிருந்து கீழே இறக்கி, சோஷலிசத்திற்குச் செல்வதற்கான வழிமுறைகளை நிர்ண யிக்கின்றன.

இதன் விளைவாக, சமுதாயத்தில் மக்களிடையேயான உறவுகள் பற்றிய கருத்துக்கள் அல்லது சித்தாந்தங்கள் ஒரு குறிப்பிட்ட குழுவின் நடப்பு நிலையையும், அதன் நலன்களையும் பிரதிபலிக்கின்றன. கருத் துக்கள் பொருளாதாரத்துறையிலும், சமுதாய வாழ்க்கைத் துறை யிலும் வேர் கொண்டு இருக்கின்றன. வளர்ச்சியின் உந்து சக்தியை ஸ்தூலமற்ற சிந்தனையில் அல்லாது இந்தத் துறைகளிலும் பொருளாயத உற்பத்தியை ஒழுங்கமைப்பதிலும்தான் காணவேண்டும்.

## உற்பத்தி சக்திகளும் உற்பத்தி உறவுகளும்

முதலாவதாக, உற்பத்தி என்றால் என்ன என்று உறுதிப்படுத்திக் கொள்வோம். ஏதாவது ஒரு பொருளை உற்பத்தி செய்வதற்கு, அப்பொருளை உற்பத்தி செய்வதற்கான சாதனங்கள் தேவை. உதாரண மாக, இவை, மரம், தாது இத்தியாதியாக, வேறு வகையில் சொல் வதானால் மனிதன் வேலை செய்வதற்கான சாமான் அதாவது **உழைப்புப் பண்டம்** தேவை. ஆனால் வெறும் கைகளினாலேயே வேலை செய்வதற் கான வாய்ப்புக்கள் ஒரு வரம்புக்கு உட்பட்டவையே. மிக மிக எளிய வேலையைச் செய்வதற்குக்கூட மனிதன் வழக்கமாக ஒரு சுத்தியலையோ அல்லது மண்வெட்டியையோ எடுத்துச் செல்கிறான். நவீன தொழிற் துறை உற்பத்திக்கு சகல வகையான இயந்திரக் கருவிகளும், சாதனங் களும், துணைக்கலங்களும் தேவை. உழைப்புப் பண்டத்தின் மீது மக்கள் உழைப்பை ஈடுபடுத்தும் சாதனங்களுக்கு **உழைப்புக் கருவிகள்** என்று பெயர். அவற்றின் முக்கியத்துவத்தை வலியுறுத்தியபோது மார்க்ஸ், அவற்றை எலும்புகளுக்கும் தசைகளுக்கும் ஒப்பிட்டார். தசைகளின்றி எவ்வாறு மனிதன் வாழ முடியாதோ, அதேபோன்று இவை இன்றி உற்பத்தி நடைபெற முடியாது.

உழைப்புக் கருவிகள் மட்டுமின்றி, எந்த ஒரு பொருளையும் உற்பத்தி செய்வதற்கு, மனிதனுக்கு வேலை செய்வதற்கான இடமும், சேம இருப்புக் கூடங்களும், விசை ஆதாரங்களும், சாலைகள், பாசனக்கால் வாய்கள் இன்னபிறவும் தேவை. பொருளாதாரவியலாளர்கள் இவற்றை உள் கட்டமைப்பு என்று வருணிக்கின்றனர். உழைப்புக் கருவிகளுடன் சேர்ந்து இவற்றுக்கு **உழைப்புச் சாதனங்கள்** என்று பெயர். உழைப்புப் பண்டமும் (உழைப்பு ஈடுபடுத்தப்படும் பொருள்) உழைப்புச்

சாதனங்களும் (உழைப்பதற்குப் பயன்படுத்தப்படும் சாதனங்கள்) சேர்ந்து உற்பத்தி சாதனங்கள் எனப்படும். இவை உற்பத்திக்கு இன்றியமையாதவை.

இறுதியாக, உற்பத்தி மக்களின் உழைப்பையும் உட்படுத்துகிறது. மனிதன் இல்லாவிட்டால். மிகச் சிறந்த இயந்திரங்களும் பயனற்றவையே. உற்பத்தியாளர்கள், உழைப்பாளி மக்கள் தான், உற்பத்தியில் பிரதான அம்சம்.

சமூகத்தின் உற்பத்தி சாதனங்களும், கூடவே அவற்றை இயக்குவிப்பதற்கான அறிவையும், அனுபவத்தையும் பெற்றுள்ள மக்களும் சேர்ந்ததுதான் அதன் உற்பத்தி சக்திகள் எனப்படுபவை. அவை, சமுதாயத்திற்கும் இயற்கைக்கும் இடையே உள்ள பொருளாயத உறவுகளைப் பிரதிபலிக்கின்றன. மனிதன் இயற்கை மீது ஆதிக்கம் செலுத்தும் அளவை அவற்றின் வளர்ச்சி மட்டம் காட்டுகின்றது.

மேலே கூறப்பட்ட வரையறுப்புகளை கீழே கொடுக்கப்பட்டுள்ளபடி சுலபமாக தொகுத்துக் கூறமுடியும் :

உழைப்புக் கருவி + உள் கட்டமைப்பு = உழைப்பு சாதனங்கள்
உழைப்புப் பண்டம் + உழைப்பு சாதனம் = உற்பத்தி சாதனங்கள்
உற்பத்தி சாதனங்கள் + உற்பத்தியாளர் = உற்பத்தி சக்திகள்

உற்பத்தி சக்திகளின் மட்டத்தை மதிப்பீடு செய்வதற்கான பிரதான அளவுகோல் உழைப்புக் கருவிகளே. அவற்றுக்கு என ஒரு வரலாறே உள்ளது—அவை மரக் கருவிகள், கற்கருவிகள் நிலையிலிருந்து இன்றுள்ள மிக மிக நுட்பமான தானியங்கி ஏற்பாடுகள் நிலைக்கு வளர்ந்துள்ளன. உழைப்புக் கருவிகள் எவ்வளவு சிறந்தவையாய் இருக்கின்றனவோ அந்த அளவு உற்பத்தியின் பரிமாணம் அதிகரிக்கும். கற்கோடாலியைக் கொண்டு மனிதன் ஒரு மரத்தை கீழே விழச் செய்வதற்கு ஒருநாள் முழுவதும் பிடித்தது. ஆனால் தற்போது ஒரு இயந்திர ரம்பம் ஒரு சில நிமிடங்களுக்குள் இவ்வேலையைச் செய்து முடித்து விடுகிறது. ஒரு பெரும் அகழ்வு இயந்திரம், கை மண்வெட்டியுடைய ஆயிரம் பேர் ஒரு வேலைநாளில் எவ்வளவு மண்ணை அப்புறப்படுத்துகின்றனரோ அவ்வளவு மண்ணை அப்புறப்படுத்துகிறது.

உற்பத்தி சக்திகளின் மட்டத்திற்கு மற்றொரு அளவுகோல் அதற்குப் பயன்படுத்தப்படும் விசையாகும். ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக பிரதான விசை ஆதாரம் மனிதனின் தசைகளாகவே இருந்தன. ஆனால் இப்போது பெரும் மின்சார உற்பத்தி நிலையங்கள்தான் விசை ஆதாரங்களாக உள்ளன. அவை

மனிதனின் தசைகளின் விசையை விடக் கோடிக்கணக்கான மடங்கு அதிக ஆற்றல் பெற்றவை.

உற்பத்தி சக்திகளின் மட்டத்தை நிர்ணயிக்கும் மற்றொரு முக்கிய அம்சம் உற்பத்தி அனுபவம், வழிவகை அறிவு, திறமைகள். தற்கால உற்பத்தி சக்திகள், உயர் முன்னேற்றமான உற்பத்திக் கருவிகளை தனிச் சிறப்பாகக் காட்டுவதோடு மட்டுமின்றி திறமையையும், உயர் கல்வித் தரங்களையும், தொழிலாளர் தேர்ச்சிகளையும் சிறப்பாகக் காட்டுகின்றன. நமது தொழில்நுட்பவியல் புரட்சி சகாப்தத்தில், விஞ்ஞானம், இஞ்சினியரிங் துறைகளின் முன்னேற்றங்களைப் பயன்படுத்தாமல் உற்பத்தியைப் பற்றி நினைத்துப் பார்க்கவும் முடியாது.

எந்த ஒரு மனிதனும் தனது வாழ்க்கைக்குத் தேவையான அனைத்துப் பொருட்களையும் தானே உற்பத்தி செய்து கொள்ள முடியாது. தனது இன்றியமையாத தேவைகளைத் தனது சொந்த உழைப்பின் மூலம் பூர்த்தி செய்து கொள்ள விரும்பும் ஒரு துறவி கூட சமூகத்தினால் உண்டு பண்ணப்பட்டு அபிவிருத்தி செய்யப்பட்டு பல தலைமுறைகளாகச் சேகரிக்கப்பட்ட அனுபவத்தைப் பயன்படுத்தியுள்ள கருவிகளைத்தான் பயன்படுத்த வேண்டியிருக்கும். உழைப்பு சாதனம், உற்பத்தி அனுபவம், உழைப்புப் பண்டங்கள் ஆகிய இவை எல்லாமே மக்களின் கூட்டு முயற்சிகளின் விளைவே. மக்கள் கூட்டாக வேலை செய்யும்போது அவர்கள் ஒருவர் மற்றவருடன் நிர்ப்பந்தமாக உற்பத்தி உறவுகளைக் கொள்ள வேண்டியதிருக்கின்றது.

இவ்வுற்பத்தி உறவுகள் யாவை? கடந்த காலத்தில் குல மரபுக் குழு உறுப்பினர்கள் சமூக உற்பத்தியில் சம அந்தஸ்து வகித்தனர். வாழ்க்கை சாதனங்களைப் பெறுவதற்கு அவர்கள் ஒன்றிணைந்து வேலை செய்தார்கள், ஒருவருக்கொருவர் உதவியும் ஆதரவும் அளித்தனர்; தாம் உற்பத்தி செய்தவற்றை அல்லது பிடித்தவற்றை அவர்கள் கூட்டாகப் பயனீடு செய்தனர். காரணம், உற்பத்தி சாதனங்கள் சமுதாயத்தின் சகல உறுப்பினர்களுக்கும் சொந்தமாயிருந்தன.

அடிமை - உடமை சமுதாயம் தோன்றியபோது, மக்களிடையே உறவுகள் முற்றிலும் வேறுபாடடைந்தன. சில மனிதர்கள் இதரர்களை விலங்குகளைப் போல நடத்தினர். நிலப்பிரபுத்துவத்தின் கீழ் நிலவுடமையாளர் அனைத்து நிலங்களையும் தமது உடமையாக்கி வைத்திருந்தனர்; முதலாளித்துவத்தின் கீழ் உற்பத்தி சாதனங்கள் தனி உடமையாயின; அதே சமயத்தில் கூலி உழைப்பாளிகள் வேலை செய்து வந்தனர். ஒவ்வொரு கட்டத்திலும், உற்பத்தி அமைப்பில் வெவ்வேறு குழுவினர் வெவ்வேறு பதவிகளை வகிக்கின்றனர். சிலர் பலரைச் சுரண்டுவது பொது விதி. விரல் விட்டு எண்ணக்கூடிய ஒரு சில சுரண்டலாளர்கள் இதரர்களின் உழைப்பினால் உற்பத்தி செய்யப்பட்ட பெரும்பகுதி

பண்டங்களை அபகரித்துக் கொள்கின்றனர்; அதே சமயத்தில் வெகு ஜனங்கள் ஒடுக்கப்பட்டு வறுமையையும், இன்னல்களையும் அனுபவிக்கின்றனர். இது நடப்பதற்குக் காரணம், சுரண்டலை அடிப்படையாகக் கொண்ட ஒரு சமுதாயத்தில் விரல் விட்டு எண்ணக்கூடிய ஒரு சிறு பான்மையினர் உற்பத்தி சாதனங்கள் அனைத்தையும் தமது உடமையாக்கி வைத்திருக்கின்றனர்.

சோஷலிச சமுதாயத்தின் வளர்ச்சியைத் தொடர்ந்து உற்பத்தி உறவுகளின் பாணி மீண்டும் மாறுதலடைகிறது. அவை, வேலை ஒத்துழைப்பு உறவுகளாக மாறுகின்றன; பொதுப் பண்டம், தரப்பட்ட உழைப்பின் அளவுக்கு ஏற்ப வினியோகிக்கப்படுகிறது. சோஷலிசத்தின் கீழ் பிரதான உற்பத்தி சாதனங்களை சமுதாயம் முழுவதுமே உடமையாகக் கொண்டிருப்பது இதன் காரணமாகும்.

எனவே, உற்பத்தியில் உறவுகளின் தன்மையைத் தெளிவாக நிர்ணயிப்பதற்கு, உற்பத்தி சாதனம் யாருடைய உடமையாயிருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்வது அவசியம். உற்பத்தி உறவுகள் என்றால் முதலாவதாகவும் முதன்மையாகவும் உடமை உறவுகள் என்று பொருள்.

> பொருளாயத அனுகூலங்களைப் பெறுவதற்கான ஒரு சாதனம் என்ற வகையில் ஏதாவது ஒரு வகையான உடமை வடிவம் இன்றி எவ்வித உற்பத்தியும் நிலவ முடியாது. பொருட்கள் மீதான மனிதனின் ஆதிக்கத்தை உடமை பிரதிபலிக்கின்றது என்று சில சமயங்களில் வாதிக்கப்படுகிறது. எனினும், உண்மையில் ஒரு பொருள், உற்பத்தியின் போக்கில் மக்கள் ஒருவர் மற்றவருடன் சமுதாய உறவுகள் கொள்ளும் போதுதான் உடமைப் பொருளாக மாறுகிறது. உடமையை மொழிகளுடன் ஒப்பிடலாம். ஒரு மனிதன் தனியாக இருப்பானேயாகில் அவனுக்கு மொழி தேவையில்லை. அதே போன்று மக்களிடையேயான சமூக உறவுகளுக்கு அப்பால் உடமை என்பது கிடையாது.

உற்பத்தி சாதனங்களின் தனி நபர் உடமை சுரண்டல் உறவுகளில் முடிவுறும் அதே வேளையில், அவற்றின் பொதுவுடமை கூட்டுப்பணி உறவுகளுக்கு வழி செய்கிறது. இவ்வுடமையின் வடிவங்கள் உற்பத்தியில் சமூகக் குழுக்களின் நிலை, உழைப்புப் பண்டங்கள் வினியோகிக்கப்படும் முறை ஆகிய இரண்டையும் நிர்ணயிக்கின்றன. உற்பத்தி சக்திகளும் உற்பத்தி உறவுகளும் எவ்வாறு செயலெதிர் செயல்படுகின்றன என்பது முக்கியத்துவம் வாய்ந்ததாகும்.

## உற்பத்தி சக்திகளின் தன்மைக்கு ஏற்றவாறு உற்பத்தி உறவுகள் இருப்பது பற்றிய விதி

உற்பத்தி நின்று விட்டால் மனித சமுதாயம் தனது சேமிப்புகள் அனைத்தையும் பயன்படுத்திய பிறகு அழிந்து விடும். ஆனால் உற்பத்தி ஒருபோதும் நிற்பதில்லை. அது இடையறாது காப்பாற்றி வைக்கப்பட்டு அபிவிருத்தி செய்யப்படுகிறது. உற்பத்தி சக்திகள், உற்பத்தி உறவுகள் ஆகிய இரண்டும் காலம் செல்லச் செல்ல மாறுதலை அடைகின்றன.

முதன் முதலாகக் கண்டுபிடிக்கப்பட்ட கருவிகளில் ஒன்றாகிய கற்கோடாலி தவிர வேறு ஒரு கருவியும் மக்களிடம் இல்லாதபோது, அவர்கள் எங்கெல்லாம் வசித்தார்களோ அங்கெல்லாம் தமது குறைந்தபட்சத் தேவைகளைப் பூர்த்தி செய்ய முடிந்தது; அவற்றையும் கூட பெரும் கஷ்டத்துடன்தான். இந்தக் குறைந்தபட்சத் தேவைகளையும் கூட அவர்கள் கூட்டு முறையில் வேலை செய்ய முடிந்ததால்தான் சாதிக்க முடிந்தது. சுரண்டல் என்பது சாத்தியமற்றதாயிருந்தது; ஏனெனில் ஒவ்வொரு உறுப்பினரும் வெகு அத்தியாவசியமான பண்டங்களை விட அதிகமாக உற்பத்தி செய்ய முடியவில்லை. குல மரபு சமுதாயத்தில் கூட்டு வேலை முறை மூலமாகத்தான் வாழமுடிந்தது; அதாவது உற்பத்தி உறவுகள் உற்பத்தி சக்திகளின் மட்டத்திற்கு ஏற்றவாறு இருந்தன.

எனினும், காலம் செல்லச் செல்ல, உற்பத்திக் கருவிகள் வளர்க்கப்பட்டன; மக்களும் வெவ்வேறு இயற்கை நிலைமைகளில் வேலை செய்யக் கற்றுக் கொண்டனர், சமூகத்தில் உழைப்புப் பிரிவினை தோன்றிற்று. பயிர் சாகுபடி செய்வதுடன், மனிதன், கால்நடைகளை வளர்ப்பதிலும் ஈடுபட்டான்; கைத்தொழில்களும் செய்ய ஆரம்பித்தான். உழைப்புப் பிரிவினை தோன்றியதால்,இது பண்டங்களின் பரிவர்த்தனைக்குத் தவிர்க்க முடியாத வகையில் இட்டுச் சென்றது. பயிர் சாகுபடி செய்பவனுக்கு கால்நடைப் பண்டங்கள் தேவைப்பட்டன; அதே சமயத்தில், கால்நடை வளர்ப்பவர்களுக்கு தானியம் தேவைப்பட்டது. ஒவ்வொரு சாராரும் பரிமாற்றத்தின் மூலமாக மட்டுமே தமது தேவைகளைப் பூர்த்தி செய்ய முடிந்தது. இவ்வாறு குலமரபு சமுதாயத்தில், உற்பத்தி உறவுகள் அதிக வளர்ச்சி பெற்ற உற்பத்தி சக்திகளுக்கு ஏற்றவாறு இருக்கவில்லை; காரணம், அவை அப்போது நிலவிய உழைப்புப் பிரிவினை, பரிமாற்றத்திற்கு முரண்பட்டவையாய் மாறி விட்டன.

உற்பத்தி தொடர்ந்து வளர்ச்சி அடைய அடைய இவ்வுறவுகள் ஒழிந்தாக வேண்டிய நிலைமை ஏற்பட்டது. உற்பத்திக்

கருவிகள் அபிவிருத்தி, அடைவதோடு கூடவே, பண்டங்களின் பரிமாணம் வெகுவாக அதிகரித்தது. சமுதாயம் முழுவதும் அவற்றின் உற்பத்தியில் ஈடுபடத் தேவையில்லை. காரணம், பல குடும்பங்களே இவற்றை நிறைவேற்றிவிட முடியும். படிப்படியாக சில குடும்பங்கள் நிலத்தின் மீதான—இந்த அடிப்படை உற்பத்தி சாதனத்தின் மீதான—ஆதிக்கத்தை நிலைநாட்டிக் கொண்டன. அப்போது தான் தனிநபர் சொத்துடைமையும், பொருளாதார ஏற்றத்தாழ்வும் தோன்றின. குலமரபு சமுதாயத் தலைவர்களும், முதியவர்களும் செல்வந்தர்களாவதற்குத் தமது பதவிகளைப் பயன்படுத்திக் கொண்டனர். இப்புதிய உழைப்பு சாதனங்கள் ஒரு தொழிலாளி தனது வாழ்க்கைக்குத் தேவையானவற்றை விட அதிகமான பண்டங்களை உற்பத்தி செய்வதற்கு வசதி செய்தன; இது, ஒரு மனிதன் மற்றொருவனை சுரண்டுவதற்கான வாய்ப்பை உண்டு பண்ணிற்று. செல்வம் படைத்தவர்கள் ஏழைகளை அடிமைப் படுத்தினர். போர்க்கைதிகள் அடிமைகளாக மாற்றப் பட்டனர். இவ்வாறுதான் பூர்வீக குலமரபு சமுதாயம் ஒழிந்து ஓர் அடிமை. உடமை - சமுதாயம் தோன்றிற்று.

இப்புதிய சமுதாயத்தில் உற்பத்தி சாதனங்கள் அடிமை உடமையாளர்களின் சொத்தாக விளங்கின. அவர்கள் தொழிலாளியை, அடிமையை தமது உடமையாக்கி வைத்திருந்தனர்; உண்மையில், அடிமை, உழைப்புக் கருவியின் ஒரு அங்கப் பகுதியாக விளங்கினான். ஏராளமான எண்ணிக்கையுள்ள அடிமைகளை ஈவு இரக்கமின்றி சுரண்டுவதன் மூலம், பொருளாயத, கலாசார வளர்ச்சி ஏற்பட்டது. உடலுழைப்புத் தொழில்கள் மூளை உழைப்பு தொழில்களிலிருந்து பிரிக்கப் பட்டன. அறிஞர்கள், கவிஞர்கள், சிற்பிகள், தத்துவ வியலாளர்கள் உடலுழைப்பிலிருந்து விடுவிக்கப்பட்டு விஞ்ஞான, கலாசார நடவடிக்கைகளில் தம்மைத்தாமே ஈடு படுத்திக் கொண்டனர்.

இதற்கிடையில் உற்பத்தி சக்திகள் தொடர்ந்து அபிவிருத்தி அடைந்தன. பயிர்சாகுபடியும், கால்நடை வளர்ப்பும் அதிகத் தேர்ச்சி பெற்றன. உலோகங்கள், உலோகக் கருவிகள் உற்பத்தியில் மாபெரும் முன்னேற்றங்கள் நிகழ்ந்தன. கைவினைஞர்கள் தமது திறமைகளை அதிகரித்தனர். இந்தச் சூழ்நிலைமைகளில் அடிமை-உடமை சமுதாயத்தின் உற்பத்தி உறவுகள் உற்பத்தி சக்திகளை மென்மேலும் தடைசெய்யத் தொடங்கின. அடிமைக்கு தனது வேலையில் அக்கறை இருக்கவில்லை. மேற்பார்வையாளனின் சவுக்கடிக்குப் பயந்துதான் அவன் உழைத்தான். அவனுடைய திறமை

வெகு குறைவாயிருந்தது. அடிமை சமுதாயம் படிப்படியாக நிலப்பிரபுத்துவத்திற்கு இடம் கொடுத்தது.

நிலப்பிரபுத்துவ சமுதாயத்தில், பிரதான உற்பத்தி சாதனமாகிய நிலம் நிலப்பிரபுக்களின் உடமையாக இருந்தது. தொழிலாளிகள் அல்லது விவசாயிகள் கைக்கருவிகளை மட்டுமே உடமையாக வைத்திருந்தனர். அவர்களிடம் தமக்கென சொந்தமாக நிலமில்லாத காரணத்தால், நிலப்பிரபுக்கள் இந்த நிலைமையைப் பயன்படுத்திக் கொண்டு அவர்களைப் பண்ணை அடிமைகளாக மாற்றி, அவர்களை நிலப்பிரபுக்களுக்காக வேலை செய்யும்படி நிர்ப்பந்தித்தனர். நிலப்பிரபுக்கள் அவர்களுக்கு சிறு துண்டு நிலங்களை அளித்துவிட்டு, அவற்றின் அறுவடையில் ஒரு பகுதியை பண்டவகை குத்தகையாக அபகரித்துச் சென்றதுடன், அவர்களைத் தமது எஸ்டேட்டுகளில் வேலை செய்யும்படி நிர்ப்பந்தித்தினர்; இந்த உழைப்புக்கு உழைப்பு மூலமான குத்தகை என்று பெயர்.

முதலில் இந்தப் புதிய உற்பத்தி உறவுகள் உற்பத்தி சக்திகளின் மட்டத்திற்கு ஏற்றவாறு இருந்தன; மேலும் ஓரளவு வளர்ச்சிக்கும் வாய்ப்பளித்தன. அறுவடையில் ஒரு பகுதி தனக்கே உரியதாயிருந்ததால், பண்ணை அடிமைக்கு தனது உழைப்பின் பலன்களில் ஓரளவு அக்கறை இருந்தது. எனவே அவன் அதிக ஆர்வத்துடனும், திறமையாகவும் உழைத்தான்; நிலத்தை அதிக கவனத்துடன் பேணிக்காத்தான்; மகசூலை அதிகரிப்பதற்காக உரங்களைப் பயன்படுத்தினான்.

எனினும், காலப்போக்கில் புதிய உற்பத்தி சக்திகள் தோன்றின. நகரங்களும், கைத்தொழில்களும் அதிக வளர்ச்சி அடைந்தன. ஆரம்பத்தில், பெரும்பாலான மக்கள் விவசாயத்தில் ஈடுபட்டிருந்தனர். உழைக்கும் கருவிகள், வீட்டு உபயோகப் பொருட்கள், துணி உட்பட தமக்குத் தேவையான அனைத்தையும் அவர்களே உற்பத்தி செய்து கொண்டனர். ஆனால் படிப்படியாக உற்பத்தியின் பல்வேறு வகைகளில் மக்கள் தனித்தேர்ச்சி பெறத் தொடங்கினர். பரிமாற்றமும் தொடர்ந்து பெருகிற்று. தேசியச் சந்தைகள் தோன்றின; பண்ட பண உறவுகள் நிலப்பிரபுத்துவ சமுதாயத்தின், அடிப்படையையே ஆட்டங்காணச் செய்தன; இதற்கிடையில், இன்னும் சிறிது காலம் சென்ற பிறகு, ஒரு சிலரின் கைத்தொழில்கள் ஒரு கூட்டு வேலை முறையாக மாறின. எஜமானர்கள் பிறருடைய உதவியை நாடி இயந்திரங்களைப் பயன்படுத்தத்துவங்கினர். இதன் காரணமாக தொழிற்சாலைகள் எல்லா இடங்களிலும் தோன்றத் துவங்கின.

பண்ணை அடிமைத்தனத்திலிருந்து விடுபட்ட தொழிலாளிகள் இயந்திரங்களுக்குத் தேவைப்பட்டனர். சமுதாய முன்னேற்றத்திற்கு நிலப்பிரபுத்துவம் ஒரு தடைக்கல்லாக விளங்கிற்று; எனவே அது முதலாளித்துவத்திற்கு இடம் விட்டு விட்டு அரங்கத்திலிருந்து மறைய வேண்டிய நிலைமை ஏற்பட்டது.

முதலாளித்துவ சமுதாயத்தில் உற்பத்தி சாதனங்கள் முதலாளிகளின் உடைமையாக விளங்கின. தொழிலாளிகள் தமது உழைப்பின் பலன்களை அனுபவிக்க முடியாது; அவர்கள் தமது உழைப்பு சக்தியை முதலாளிகளுக்கு விற்கும்படி கட்டாயப் படுத்தப்பட்டனர்.

முதலாளித்துவ உற்பத்தி உறவுகள் உற்பத்தி சக்திகளின் வளர்ச்சிக்கு அமோகமான வாய்ப்புக்களை நல்கியுள்ளன. முதலாளித்துவத்தின் கீழ் தொழில் நுட்பவியல் முன்னேற்றம் முன்னெப்போதும் கண்டிராத அளவில் அதிகரித்தது. உற்பத்தி சக்திகளை இவ்வளவு உயர்வேகத்தில் வளர்ச்சி அடையச் செய்யும்போது, முதலாளித்துவம் தனக்குத்தானே குழி தோண்டிக் கொள்கிறது. புதிய உற்பத்தி சக்திகள் முதலாளித்துவ உறவுகளின் கட்டமைப்பை மீறி வளர்ந்து விட்டன. விஞ்ஞானம், தொழில் நுட்பவியல் தோற்றுவித்துள்ள அளப்பரிய வாய்ப்புக்களை மனித குலத்தின் நன்மையை முன்னிட்டு முதலாளித்துவம் பயன்படுத்த முடியவில்லை. மேலும் பல்வேறு தொழில்கள் தம்முள் போட்டி போட்டுக் கொண்டு பணத்தை விரயம் செய்வதற்குப் பதிலாக, ஒன்று மற்றொன்றுக்கு உதவி செய்யும் வகையில் உற்பத்தியை அது ஒழுங்குபடுத்த முடியவில்லை. முதலாளித்துவம் கடுமையான முரண்பாடுகளை உண்டு பண்ணுகிறது; இம்முரண்பாடுகள் நெருக்கடிகளாகவும், வேலையில்லாத் திண்டாட்டமாகவும், போர்களாகவும், உற்பத்தி சக்திகளின் நாசமாகவும் வெடிக்கின்றன. உற்பத்தி மென்மேலும் சோஷலிச மயமாகி விட்டதால்—அதே சமயத்தில் உழைப்பின் பலன்கள் தனி நபர்களால் அபகரித்துச் செல்லப்படுகிறது—சோஷலிசத்திற்கான மாற்றம் தவிர்க்க முடியாததாகிறது.

சகல மக்களுக்கும் சகல நாடுகளுக்கும் பொதுவான ஓர் அடிப்படை அம்சம் இருக்கின்றது என்பதை அவர்களின் உற்பத்தி சக்திகள், உற்பத்தி உறவுகளின் வரலாறு காட்டுகிறது. ஒரு குறிப்பிட்ட உற்பத்தி சக்தி மட்டத்திற்கு ஏற்ப ஒரு குறிப்பிட்ட உற்பத்தி உறவுகள் மட்டம் இருந்தாக வேண்டும் என்பதே அவ்வம்சம். ஒட்டு மொத்தமாக எடுத்துக் கொண்டு பார்த்தால்தான், வரலாற்றின் ஒரு குறிப்பிட்ட காலகட்டத்தில் மக்கள் எவ்வாறு உயிர் வாழுகின்றனர், பொருளாயத செல்வத்தை எவ்வாறு உற்பத்தி செய்கின்றனர் என்பதை அவ்

காட்டுகின்றன. வேறு சொற்களில் கூறுவதெனில், உற்பத்தி சக்திகளும், உற்பத்தி உறவுகளும் ஒன்ருகச் சேர்ந்து சமுதாயத்தின் பொருளாயதச் செல்வத்தின் உற்பத்தி முறையைக் குணும்சப்படுத்துகின்றன.

உற்பத்தி முறையில் உற்பத்தி சக்திகள்தான் மிகுந்த இயங்கும் தன்மையுள்ளதும், மாறும் தன்மை உள்ளதும் ஆன கூறு ஆகும். இதற்குக் காரணம், உற்பத்திச் செயல்பாட்டின்போது மக்கள் தொடர்ந்து அறிவையும் அனுபவத்தையும் திரட்டுகின்றனர். இது, முறையே, அவர்கள் புதிய உற்பத்திக் கருவிகளைக் கண்டுபிடிப்பது அல்லது கைக்கொள்வது மூலம் அவற்றை அபிவிருத்தி செய்வதற்கு உதவி செய்கிறது. எனவே, உற்பத்தி சக்திகள் தொடர்ந்து முன்னேறிச் செல்கின்றன.

உற்பத்தி உறவுகள் விஷயத்தில் நிலைமை முற்றிலும் வேருனது. உடமை வடிவங்கள் நாள்தோறும் மாறுவதில்லை. அவை ஓரளவு நிலையானவை. குலமரபு அமைப்பில், உற்பத்தி சாதனங்களில் பொதுவுடமை லட்சக்கணக்கான ஆண்டுகள் நிலைத்திருந்தது; இன்று கூட சில நாடுகளில் அது நீடித்து வருகிறது. அடிமை-உடமை முறை பல ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு நிலவி வந்தது. புராதன எகிப்து, கிரீஸ், ரோமாபுரி ஆகியவை அடிமை-உடமை சமுதாயங்களுக்குச் சிறந்த உதாரணங்களாக விளங்கின. நிலப்பிரபுத்துவம் ஆயிரம் ஆண்டுகட்கு மேல் ஆதிக்கம் வகித்தது. இன்னும்கூட சில நாடுகளில் நிலைத்திருக்கிறது. முதலாளித்துவம் பல நூறு ஆண்டுகள் நிலவி வந்துள்ளது.

உற்பத்தி முறையின் இரு கூறுகளும் ஏற்றத்தாழ்வான முறையில் வளர்ச்சி அடைவதால், உற்பத்தி உறவுகள் உற்பத்தி சக்திகளுக்குப் பின்னிடுகின்றன; காலப்போக்கில் அவை அவற்றுடன் முரண்படுகின்றன. பின்தங்கிய உற்பத்தி உறவுகள் உற்பத்தி சக்திகளின் வளர்ச்சியைத் தடை செய்கின்றன; பழைய உற்பத்தி உறவுகள் ஒழிக்கப்பட்டு உற்பத்தி சக்திகளின் மட்டத்திற்கு ஏற்ப புதிய உற்பத்தி உறவுகள் ஏற்படுவது வரை, இந்த மோதல் தீருவது இல்லை. புதிதாக ஏற்படும் உற்பத்தி உறவுகள் உற்பத்தி சக்திகளின் வளர்ச்சிக்கு அதிக வாய்ப்பை அளிக்கின்றன; சொல்லப்போனுல், அவற்றை ஊக்குவிக்கவும் செய்கின்றன. பழைய கட்டமைப்புகளின் மிச்சசொச்சங்களை கழித்துக் கட்டுவதற்கு அவை உதவி புரிகின்றன. பின்னர் உற்பத்தி சக்திகள் மீண்டும் முன்னேறி உற்பத்தி உறவுகளுக்கு முந்திச் செல்கின்றன; இதன் காரணமாக, உற்பத்தி முறையின் இரு கூறுகளுக்கும் இடையே முரண்பாடு மீண்டும் தோன்றுகிறது. வரலாறு தனது வளர்ச்சியில் மற்றுமொரு முக்கிய கட்டத்திற்கு முன்னேறி விட்டது.

இதன் விளைவாக, உற்பத்தி முறைகளின் இந்த இரு அம்சங்கள் அல்லது கூறுகள் ஒன்றுடன் ஒன்று தொடர்புடையவையாக விளங்குகின்றன. உற்பத்தி உறவுகள் உற்பத்தி சக்திகளைச் சார்ந்திருக்கின்றன;

உற்பத்தியின் முன்னேற்றம் வற்புறுத்துவது காரணமாக, இவை அவற்றுக்கு ஏற்றவாறு அமைந்தாகவேண்டும். அவற்றுக்கு ஏற்றவாறு இருக்கும் நிலைமை மாறியவுடன் உற்பத்தி முறைக்குள் முரண்பாடுகள் அதிகரிக்கின்றன. புதிய உற்பத்தி சக்திகளுக்கு ஏற்ப உற்பத்தி உறவுகளை மாற்றம் செய்வதற்கு உற்பத்தி உறவுகளில் ஒரு மாற்றம் அத்தியாவசியமாகிறது. எனினும், இது தானுக ஏற்பட்டு விடுவதில்லை. இந்த மாற்றத்திற்கான அவசியத்தைக் காணத் தவறுகிறவர்களுக்கு எதிரான போராட்டத்தில் இது நிறைவேறுகிறது. **உற்பத்தி சக்திகளின் தன்மைக்கு ஏற்ப உற்பத்தி உறவுகள் விளங்கவேண்டும் என்னும் விதியின்** சாரம் இதுவே. இவ்விதிதான் வரலாற்று முன்னேற்றத்தின் ஊற்றுக் கால் ஆகும்.

வரலாற்றில் கணக்கற்ற திடீர் சம்பவங்களும், நலன்களின் மோதல்களும், அரசியல் வாதிகள், மன்னர்கள், ராஜ தந்திரிகள், சிப்பாய்கள் ஆகியோரின் ஆர்வமுள்ள முயற்சிகளும் நிறைந்து காணப்படுகின்றன. மேம்போக்காகப் பார்ப்பவருக்கு, குறிப்பாக, அக்காலத்தவருக்கு, இந்தப் பிரமுகர்கள்தான் தமது விருப்பத்திற்கு ஏற்ப வரலாற்றைப் படைக்கிறுர்கள் என்று தோன்றக்கூடும். ஆனுல், உண்மையில், தம்மை அறியாமலேயே, அவர்கள் சமுதாயத்தின் அடி ஆழத்தில் நிகழ்ந்து வரும் வரலாற்று மாற்றங்களை பிரதிபலிக்கின்றனர். இறுதியாகப் பார்க்கப் போனுல், உற்பத்தி முறையின் வளர்ச்சியை ஆளுமை செய்யும் விதிகளின் செயல்களிலிருந்தும், உற்பத்தி சக்திகள், உற்பத்தி உறவுகளின் செயலெதிர் செயலிலிருந்தும் இம்மாற்றங்கள் தோன்றுகின்றன. இந்நிகழ்ச்சிதான் மனிதகுல வரலாற்றின் சாரமாக விளங்குகிறது.

## 2. சமூக-பொருளாதார அமைப்பு

### பொருளாதார அமைப்புக்கும கலாசார அறிவுத்துறை வாழ்வுக்குமுள்ள உறவுகள்

சமுதாய வாழ்வு, வாழ்க்கையின் பொருளாயத அம்சம் ஆகியவற்றை மீண்டும் பரிசீலிக்கும் பொழுது, அவை எவ்வாறு சமூகத்தின் போதத்தையும், அதன் கலாசார, அறிவுத்துறை வாழ்க்கையையும் நிர்ணயம் செய்கின்றன என்பதைப் பார்ப்போம். இங்கு எழுப்ப வேண்டிய கேள்வி என்னவென்றுல், உற்பத்தி சக்திகளும், உற்பத்தி உறவுகளும் சமூக போதத்தின் வளர்ச்சி மீது எவ்வாறு செல்வாக்குச் செலுத்துகின்றன என்பதாகும்.

உற்பத்தி சக்திகளை வைத்து நாம் தொடங்குவோம். உற்பத்தி சாதனங்கள் அபிவிருத்தியடைந்து, உற்பத்தி அனுபவம் திரட்டப்படும் போது இயற்கை பற்றிய அறிவு அதிகரிக்கிறது. உற்பத்தி சக்திகளின் வளர்ச்சியிலிருந்து நேரடியாக சமூகக் கருத்துக்களையும் கொள்கை

களையும் உய்த்துணர்வது அபத்தமானது என்பது கண்கூடு. உண்மையில் எல்லா நாடுகளும் தமது உற்பத்தியில் ஒரே யந்திரக் கருவிகளைத்தான் பயன்படுத்தி வருகின்றன. எனினும் அவற்றின் அரசியல் அமைப்புகள், சித்தாந்தங்கள், அறநெறிக் கோட்பாடுகள் அடிப்படையாக வேறுபடு கின்றன, எதிரெதிராகவும் கூட இருக்கின்றன. இது முதலாளித்துவ, சோஷலிச, புதிதாக விடுதலை பெற்ற நாடுகள், காலனிகள் விஷயத்திலும் உண்மையே. எவரும் உற்பத்தி சக்திகளில் மட்டுமே சமூகக் கொள்கை கள், அரசியல் அமைப்புகள், அறநெறிகளுக்கான அடிப்படையைத் தேடப் போவதில்லை என்பது தெளிவு.

இன்றைய மேலை ஐரோப்பாவை உதாரணமாக எடுத்துக்கொண்டு உற்பத்தி உறவுகள் வகிக்கும் பாத்திரம் பற்றிக் கவனிப்போம். இந்த மண்டலத்தில் முதலாளித்துவ உற்பத்தி உறவுகள் மேலோங்கி நிற்கின்றன. அவை தனி உடமையை, முதலாளிகள் தொழிலாளிகளைச் சுரண்டுவதை அடிப்படையாகக் கொண்டவை. அரசியல் அமைப்பு இந்த உற்பத்தி உறவுகளுக்கு முற்றிலும் இணையானதாக உள்ளது. முதலாளிகள் அரசியல் அதிகாரத்தை மேற்கொண்டு பொருளாதாரத் தில் ஆதிக்கம் வகிக்கிறார்கள். முதலாளித்துவ அறநெறிக் கோட்பாடுகள் பணம் பறித்தலும், லாபத்திற்கான சர்வாம்ச வேட்டையுமாகும். அவை ஆதிக்கம் செலுத்தி வரும் உற்பத்தி உறவுகளைப் பிரதிபலிக் கின்றன. ஏனெனில், இந்த சந்தர்ப்ப சூழ்நிலைகளின் கீழ் உற்பத்தியின் பிரதான நோக்கம் மற்றவர்களைச் சுரண்டி செல்வந்தராவதும், சாத்திய மான அளவு லாபம் சம்பாதிப்பதுமேயாகும். இறுதியாக ஆய்வு செய்யும் பொழுதில், இந்தக் கோட்பாடுகளுடன் உறவு பூண்ட தத்து வார்த்த அரசியல் கொள்கைகள் முதலாளித்துவ நலன்களையே பாதுகாக் கின்றன என்பதைக் காணலாம்.

தொழிலாளி வர்க்கம், இதர முற்போக்கு சக்திகளின் நலன்களைப் பிரதிபலிக்கும் முற்போக்குக் கொள்கைகளும் முதலாளித்துவத்தின் கீழ் உள்ளன என்று கூறலாம். இது உண்மையே. ஆனால் அவை வெறுமையி லிருந்து எழுந்தவை அன்று. மாறாக அவை முதலாளித்துவ அமைப்பின் முரண்பாடுகளைப் பிரதிபலிக்கின்றன.

முதலாளித்துவ, சோஷலிச சமூக அமைப்புக்களை ஒப்புநோக்குவோம். சோஷலிசத்தின் கீழ் பொதுவுடமையை அடிப்படையாக்கிய புது மாதிரி யான உற்பத்தி உறவுகள் உள்ளன, அந்த உறவுகள் சமூகத்தின் கலாசார அரசியல் சித்தாந்தச் செயல்பாடுகள் மீதும், சமூக போதத்தின் மீதும் செல்வாக்குச் செலுத்துகின்றன. சோஷலிசம் நிலைநாட்டப்பட்டதோடு, புதிய உற்பத்தி உறவுகளுக்கு இணையாக அவை யாவும் மாற்ற மடைந்தன.

ஒரு சோஷலிச நாடு அதன் உறுப்பினர் அனைவரின் நலன்களையும் பிரதிபலிக்கிறது. பிறப்பு அல்லது செல்வத்தின் அடிப்படையில் அது

சலுகைகளைக் கட்டிக் காப்பதில்லை. மக்களிடையிலான உறவுகள் கம்யூனிச சீலத்தின் கோட்பாடுகளை அடிப்படையாக்கியுள்ளன, ஒரு மனிதனின் மதிப்பு அவர் ஒட்டுமொத்தமாக சமுதாயத்திற்கு எந்தளவு பணி புரிந்துள்ளான் என்பதாலேயே நிர்ணயிக்கப்படுகிறது.

சமுதாயத்தின் பொருளாதாரக் கட்டமைப்பினை உருவாக்கும் உற்பத்தி உறவுகளின் அமைப்பு அதன் அரசியல் கலாசார அறிவுத்துறை வாழ்க்கையின் **அடிப்படை** ஆகிறது.

இந்த அடிப்படைக்கு மேல் கருத்துக்கள், கொள்கைகள், பொது சித்தாந்தம், அரசியல், சட்ட, கலாசார நிறுவனங்கள் அமைப்புகளின் **மேற் கட்டமைப்பு** உள்ளது.

> அடிப்படை—உற்பத்தி உறவுகளின் அமைப்பு
>
> மேற்கட்டமைப்பு—தத்துவார்த்தக் கருத்துக்கள், அரசியல் அமைப்புகள், சட்டம், ஒழுக்க நெறிகள்.

## சித்தாந்த மேற் கட்டமைப்பின் பாத்திரம்

சமுதாய வாழ்க்கைக்குப் பல அம்சங்கள் உள்ளன. எந்த மனிதனும் பொருளாயத நலன்களால் மட்டும் வாழ்வதில்லை. சமுதாயமும் அவ்வாறு வாழ்வதில்லை. வாழ்க்கை மக்களிடையிலான பொருளாதார, சட்ட, இதர உறவுகளுக்கிடையிலான சிக்கலான பரஸ்பரத் தொடர் பாகும், இவை அனைத்திலும் சமூகக் கருத்துக்கள், கொள்கைகள், கருத் தோட்டங்கள் பிரதான பாத்திரம் வகிக்கின்றன. பொருளாதார அமைப்பினைப் பிரதிபலித்து அவை மனிதச் செயல்பாடுகளுக்கு வழிகாட்டுகின்றன, பொருளாதார முன்னேற்றம் உட்பட சமூகத்தின் முன்னேற்றத்தின் மீது பெருமளவில் செல்வாக்குச் செலுத்துகின்றன. கருத்துக்கள் மக்கள் மனங்களைக் கவரும்போது அவை பௌதிக சக்தியா கின்றன என்று மார்க்ஸ் கூறியுள்ளார். நமது காலத்தில் மார்க்சிய-லெனினியக் கருத்துக்கள் ஒரு வலிமை மிகு சக்தியாக விளங்குவது கண்கூடு. அவை சோஷலிச நாடுகளை ஒற்றுமைப்படுத்தி இதர நாடுகளி லுள்ள உழைப்பாளி மக்களைப் போராட ஊக்குவித்துள்ளன.

பல்வேறு வகையான கருத்துக்கள் உள்ளன என்பது வாஸ்தவம். முற்போக்கான கருத்துக்கள் சமூக வளர்ச்சியை மேம்படுத்த உதவும், பிற்போக்கான கருத்துக்கள் முன்னேற்றத்தைத் தடைப்படுத்தும்.

மக்கள் சில கருத்துக்களால் வழிநடத்தப்படும் போது, அவர்கள் ஒருவர் மற்றவருடன் சித்தாந்த பந்தங்களை ஏற்படுத்திக் கொண்டு பல்வேறு சமூக நிறுவனங்களையும் அமைப்புகளையும் ஏற்படுத்துகிறார்கள். அத்தகைய அமைப்புகள்-தொழிற்சங்கங்கள் அல்லது கட்சிகள், அமைச்சு

கள் அல்லது வாரியங்கள்—தம் பங்குக்கு சமுதாய வாழ்வின் பொருளாதாரம் இதர அம்சங்கள் மீது செல்வாக்குச் செலுத்துகின்றன.

எனவே, சித்தாந்த மேற் கட்டமைப்பு பொருளாதார அமைப்பினைப் பிரதிபலிக்கும் அதே பொழுதில், அதன் பொருளாதாரத்தின் மீதும் செயல்படுகிறது, சமூகத்தின் ஒட்டுமொத்தமான வளர்ச்சியிலும் ஒரு பகுதியாகி விட்டது. வரலாற்றை, பொருளாதார முன்னேற்றம் மட்டுமே என்ற அளவுக்குள் அடக்கச் செய்யும் எந்த முயற்சியும் சமுதாய வாழ்வின் விரிவான பல்வகைத் தன்மையையும் சிக்கலையும் தவிர்க்கவொண்ணு வகையில் வெறும் வறட்டு மலட்டுத் திட்டமாகச் சுருக்கி விடுகிறது.

*1917* ல் ரஷ்யாவில் மகத்தான அக்டோபர் சோஷலிசப் புரட்சி வெடித்த பொழுது, அது மனிதகுல வரலாற்றில் ஒரு மைல்கல்லாகத் திகழ்ந்தது. எனினும் இந்தப் புரட்சி பொருளாதார வளர்ச்சியின் ஒரு விளைவு மட்டுமே என்று கருதுவது தவருகும். தொழிலாளி வர்க்கம் உலகின் சிறந்த அறிஞர்கள் வகுத்தளித்த சமுதாய வளர்ச்சி பற்றிய கொள்கையை ஏற்காதிருந்திருக்குமானல், புரட்சிகரப் போராட்டங்கள் வேலை நிறுத்தங்களில் கிடைத்த பெருமளவிலான அனுபவத்தை அது சேகரிக்காமல் இருந்திருக்குமானல், விவசாயிகளுடன் ஓர் உறுதியான அரசியல் கூட்டணியை உருவாக்காதிருந்திருக்குமானல், அந்தப் புரட்சி வெற்றியடைந்திருக்க முடியாது. மேலும், போராட்டத்தைத் தலைமை தாங்கி நடத்தவும், அறிவுத்துறைத் தலைமையகமாகப் பணி புரியவும் ஒரு கம்யூனிஸ்டுக் கட்சி இல்லாமல் பாட்டாளி வர்க்கப் புரட்சி குறித்து எண்ணிப் பார்க்கவே முடியாது. இறுதியாக ஆய்வு செய்து பார்க்கும் பொழுது, *1917* புரட்சி ஒரு பொருளாதார அவசியத்தை வெளிப் படுத்தியது என்பது உண்மையே, ஆனல் இந்த அவசியம் வர்க்கப் போராட்டத்திலும், கட்சியின் செயல்பாடுகளிலும், விளதிமிர் லெனின் தலைமை தாங்கி நடத்திய சித்தாந்தப் போராட்டங்களிலும் பிரதி பலித்தது.

சமுதாயத்தின் வளர்ச்சி பொருளாதாரம், அரசியல், சித்தாந்தம், வாழ்க்கையின் இதர அம்சங்களின் செயல் எதிர் செயல் மூலமே நடை பெறுவதால், இதன் உள் மையத்திற்குச் சென்று, வர்க்கங்களின் பொருளாதார நலன்களைப் புரிந்து கொள்வது அவசியமாகும். சமூக வளர்ச்சியை ஆளுமை செய்யும் விதிகளைப் புரிந்து கொள்வதற்குரிய ஒரே மார்க்கம் இதுதான்.

## சமூக—பொருளாதார அமைப்பு என்றால் என்ன?

மேலே குறிப்பிட்ட கூறுகள் அனைத்தையும் கவனத்திற் கொண்டு, சமுதாய வாழ்க்கையை ஒட்டு மொத்தமாக சித்தரித்துப் பார்த்தால் அது செயல்கள் நிகழ்ச்சிகளின் பல உருவக் காட்சியாக இனிமேல் தோற்றமளிக்காது. உற்பத்தி உறவுகளின் அமைப்பை சமூகத்தின்

ஒற்றுமையையும் முழுமையையும் ஆதரிக்கும் ஓர் உருவரை அடிப்படை என்று கருதலாம். மக்களின் சித்தாந்த நம்பிக்கைகள் கலாசார செயல் பாடுகள், கருத்துக்கள், அரசியல் நலன்கள், ஒழுக்க நெறிக் கருத்துக்கள் யாவும் இந்த எலும்புக் கூட்டுக்கு சதையும் ரத்தமும் ஈந்து உயிர்த் துடிப்புள்ள வளர்ந்து வரும் சமூக அமைப்பினை உருவாக்குகின்றன. வரலாற்றின் ஒவ்வொரு கட்டத்திலும், பொருளாதார அமைப்பும் சித்தாந்த அரசியல் மேற்கட்டமைப்பும் ஒன்று சேர்ந்து பின்வரும் சமநிலைக் கூற்றுக் குறிப்பிடுவது போன்று ஓர் ஒன்றிணைந்த சமூக-பொரு ளாதார அமைப்பை உருவாக்குகின்றன.

| |
|---|
| சமூக-பொருளாதார அமைப்பு=பொருளா<br>தார அமைப்பு (அடிப்படை) +<br>சித்தாந்த-அரசியல் மேற்கட்டமைப்பு |

சமூகத்தின் வளர்ச்சியும், சமூக-பொருளாதார அமைப்புகளிலான மாறுதல்களும் பல்வேறு கட்டங்களூடே செல்கின்றன, அவை சமூகத் தின் வரலாற்றிலான மைல் கற்களாகும். இந்த நடைமுறை, மக்களின் போதமோ சித்தமோ எப்படியிருந்த போதிலும், எதார்த்த விதிகளால் ஆளுமை செய்யப்படுகிறது. அதற்கும் மேலாக இது அவர்களது போதத்தையும் சித்தத்தையும் நிர்ணயிக்கிறது.

ஐந்து அமைப்புகளை வரலாறு அறியும்: புராதன குலமரபு அமைப்பு, அடிமை-உடமை அமைப்பு, நிலப் பிரபுத்துவ அமைப்பு, முதலாளித்துவ அமைப்பு, கம்யூனிஸ்டு அமைப்பு. உற்பத்தி முறையி லான மாற்றம் பொருளாதாரக் கட்டமைப்பிலும் மாற்றம் விளைக்கும். இதைத் தொடர்ந்து முந்திய எழுச்சியின் அடிச்சுவட்டிலேயே மேற் கட்டமைப்பு முழுவதிலும் எழுச்சி ஏற்படும். சமூகம் ஒரு சமூக-பொருளாதார அமைப்பிலிருந்து இன்னொன்றுக்கு மாறிச் செல்கிறது. பிந்திய ஒவ்வொரு அமைப்பும் மனிதகுல வரலாற்றில் ஒரு புதிய கட்டத்தைக் குறிக்கின்றன.

ஆனால் ஒவ்வொரு நாடும் இந்த அமைப்புகள் அனைத்தையும் கடந்தேயாக வேண்டும் என்று கண்டிப்பான விதி இல்லை. உதாரண மாக ஆசியாவிலும் ஆப்பிரிக்காவிலும் உள்ள பல நாடுகள் முதலாளித் துவமற்ற வளர்ச்சிப் பாதையைத் தேர்ந்து கொண்டுள்ளன. அவற்றின் திட்டம் சோஷலிச நாடுகளின் உலகத் தொழிலாளி வர்க்க இயக்கத்தின் உதாரணத்தைப் பின்பற்றியும், அவற்றின் உதவியைப் பெற்றும், அத்தகைய வளர்ச்சிக்கு சாதகமான ஸ்தல நிலைமைகளின் அடிப்படையில் முதலாளித்துவத்திற்கு முந்திய சமூக அமைப்புகளின் ஜனநாயக மரபுகள் ஆகியவற்றின் அடிப்படையிலும்,சோஷலிசத்திற்கான முன் தேவைகளைப் படிப்படியாக உருவாக்கி பிறகு சோஷலிசத்திற்கான அடித்தளத்தை நிறுவுவதாகும்.

முதலாளித்துவமற்ற வளர்ச்சிப் பாதை சம்பந்தமான கருத்துக் களின் போராட்டம், மார்க்சியத்தின் நிறுவகர்கள் இந்தப் பிரச்சினையை வெறும் தத்துவ அளவில் பரிசீலிக்கத் தொடங்கிய சென்ற நூற்றுண்டின் இறுதி முதலே நடைபெற்று வருகிறது. இந்த வடிவிலான வளர்ச்சியில் சோவியத் யூனியன், மங்கோலியா, பர்மா, பல ஆப்பிரிக்க நாடுகளின் பல தேசிய இனங்களும் தேசியக் குழுக்களும் அனுபவம் பெற்றுவரும் தற்போது காரசாரமான விவாதங்கள் தொடருகின்றன. இந்தப் போராட்டம் முதலாளித்துவமற்ற பாதை சரியானதா என்பது பற்றி யும், அதன் அர்த்தம் வாய்ப்புகள் பற்றியுமாகும். முதலாளித்துவத் திற்கு முந்திய கட்டத்தின் பிற்பட்ட நிலையிலிருந்து, முதலாளித்துவ கட்டத்தை கடந்து தாண்டி சோஷலிசத்தை நோக்கி ஒரே ஒரு வரலாற்று வேகத்தில் முன்னேற முயலும் மக்களின் வாழ்க்கையில் செல்வாக்குச் செலுத்தும் இரண்டு சித்தாந்தங்கள், கொள்கைகள் உள்ளன.

பல்வேறு மூன்றும் உலக நாடுகள் பின்பற்றிவரும் பொருளாதாரக் கொள்கை ஏறத்தாழ ஒன்றேதான், ஏனெனில் அது எதார்த்த அடிப் படையில் நிலவுகிறது, முதலாவதாக ஒரு குறிப்பிட்ட கட்டமைப்பு உள்ளது. மூன்றும் உலக நாடுகளின் பல கட்டமைப்பு பொருளாதாரங் களின் குறிப்பிட்ட அம்சங்களைக் கவனத்திற் கொண்டு பார்க்கும் பொழுது, முதலாளித்துவமற்ற பாதையின் பொருளாதார சாரம் இந்தக் கட்டுக்கோப்புகளிடை ஒரு குறிப்பிட்ட இடையுறவை நிலைநாட்டு வதே என்று கூறுவது சரியாகும். அத்தகைய இடையுறவுகள் பல இருக்கலாம், அதாவது பல்வேறு அளவும், வரிசையுமுடைய முதலாளித் துவமற்ற வளர்ச்சியின் பல்வேறு கட்டங்கள் இருக்கலாம்.

மேலைய சமூகவியலில் வரலாற்றை எல்லையற்ற சுழற்சியாகத் தொடர்ந்த பல சுற்றுக்களாகப் பார்க்கும் கொள்கைகள் உள்ளன. ஒவ்வொரு சுற்றும் முந்தியதைத் திரும்பவும் கொண்டு வருகிறது. ஒட்டுமொத்தத்தில் எவ்வித முன்னேற்றமும் இல்லை.

இது தவறு என்பது கண்கூடு. பல்வேறு அமைப்புகளிலான உற்பத்தி சக்திகளின் தரத்தை ஒப்பு நோக்கிப் பார்த்தால் அது ஒரு அமைப்பிலிருந்து இன்னொரு அமைப்புக்குத் தொடர்ந்து வளர்ச்சி யடைந்து வருதலைக் காணலாம். அதோடு மறுக்க முடியாத கலாசார முன்னேற்றமும் உள்ளது.

கலாசாரத் தேக்கமும், ஏன் பின்னடைவும்கூடக் காணப் பெற்ற காலங்கள் இருந்தன. உதாரணமாக அடிமை,உடைமை சமுதாயத்தை ஒதுக்கி விட்டு நிலப்பிரபுத்துவம் இடம்பெற்ற பொழுது அந்தப் புதிய சமூக அமைப்பில்,குறிப்பாக ஐரோப்பா வில் கலாசாரம், கலைகள் வீழ்ச்சி குறிப்பாகக் காணப்பட்டது. மீண்டும், ஆசியாவிலும் ஆப்பிரிக்காவிலும் காலனி ஆட்சி, இந்த ஆட்சியின் கீழிருந்த நாடுகளின் கலாசார முன்னேற் றத்தைப் பெருமளவுக்கு மந்தப்படுத்தியது.

எனினும், கலாசார முன்னேற்றத்தை அதன் தனித்தனி அம்சங்களாக அன்றி, ஒட்டுமொத்தமாகப் பார்ப்போமானல், வரலாற்றின் தனிப்பட்ட காலகட்டங்களை அன்றி, சமூக பொருளாதார அமைப்பினை ஒப்பு நோக்குவோமானல், அவை ஒவ்வொன்றும் கலாசார முன்னேற்றத்தைப் பொருத்தவரை முந்தியதிலிருந்து ஒருபடி முன்னேற்றமானதே என்பதைக் காணலாம்.

சமுதாயமானது, சுற்றுக்களில் இயங்கிக் கொண்டிருப்பதற்கு மாருக எல்லாக் காலங்களிலும் கீழ் மட்டத்திலிருந்து மேல் மட்டத்தை நோக்கி பாதையில் எழும் பல்வேறு முட்டுக்கட்டைகளை வெற்றி கண்டு முன்னேறி வருகிறது. இதுவே **சமூக முன்னேற்றத்திற்கான** பாதையாகும்.

## 3. வர்க்கங்களும் வர்க்கப் போராட்டமும்

### வர்க்கங்கள் என்ருல் என்ன?

ஒவ்வொரு சமுதாய அமைப்பிலும், பல முக்கியமான வழிகளில் ஒன்றுக் கொன்று வேறுபடும் பிரதான மக்கள் குழுக்கள் இருக்கும். பெரிய சமுதாயக் குழுக்களான அடிமைகள், அடிமை உடமையாளர், நிலப்பிரபுக்கள், விவசாயிகள், முதலாளிகள், தொழிலாளிகள் ஆகியோர் வர்க்கங்கள் என்றழைக்கப்படுவர். ஒரு வர்க்கத்தின் பிரதான அம்சங்களை சற்று உன்னிப்பாகப் பார்ப்போம்.

மேலே குறிப்பிடப்பட்ட எந்த ஒரு சமூக அமைப்பை வேண்டுமாயினும் எடுத்துக் கொள்வோம். அடிமைகளும், அடிமை எஜமானர்களும், நிலப்பிரபுக்களும் விவசாயிசளும், முதலாளிகளும் தொழிலாளர்களும் தமது வாழ்க்கை நிலைமைகள், அரசியல் கருத்துக்கள், ஒழுக்க நெறி ஆகியவற்றிலும், சில சமயம் தமது உடைகளிலும் பாவனைகளிலும் வேறுபட்டிருத்தலைக் காணலாம். இந்த அம்சங்கள் முக்கியமானவை. ஆனல் இவை அடிப்படையான வர்க்க வேற்றுமைகளைக் காட்டத் தவறி விட்டன. தொழிலாளியும் முதலாளியும் ஏன் வேறுபட்ட கருத்துக்களையும், வேருன வாழ்க்கை முறைகளையும் கொண்டிருக்கின்றனர் என்பதை அவை விளக்கவில்லை.

இவ்வாறு இருப்பதற்குக் காரணம் முதலாளிக்குப் பெரியளவு வருமானம் இருப்பதே என்று கூறப்படலாம். இங்கு நாம் உண்மைக்கு அருகில், வர்க்க வித்தியாசங்களின் வேரான காரணங்களை நெருங்கி வருகிருேம்—இவை பொருளாதாரத் துறையிலான காரணங்கள்—தொழிலாளிக்கும் முதலாளிக்கும் வெவ்வேருன வருவாய் என்பது மட்டுமல்ல. ஒவ்வொருவரும் இந்த வருவாயை முற்றிலும் வெவ்வேருன வழியில் பெற்று வருகிருர்கள். ஒரு தொழிலாளியை விடவும் அதிக

மாக முதலாளி சமுதாயத்தின் செல்வத்தைப் பெறுவதேன் என்ற கேள்வி எழுகிறது. இதற்கு ஒரே காரணம் முதலாளி உற்பத்தி சாதனங்களுக்கு உடமையாளராக இருக்கிறார். அவை அவரது தனிச் சொத்தாக உள்ளன. அவற்றை அவர் எப்படி அடைந்தார் என்பது பற்றிக் கவலேயில்லே. இந்த உடமை முதலாளி, பொருளாதாரத்தில் ஆதிக்கம் வகித்துத் தொழிலாளியைச் சுரண்டவும், அவனது உழைப் பின் பயனே சுவீகரித்துக் கொள்ளவும் இடமளிக்கிறது.

**எனவே, ஒரு வர்க்கத்தை நிர்ணயிக்கும் பிரதான அம்சம், அது உற்பத்திச் சாதனங்களுடன் வைத்துள்ள உறவேயாகும்.** இதர வேறு பாட்டு அம்சங்கள் இதிலிருந்து எழுகின்றன. அவையாவன, சமூக உற்பத்தி அமைப்பில் மக்கள் வகிக்கும் இடம், சமூக ரீதியாக ஒழுங்கு படுத்தப் பெற்றுள்ள உழைப்பில் அவர்களது பாத்திரம், பொதுச் செல்வத்தினைப் பங்கிடும் முறை, ஒவ்வொரு வர்க்கமும் அனுபவிக்கும் செல்வத்தின் தனித்தனி பங்கு. இதற்குப்பின் ஒரு வர்க்கத்தின் அரசியல், நெறிமுறை, மனோதத்துவ சித்தாந்த அம்சங்களும் தன்மைகளும் வருகின்றன.

இதன் பொருள் என்னவென்றால், உற்பத்தி சாதனங்களைப் பொருத்தவரை மக்கள் குழுக்கள் பல்வேறு நிலைமைகளை மேற்கொள்வ தால் சமூகத்தில் வர்க்கங்கள் நிலவுகின்றன என்பதே. வர்க்கங்கள் என்றைக்கும் நிலவுவதல்ல - உடமை இல்லாத போது வர்க்கங்கள் இருக்கவில்லை. அவை தனியுடமையோடு தோன்றின. இந்த வகையான உடமை ஒழிக்கப்படும் போது அவை படிப்படியாக மறையும்.

## வர்க்க ஆதிக்கத்தின் கருவி

சுரண்டும் வர்க்கங்கள் உற்பத்தி சாதனங்களை உடமையாக வைத்திருப்பதால் அவை மிகப்பெரும் அளவு பொருளாதார அதிகாரம் செலுத்துகின்றன. இந்த அதிகாரத்தை சமூகத்தின் மீது தமது விருப் பங்களைத் திணிப்பதற்கு அவை பயன்படுத்துகின்றன. இந்த சொத் துடமை வர்க்கங்கள் உற்பத்தி சாதனங்களின் தனிஉடமையும், சிறுபான்மையினர் பெரும்பான்மையினரைச் சுரண்டும் உரிமையும், சமூகத்தின் அடித்தளமாக இருத்தல் வேண்டும் என்று உரிமை பாராட்டு கிறார்கள். சுரண்டும் வர்க்கங்களின் நலன்களுக்கு எதிரான எந்தச் செயல்பாடும் சட்ட விரோதமாக்கப் பெற்று ஒடுக்கப்படுகிறது. வர்க்க சமூகத்தில் சமுதாய உறவுகள் ஆளும் வர்க்கத்தின் சித்தத்தை வெளிப் படுத்தும் விதிகளாலும் சட்டங்களாலும் ஆளுமை செய்யப்படுகின்றன. அவற்றின் ஒட்டு மொத்தம் **சட்டம்** என்று அழைக்கப்படுகிறது.

ஆளும் வர்க்கத்தின் சித்தத்திற்கு எவ்வாறு எல்லோரும் கீழ்ப் படியும்படி செய்யப்படுகிறார்கள், அதன் விதிகளுக்கு எவ்வாறு கட்டுப் பட்டு நடக்கிறார்கள் என்று அதிசயிக்கலாம். இதற்குப் பதில், ஆளும்

வர்க்கம் போலீஸ், ராணுவம், நீதிமன்றங்கள், சிறைகள் இதர அரசாங்க அமைப்புகள் மீது ஆதிக்கம் செலுத்துகிறது என்பதே. இவை எல்லாம் ஒன்று சேர்ந்தே ஓர் அரசியல், அல்லது அரசாங்க யந்திரம் ஓர் அரசாங்கம் ஆகிறது. தனியார் உடமை, சுரண்டல் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்ட ஒவ்வொரு சமூக - பொருளாதார அமைப்பிலும் **அரசாங்கம் சுரண்டப்படுவோர் மீது சுரண்டும் வர்க்கம் ஆதிக்கம் செலுத்தும் ஒரு கருவியாகும்.**

சமூகம் வர்க்கங்களாகப் பிரிந்த பொழுது அரசாங்கம் தோற்றமளித்தது. அதுவரையில் அனைத்து மக்களும் தமது விவகாரங்களை கூட்டாக நிர்வகித்து வந்தார்கள். அரசு, மக்களிடமிருந்து பிரிந்து இருக்கவில்லை. பெரியவர்கள், மரபு இனத் தலைவர்கள் செல்வாக்கு அவர்களது சொந்த குணநலன்களான: அனுபவம், அறிவு, தீரம், போன்றவற்றைச் சார்ந்ததாக இருந்தது. ஆனால் தனிச் சொத்துடமை பிறந்ததோடு, உடமை வர்க்கங்கள் தமது தனி உரிமைகளைப் பாது காத்துக் கொள்வதற்காக சமூகத்தில் அதிகாரத்தைக் கைப்பற்றின. அந்தச் செயல்பாடு மூலம் அரசு மக்களிடமிருந்து தனியே பிரிந்தது. அதோடு அரசாங்கம் ஒடுக்கப்பட்ட பெரும்பான்மை மக்களின் எதிர்ப்பை ஒடுக்கும் அல்லது தகர்க்கும் கருவியாயிற்று.

சமூக - பொருளாதார அமைப்புகள் மாறும் பொழுது, அரசாங்கத் தின் வர்க்கத் தன்மையும் மாறும். இதன் பிரகாரம் மூன்று பிரதான வடிவிலான சுரண்டும் அரசுகள்: அடிமை-உடமை, நிலப்பிரபுத்துவம், முதலாளித்துவ அமைப்புகளை நாம் இனம் பிரித்துக் காணலாம்.

சான்றாகப் பல முதலாளித்துவ நாடுகளை எடுத்துக் கொண்டு பார்ப்போம். உதாரணமாக பிரிட்டன் ஒரு அரசியல் சட்ட முடியாட்சி, அமெரிக்கா ஓர் அதிபர் ஆட்சி, போர்த்துகலில் பாசிச சர்வாதிகார ஆட்சி உள்ளன. எனினும் அவை வடிவத்தில் ஒன்றுக் கொன்று வேறுபட்டிருந்தாலும் அவையாவும் ஒரே மாதிரியானவை. ஓர் அரசாங்கத்தின் வடிவம் முதன் முதலாக அரசின் வடிவத்தையும் இரண்டாவதாக, அங்கு நிலவும் அரசியல் அமைப்பையும் சார்ந்ததாக இருக்கும்.

முடியரசு குடியரசு என்ற இருவிதமான வடிவிலான அரசுகள் உள்ளன.

> **முடியரசு** ஒரு மனிதனின் வழி வழி வந்த ஆட்சி. முடியரசர் ஒரு மன்னராகவோ, சுல்தானாகவோ, ஷாவாகவோ, சக்கரவர்த்தியாகவோ இருக்கலாம். ஆளும் வர்க்கத்தின் ஆதரவுடன் அவர் அரசோச்சுகிறார். அந்த வர்க்கத்தில் அவரும் ஓர் உறுப்பினர். அவர் இந்த வர்க்கத்தின் சித்தத்தை நிறைவேற்றுகிறார். அவரது செயல்களோ, மனப்பற்றுக்களோ ஆளும் வர்க்கத்தின் நலன்களோடு முரண்படுமானால் அவர்கள்

அவரை மாற்றி வேறு ஒரு மேலும் அதிக இணக்கமான அரசனைப்பதவியில் ஏற்ற வழி காண்பர்—உதாரணமாக ரஷ்யச் சக்ரவர்த்தியான முதலாவது பால் முதலில் நெப்போலியனுடன் நேசமாகச் சேரமுயன்ற போது அவரைப் பிரபுக்கள் கொலை செய்தார்கள். ஏனெனில், பூர்ஷுவா பிரான்சுடனான கூட்டணி நிலப்பிரபுத்துவக் கும்பலின் நலன்களுக்கு எதிராக இருந்தது. இதர நாடுகளின் வரலாறுகளில் இதே போன்ற பல உதாரணங்கள் உள்ளன.

குடியரசு என்ற சொல் லத்தீன் மொழியிலான பொது நலம் என்ற சொல்லிலிருந்து வருவது. பெயரளவிலேனும் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஓர் அரசாங்க வடிவைக் குறிப்பது. சுரண்டலை அடிப்படையாகக் கொண்ட ஒரு சமூக அமைப்பில் குடியரசும் ஆளும் வர்க்கத்தின் நலன்களுக்குச் சேவை புரிகிறது. அரசு ஜனநாயக வடிவம் கொண்டிருப்பினும் சமூக அமைப்பு ஜனநாயக முறையில் இருக்கிறது என்று பொருளல்ல.

சமூகத்தின் அரசியல் அமைப்பே அரசாங்க முறைகளை உருவகப் படுத்துகிறது. ஆளும் சுரண்டும் வர்க்கங்கள் ஒடுக்கப்பட்ட மக்களை அடிமைப்படுத்தி வைத்திருக்க அப்பட்டமான பயங்கர அடக்குமுறைகளைப் பயன்படுத்தலாம், அல்லது அவை ஜனநாயக முறையில் ஆட்சி நடத்தலாம். பெரும்பாலும் அவை, தானம்-தண்டம் என்ற கொள்கையின் இரண்டு கூறுகளையும் பல்வேறு அளவில் பயன்படுத்தியே பெரும்பாலும் செயல்படுகிறது.

இப்போது, மிகவும் முக்கியமான கருத்தமைப்பான **ஜனநாயகம்** குறித்து விளக்கம் தர முன்வருகிறோம். ஜனநாயகம் என்பது நாட்டின் விவகாரங்களை நிர்வகித்து நடத்துவதில் ஒட்டுமொத்தமாக மக்கள் பங்கு பற்றுவதை மெய்ப்புக்காக உத்தரவாதம் செய்வதும், தனி நபர் சுதந்திரமுமாகும். வேறு சொற்களில் கூறினால், ஜனநாயகத்தின் கீழ் சட்டத்தின் முன் எல்லோரும் சமம், பேச்சு சுதந்திரம், கூட்டம் சேரும் சுதந்திரம், குடும்பத்தில் தலையிடாமை போன்ற அரசியல் உரிமைகளை ஒரு குடிமகன் செயல்படுத்துவதை சாதனையாக்க வேண்டும்.

எனினும், நடப்புக் கால மேலை ஜனநாயகங்களில் சர்வஜன வாக்குரிமை இருந்த போதிலும், அவை செல்வமிக்க முதலாளிகளால் ஆட்சி செய்யப்படுகின்றன. வலிமை மிக்க தொழில் உரிமையாளர் தமது பொருளாதார அதிகாரம் அனைத்தையும், அரசு அமைப்புகளையும், பொதுஜனப் பிரசார சாதனங்களையும் பயன்படுத்தி அரசை நடத்துவதில் உழைக்கும் மக்கள் பங்கு பெற முடியாதபடி தவிர்க்க முயல்கின்றனர். லஞ்சத்தைக் கையாளவோ, பொய்புனை சுருட்டுகளில் இறங்கவோ அவர்கள் சற்றும் தயங்குவதில்லை. இது பற்றிய படுகேவலமான உண்மை

கள் பெருமளவில் அம்பலப்படுத்தப் பெற்று உலகப் பத்திரிகைகளில் அடிக்கடி வெளியிடப்படுகின்றன. இவை யாவும், ஜனநாயக அமைப்புகள். தாமாக மட்டும் ஓர் அரசாங்கத்தின் வர்க்கத் தன்மையினை மாற்றுவதில்லை என்பதை எடுத்துக்காட்டுகின்றன.

சுரண்டலை அடிப்படையாக்கிய சமூகத்தில் ஜனநாயகம் எவ்வளவு குறைந்த அளவிலும் பெயரளவிலும் இருந்த போதிலும் சரி, அந்த நிலைமையில் இதுவே சாத்தியமான சகல அமைப்புகளைக் காட்டிலும் உழைக்கும் மக்களுக்கு மிகவும் ஏற்கத்தக்க அரசாங்க வடிவமாகும். தமது உரிமைகளுக்காக பல நூற்றுண்டுகள் காலம் நடத்திய போராட்டத்தில் மக்கள் ஆளும் வர்க்கங்களிடமிருந்து ஓரளவுக்கு ஜனநாயக சுதந்திரத்தையும் ஒரு சில சலுகைகளையும் பறித்தெடுக்க முடிந்தது.

உழைக்கும் மக்கள் வென்று பெற்றுள்ள அரசியல் சட்ட ரீதியான அரசியல் சுதந்திரம் முதலாளித்துவ அமைப்பை வீழ்த்துவதற்கான மேலும் சிறந்த ஒரு புரட்சிகரப் போராட்டத்திற்குத் தம்மை ஸ்தாபன ரீதியாகத் திரட்டிக் கொள்வதை சாத்தியமாக்கியுள்ளது. ஏறுமுகமாகி வரும் புரட்சிகர இயக்கத்தைக் கண்டு அஞ்சும் இன்றைய ஏகபோக முதலாளிகள், இந்த ஜனநாயக வடிவங்களை உதறித் தள்ளி அப்பட்டமான சர்வாதிகாரத்தை நிலைநாட்ட முயல்வது குறிப்பிடத்தக்கதாகும். இத்தகைய சூழ்நிலைமைகளின் கீழ் உழைக்கும் மக்கள் முன் உள்ள கேந்திரமான கடமைகளில் ஒன்று தமது வெற்றிகளைப் பேணிக் காக்கவும், ஜனநாயகத்தை விரிவுபடுத்தவும் போராடுவதேயாகும்.

எனினும், அனைவருக்குமான உண்மை ஜனநாயகம் சோஷலிசத்தின் கீழ் மட்டுமே சாத்தியம். சோஷலிச சமூக அமைப்பில் ஜனநாயகத்தின் பிரதானக் கோட்பாடான—மக்களால் மக்களுக்கான அரசாங்கம், தனிநபர் சுதந்திரம்—என்பவை பொருளாதார உறவுகளிலான சமத்துவம் மூலம் உத்தரவாதம் செய்யப்படுகின்றன.

## வரலாற்றின் உந்து சக்தி

வரலாறு வர்க்கப் போராட்டங்களின் நீண்ட பட்டியலாகும். மனிதன் எப்போதுமே ஒடுக்குமுறையையும் சுரண்டலையும் சகிக்கவொண்ணுதவை எனக் கண்டு அவற்றை ஒழிப்பதற்காகப் போராடி வந்துள்ளான். மறுபுறம் ஆளும் வர்க்கங்கள் தமது ஆதிக்க நிலைகளை வைத்திருக்கப் போராடி வந்துள்ளன. கீழ்த் திசையிலும், கிரீஸ், ரோமிலும் நிலவிய அடிமை-உடமை சமுதாயங்கள் கலகக்கொடி நாட்டிய அடிமைகள் தாக்குதலில் கிடுகிடுத்துப் போயின. இதை ஸ்பார்டகஸ் புரட்சியில் பார்க்க முடிந்தது. நிலப்பிரபுத்துவ காலகட்டத்திலும், பிரிட்டனில் வாட் டைலர் கலகம், பிரான்சில் ஜக்கோரி

எழுச்சி, ஜெர்மனியில் விவசாயிகள் போர், ரஷ்யாவில் பொலோத் னிகோவ், ராஸின், புகசெவ் தலைமையிலான புரட்சிகள், சீனுவில் விவசாயிகள் போர் போன்ற பெரிய விவசாயப் புரட்சிகள் நடை பெற்றன. சென்ற நூற்ருண்டின் துவக்கம் முதல் பாட்டாளி வர்க்கம் தொடுத்துள்ள வர்க்கப் போராட்டங்கள் முதலாளித்துவ நாடுகளில் ஓய்வின்றி நீடித்து நடைபெற்றன.

எனவே வர்க்கப் போராட்டம் இருப்பதேன், அது வரலாற்றில் வகிக்கும் பாத்திரம் என்ன என்று கேள்வி கேட்கலாம்.

வர்க்கப் போராட்டம் சுரண்டுவோர், சுரண்டப்படுவோருக்கிடை யில் உதிக்கும் சமூகப் பகைமைகளிலிருந்தே [1] தவிர்க்க முடியாத வகை யில் கிளைக்கிறது. சமுதாயத்தில் ஒடுக்கப்பட்ட வர்க்கங்களின் நிலையும் ஒடுக்குவோரிடமிருந்து அவர்கள் ஏற்கும் கொடுமைகளும் அவர்களைப் புரட்சிகரப் போராட்டத்திற்குத் தூண்டுகின்றன.

எதிரெதிரான வர்க்கங்களின் நலன்களைச் சமரசப்படுத்தலாம் என்று வாதம் செய்யும் சிலர் உள்ளனர். ஒடுக்குவோரையும் ஒடுக்கப் படுவோரையும் சமரசப்படுத்துவது எப்படி? சுரண்டுவோர் தாமாகவே சுயவிருப்பத்தோடு உற்பத்தி சாதனங்களிலான தமது உடமையை விட்டுக் கொடுப்பார்களா? அவர்கள் என்றுமே அவ்வாறு செய்தது கிடையாது. அவர்கள் என்றுமே அவ்வாறு செய்ய மாட்டார்கள். உடையாரை எதிர்த்து இல்லாதார் நடத்தும் போராட்டம் மூலம், அதாவது வர்க்கப் போராட்டம் மூலம் அவர்களிடமிருந்து உற்பத்தி சாதனங்களை நிர்ப்பந்தமாக எடுத்துக் கொள்வது ஒன்றே வழி.

முன்பே குறிப்பிட்டபடி, சமூக-பொருளாதார அமைப்புகள், புதிய உற்பத்தி சக்திகளுக்கும் காலாவதியாகிவிட்ட உற்பத்தி உறவுகளுக்கும் இடையிலான மோதல் மூலம் புதிய அமைப்புகளுக்கு இடமளிக்கின்றன. சுரண்டும் வர்க்கங்கள் இந்தக் காலாவதியாகிவிட்ட உறவுகள் அழிக்கப் படுவதை விரும்புவதில்லை. அவை அவற்றை வெறியுடன் பற்றி நின்று, தமது செல்வத்தையும் அதிகாரத்தையும் தம்மிடமே வைத்திருப்பதற் காகப் போராடுகின்றன. தமது தனி உரிமைகளை வைத்திருப்பதற்காக நிலப்பிரபுக்கள் நடத்திய போராட்டங்களை நினைவு கூருங்கள். அவர்கள் பூர்ஷுவாப் புரட்சிகளை, அதாவது அதிகாரம் பூர்ஷுவாக்களுக்கு மாற்றப்படுவதை மூர்க்கமாக எதிர்த்தார்கள். இதுவே இன்றைய ஏகாதிபத்தியவாதிகள் விஷயத்திலும் காணப்படும் உண்மை. முதலாளித்துவ அமைப்பை அவர்களே கைவிட்டு விடுவார்கள் என்று கருதுவது அபத்தம். மாருக அவர்களது செயல்கள், தமது கதியை நிர்ணயிக்க அவர்கள் இறுதிவரைக் கடுமையாகப் போராடுவார்கள் என்பதையே காட்டுகிறது.

---

1 எதிரானதும் சமரசப்படுத்த முடியாததுமான நலவுரிமைகள் கொண்ட வர்க்கங்களிடை பகைமைகள் எழுகின்றன.

பழைய உற்பத்தி உறவுகள் முன்னேற்றத்திற்கு முட்டுக் கட்டையாகி விட்ட போதிலும், ஒரு சமூக அமைப்புக்குப் பதிலாக இன்னொரு முற்போக்கான சமூக அமைப்பு தானுகவே ஏற்பட்டு விடாது என்பதே இதன் பொருளாகும். இந்த உறவுகளைக் காத்து நிற்கும் பிற்போக்கு வர்க்கங்களின் எதிர்ப்பைத் தகர்க்க வேண்டுவது அவசியமாகிறது. ஒடுக்கப்பட்ட வர்க்கங்கள் நடத்தும் புரட்சிகரப் போராட்டத்தின் வரலாற்று அர்த்தம் இதுவேயாகும். சமூக முன்னேற்றத்தைத் தடை செய்வதற்காக பிற்போக்கு வர்க்கங்கள் போடும் முட்டுக் கட்டைகளை அவை அகற்றி எறிகின்றன. சுரண்டலை அடிப்படையாக்கிய ஒவ்வொரு சமூக அமைப்பிலும் வர்க்கப் போராட்டமே வரலாற்றின் உந்து சக்தியாக உள்ளது. இது இல்லாமல் பகைமை நிறைந்த சமுதாயத்தில் முன்னேற்றம் ஏற்பட முடியாது. இந்தப் போராட்டம் மேலும் மேலும் உக்ரமடைந்து இறுதியில் சமூகப் புரட்சியாக வெடிக்கிறது.

## சமுதாயப் புரட்சி

படிப்படியாக வளர்ச்சி கண்ட காலகட்டங்களுக்கும் சமுதாய அமைப்பு முழுவதும் அடிப்படையாகவே திடீரென்று மாற்ற மடைந்த தருணங்களுக்குமிடையே வரலாற்றில் தெளிவான வேறுபாடு காணப் படுகிறது.

ஒரு சமுதாய அமைப்பில், ஒரு சமூகப் பொருளாதார அமைப்பிலிருந்து வேறென்றுக்கு ஏற்படும் அடிபபடையிலான மாற்றத்தையே சமுதாயப் புரட்சி என்கிறேம். பொருளாதாரச் சொற்களில் கூறினுல் இது உற்பத்தி சக்திகளுக்கும் உற்பத்தி உறவுகளுக்கும் இடையேயான மோதலிலிருந்து கிளைப்பதாகும். சமூகத்திலுள்ள முற்போக்கு சக்திகள் இந்த மோதலைத் தீர்க்கவும், பழைய உற்பத்தி உறவுகளை அகற்றவும் முயல் கின்றன. ஆனுல் எந்த மாற்றமும் ஏற்படாது தடுக்கப் போராடும் பிற்போக்கு வர்க்கங்கள் அவற்றை எதிர்க்கின்றன. ஆளும் வர்க்கங்கள் புரட்சிகர இயக்கத்தை ஒடுக்க ஆட்சி அதிகாரத்தைப் பயன்படுத்து கின்றன. இதன்படி, எந்தப் புரட்சியிலும் அதிகாரம் என்ற பிரச்சினையே மையமான பிரச்சினையாகிறது. புரட்சிகர வர்க்கம் அதிகாரத்தைக் கைப்பற்றி விட்டால் அது அந்த அதிகாரத்தைப் பழைய அமைப்பை முற்றுக ஒழித்துக் கட்டவும், புதிய அமைப்பைப் புகுத்தவும் பயன் படுத்துகிறது.

புரட்சிகளை உத்தரவு போட்டு நடத்த முடியாது என்பதை வரலாறு காட்டுகிறது. முதன் முதலாக ஒரு புரட்சிகர நிலைமை வேண்டும், இது ஆளும் வர்க்கங்கள் பழைய வழியில் இனிமேல் ஆளமுடியாது, ஒடுக்கப் படும் மக்கள் பழைய முறையில் இனிமேல் வாழ விரும்பவில்லை என்ற நிலைமையே இது.

எனினும், ஒவ்வொரு புரட்சிகர நிலைமையும் புரட்சியாக அபி விருத்தி அடைந்து விடுவதில்லை; அதிலிருந்து நெடுந்தொலைவில் உள்ளது.

ஒரு புரட்சியை நடத்தப் போராடத் தயாராக உள்ள வெகுஜன அரசியல் சக்திகள் வேண்டும். இந்த சக்திகள் நிலவிவரும் அமைப்பைக் கவிழ்த்து புரட்சியை வெற்றிகரமாக நடத்துவதில் அக்கறையுள்ள வர்க்கங்களிலிருந்து பிறக்கின்றன. அவையே புரட்சியின் உந்து சக்தி களாகும். இந்த சக்திகளை ஒன்று திரட்ட, ஆட்சி அதிகாரத்தை விழையும் வர்க்கத்திற்கு வர்க்கப் போராட்ட அனுபவம் அவசியம், அரசியல் கட்சிகள் ஸ்தாபனங்களை நிறுவுதல், அதன் அணிகளிலிருந்து தலைவர்களைத் தோற்றுவித்தல், ஆகியவற்றில் அனுபவம் வேண்டும், அதோடு உறுதியும் ஆக்கபூர்வமான செயல் திட்டமும் அவசியம்.

இன்றைய தேச-விடுதலைப் புரட்சிகளின் உந்து சக்தி களாகப் பின்வரும் வர்க்கங்களும் சமூகப் பகுதிகளும் உள்ளன: தொழிலாளி வர்க்கம், விவசாயி மக்கள், நகரப்புற குட்டி பூர்ஷுவாக்கள், உள்நாட்டு பூர்ஷுவாக்கள், அறிவுத் துறை யினர், வேறு பலர். வர்க்க சக்திகளின் சமநிலையும், வர்க்கங் களின் பாத்திரமும் நாட்டுக்கு நாடு வித்தியாசப்படுகின்றன.

இறுதியாக ஆய்வு செய்து பார்க்கும் பொழுது, ஒரு தேச விடுதலைப் புரட்சியின் தன்மையும், அதன் வடிவங்களும் முறை களும் அதில் எந்த சமூக சக்திகள் பங்கு பற்றுகின்றன, எந்த வர்க்கம் இயக்கத்திற்குத் தலைமை தாங்குகிறது என்பதைச் சார்ந்ததாக இருக்கும். புரட்சி முன்னேறும்போது வர்க்கங்கள் சமூகப் பகுதிகளின் உருவமும் கட்டமைப்பும் மாற்றமடையும். இது அவற்றின் நிலைமைகள், சமூகத்திலான பாத்திரம், அவற் றிடையிலான உறவுகளுக்கும் பொருந்தும். அரசியல் சுதந் திரத்திற்கான போராட்டத்தின் துவக்கக் கட்டத்தில் சமூக, வர்க்க வேற்றுமைகளும் பகைமைகளும் பின்னணிக்குத் தள்ளப் படுகின்றன, ஆனால் நடப்பு இரண்டாம் கட்டத்தில் பொருளா தார சுதந்திரத்திற்கான போராட்டம் நடக்கும்போது இவை மேலும் மேலும் துலாம்பரமாகின்றன.

சமூகப் புரட்சிகள் தாம் தீர்வு காணும் பிரச்சினைகளுக்கு ஏற்ப தமது இயல்பில் வேறுபடுகின்றன. ஒரு புரட்சி பூர்ஷுவா அல்லது முதலாளித் துவ உறவுகளைப் புகுத்துமானால், அது ஒரு பூர்ஷுவா புரட்சியாகும். அது ஒரு சோஷலிஸ்டு அமைப்பை ஏற்படுத்துமானால் அது சோஷலிஸ்டு புரட்சியாகும். தேசவிடுதலைக்கும் அந்நிய ஆட்சியை ஒழிப்பதற்குமான காலனி-எதிர்ப்புப் புரட்சிகளும் உள்ளன. ஆனால் இந்த விஷயத்திலும் நாம் சமூகப் புரட்சிகள் பற்றிப் பேசுகிறோம். ஏனெனில் அவை முற்றி லும் அடிப்படையிலேயே புதியதான சமூக அமைப்பின் எதிர்காலத்தை நிர்ணயிக்கின்றன.

சமூகப் புரட்சிகள் ஒடுக்கப்பட்ட சுரண்டப்பட்ட மக்கள் வகிக்கும் மாபெரும் பாத்திரத்தை விசேஷ வலுவுடன் வெளிப்படுத்துகின்றன. அவர்களது வீரஞ்செறிந்த போராட்டம் பழைய அமைப்பின் அஸ்தி

வாரங்களை அழித்து விடுகிறது. பிற்போக்கு வர்க்கங்களின் அதிகாரக் கோட்டைகளைத் தகர்க்கும் புரட்சியின் தாக்கும் சக்திகளாக அவர்கள் விளங்குகிறார்கள். பின்னல் அவர்கள் எதிர்ப் புரட்சியாளர் செயல்பாடு களிலிருந்து புரட்சியின் வெற்றிகளைப் பாதுகாப்பர். புரட்சிகர நிலைமை யில் மக்களில் பெரும்பாலானோர் தீவிரமாக இருப்பதன் விளைவாக நிகழ்ச்சிகள் துரிதமாக நடைபெறும். ஒரு சமுதாயப் புரட்சி புயல் போன்றது. அது காற்றைச் சுத்தப்படுத்தி மூச்சு விடுவதை எளிதாக்கு கிறது.

## 4. சமூகத்தின் வரலாற்று வடிவங்கள்

### குடும்பமும் குலமரபுக் குழுவும்

சமூகப் பகுதிகளாக மக்களைப் பிரிவினை செய்யும் வர்க்க வேறு பாடுகள், மற்றும் பிற வேறுபாடுகளைத் தவிர, மனிதனின் மிகத் தொன்மையான காலத்திலிருந்தே சமூகத்தின் வரலாற்று ரீதியான வடிவங்கள் இருந்து வந்துள்ளன.

இவற்றில் முதலாவது குடும்பமும், குலமரபுக் குழுவுமாகும்; இவை குருதித் தொடர்பு உறவிலிருந்து எழுந்தன. இவை, விதிவிலக்கின்றி, எல்லா மக்களுக்கும் பொருந்தும். சில நாடுகளில் இவற்றின் கூறுகள் இன்னும் இருந்து வருகின்றன. இத்தகைய பழைய வாழ்க்கை முறை களை நீடித்துப் பேணி வரும் மக்கள் இதரர்களை விட மோசமானவர்கள் என்றோ அல்லது மேம்பட்டவர்கள் எனறோ கூற முடியாது. வரலாற்றின் போக்கில் நிலைமைகள் இவ்வாறுதான் ஏற்பட்டுள்ளன. ஏதாவது ஒரு வழியில் சகல மக்களும், ஒரு சமயத்தில், தங்களை இரத்தத் தொடர்பினால் ஐக்கியப்பட்டவர்கள் என்றோ, அல்லது தாய் வழி அல்லது தந்தை வழி யில்-ஒரு பொதுவான மூதாதை வழிவந்தவர் என்றோ கருதினர். அத்தகைய மக்கள் பயிர் செய்வதற்கோ, பிராணிகளைப் பராமரிப் பதற்கோ ஒன்றுகக் கூடி வாழ்ந்தனர், சமூகங்களாகத் தம்மை அமைத்துக் கொண்டனர். தங்களுடைய எண்ணப் போக்கின் படியோ, அல்லது "இரத்த பந்தம் வலுவானது" என்ற காரணத்தாலோ அல்ல. மக்கள் கூடி வாழும்படியான நிர்ப்பந்தத்திற்குள்ளாயினர்; ஏனெனில், நிலத்தில் உழுது பயிர் செய்வதற்கும், குழந்தைகளையும், பெண்களையும், முதியோர் களையும் பராமரிப்பதற்கும் இது ஒன்றுதான் வழியாக இருந்தது.

இத்தகைய சமூகங்களின் வளர்ச்சிப் போக்கில், மேலும் மேலும் பகுதிகள் அவற்றிலிருந்து பிரிந்து சென்றன. ஆயினும், அவை யாவும் தமது குருதித் தொடர்பு ரீதியான உறவையும் பொருளாதார பந்தங் களையும் நிலைநிறுத்தி, குடும்பங்கள் அல்லது குலமரபுக் குழுக்களின் பரந்த உறவுகளை உருவாக்கி வந்தன. ஒரு குலமரபுக் குழு வழக்கமாக நூற்றுக் கணக்கான, அல்லது ஆயிரக்கணக்கானவர்களைக் கொண்டிருந்தது.

அது ஒரு குறிப்பிட்ட பிரதேசத்தை ஆட்படுத்தியது, அங்கு அதன் உறுப்பினர்கள் வாழ்ந்தனர், வேட்டையாடினர். குலமரபுக் குழுவினர் ஒரே மொழியைப் பேசினர், ஒரே விதமான மூடநம்பிக்கைகள் சடங்குகள் வழக்கங்களைக் கொண்டிருந்தனர். ஒரு குடும்பம் அல்லது குலமரபுக் குழுவின் வாழ்க்கை தன்னியல்பாகவே ஜனநாயகக் கோட்பாட்டை அடிப்படையாக்கியதாக இருந்தது. குடும்பம் வயது வந்தவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட முதியவர்களால் நடத்தப் பெற்றது. குலமரபுக் குழுக்கள், இந்தக் குழுக்களின் கூட்டங்களில் தேர்ந்தெடுக்கப்பட்ட கவுன்சில்களால் ஆட்சி செய்யப்பட்டது.

பின்நாட்களில், உறவுள்ள குலமரபுக் குழுக்கள் கூட்டணிகள் அமைக்கத் தொடங்கின. இரத்த உறவே பிரதான இணைப்பாக விளங்கிய போதிலும் இதற்கான தேவை பொருளாதார ராணுவக் காரணங்களால் ஆணையிடப்பட்டது. இந்த இணைப்பு மாறி அதனிடத்தில் பிரதேச பந்தங்கள் ஏற்பட்டன, இவை பொருளாதார வளர்ச்சியின் விளைவாக ஏற்பட்டன, இதனால் தேசியக் குழுக்கள், தேசங்கள் தோன்றலாயின.

## தேசியக் குழுக்களும் தேசமும்

குலமரபுக் குழுக்களின் கூட்டணி நீண்ட காலத்திற்கு சொந்தபந்த மூலம் மட்டுமே வாழ முடியாத ஒரு தளர்ச்சியான அமைப்பாக இருந்தது. பொருளாதார உறவுகள் வளர்ச்சியால் இரத்த உறவு இல்லாத மக்களை அது இணைத்த போதிலும் பிரதேச சமுதாயம் மேலதிக முக்கியத்துவம் பெற்றது. மக்கள் பெரும் குழுக்களாக ஒரே பிரதேசத்தில் வாழ்ந்தனர், ஒரே மொழியையும் ஒரே வகையான வழக்கங்களையும் கொண்டிருந்தனர். இந்தக் கூறுகள்தான் அவர்களது பொதுவான வரலாற்று ரீதியிலான எதிர்காலத்தை நிர்ணயம் செய்தன, அவர்களது பொது மனோதத்துவம் கலாசாரம் ஆகியவற்றை உருவாக்கின. இந்த வளர்ச்சி ஒரு மனித இன சமூகத்தைத் தோற்றுவித்தது, இதுவே தேசியக் குழு என்று அழைக்கப்பட்டது.

பொதுவாக தேசியக் குழுக்கள் அடிமை-உடமை, நிலப்பிரபுத்துவ சகாப்தங்களில் தோன்றின. இதற்கு உதாரணம் தொன்மைக் காலத்திய எகிப்தியர், கிரேக்கர்கள் ஆகும். நிலப்பிரபுத்துவ காலங்களில் தேசியக் குழுக்கள் ஐரோப்பாவிலும் தோன்றின. பின்னால், பல உறவுடைய குலமரபுக் குழுக்கள் இரண்டறக் கலந்து தேசியக் குழுக்களாயின.

ஒரு தேசியக் குழு ஓரளவு தளர்ச்சியான மனித இன சமூகக் குழுவே, பழங்காலத்திய தேசியக் குழுக்கள் பல சீரழிந்து போயின, மற்றவை தேசங்களாக வளர்ச்சியடைந்தன. ஒரு தேசியக் குழுவை ஒன்று சேர்த்து வைத்திருந்த பந்தங்கள் ஓரளவு ஸ்திரமற்றவை, ஏனெனில் அத்தகைய சமூகப் பகுதிக்கு இன்னும் ஒரே பொருளாதாரம் ஏற்பட

வில்லை. பொதுக் கலாசாரத்தில் ஸ்தல வேறுபாடுகள் எடுப்பாகக் காணப்பட்டன, பொது மொழியில் பல்வேறு பேச்சு மொழிகள் இருந்தன.

முதலாளித்துவ உறவுகள் வளர வளர, தேசியக் குழுக்கள் இணையத் தொடங்கி தேசியப் பகுதிகளாக உருவாயின. முதலாளித்துவம் ஸ்தலத் தடை வேலிகளை அகற்றியது. இது தேசிய மார்க்கெட்டுகளை உருவாக்கி தேசியக் குழுக்களை அவற்றின் பொதுப் பொருளாதார செயல்பாடு மூலம் நெருக்கமாக ஒன்று சேர்த்தது. இதன் விளைவாக, பிரதேச ஒற்றுமைக்குப் பொருளாதார ஒற்றுமை துணை செய்தது. இது பொதுவான தேசியக் கலாசாரத்திற்கு ஓர் அடிப்படையை வழங்கியது. தேசிய போதமும் தேசபக்தியும் தோன்றின. இதன் விளைவாக, ஒரு தேசம் என்பது, பொருளாதார, பிரதேச, மொழி, கலாசார, மனோதத்துவ பந்தங்களால் ஒன்றிணைந்த மக்களின் ஸ்திரமான சமுதாய அமைப்பாகும்.

> முதலாளித்துவம் வீழ்ச்சி முகமாக இருக்கும்போது ஆப்பிரிக்காவில் தேசியக் குழுக்களும் தேசங்களும் வளர்ந்து வருவதால், ஆப்பிரிக்காவில் ஒரு முதலாளித்துவ தேசத்தை உருவாக்குவது என்பது முற்போக்குத் தன்மை உடையதல்ல. எனவே, சோஷலிசத் திருப்பமுடைய கொள்கையை உடைய ஆப்பிரிக்கப் புரட்சியாளர்கள் தேசிய இனங்களுக்கான உறவுகள் விஷயத்தில் முதலாளித்துவத்தின் துரதிருஷ்டவச மான அனுபவம் ஏற்படாது மக்களைக் காக்கும்படி கோரப்படு கிறார்கள். மிகவும் முற்போக்கான பாதை, தற்போது நிலவும் சமுதாய மனித இன சமூகப் பகுதிகளை சோஷலிச தேசிய இனங்களாகவும் தேசங்களாகவும் படிப்படியாக மாற்றுவதற் கான சமூக, பொருளாதார, அரசியல் முன் தேவைகளை உருவாக்குவதே. இந்த நோக்கத்திற்கு மிகவும் முதன்மையாக உள்ள கடமை தேசிய இனங்கள் பிரச்சினைக்குத் தீர்வு காண்பதே.

தேசிய இனங்களிடையிலான உறவுகள் சமூக வளர்ச்சியில் பிரதான பாத்திரம் வகிக்கின்றன. பொருளாதார அரசியல் கலாசாரத் துறை களில் அவை செல்வாக்குச் செலுத்துகின்றன.

## தேசங்களின் வளர்ச்சியில் இருபோக்குகள்

தேசங்களிடையிலான உறவுகளில் இரண்டு எதிரெதிரான போக்குகள் உள்ளன. முதலாவது, தேசிய வாழ்வுக்கான விழிப்பும், தேசிய சுதந்திரத்திற்கான விருப்பமுமாகும். இரண்டாவது, தேசங் களிடையேயான உறவுகளை விஸ்தரிப்பதற்குரிய, அவற்றிடையான தடை மதில்களைத் தகர்த்து சமூக வாழ்வினை சர்வதேச மயமாக்கும் போக்கு.

சாராம்சத்தில் இரு போக்குகளும் முற்போக்கானவை. இரண்டும் உலக நாகரிகத்தைச் செழுமைப்படுத்துகின்றன. ஆனுல் முதலாளித் துவத்தின் கீழ் அவை கடுமையான எதிர்ப்பை எதிரிடுகின்றன, இதனுல் தேசங்களிடையே உக்ரமான மோதல்கள் நிகழ்கின்றன. ஒடுக்கும் நாடு களின் ஆளும் வர்க்கங்கள் தேசிய விடுதலைக்கான எழுச்சியை எதிர்க் கின்றன. இதில் வெற்றி பெறுவதற்கான ஒரே வழி உறுதியான போராட்டமே. தேசங்களிடையிலான உறவுகள் விஷயத்தில் முத லாளித்துவத்தின்கீழ் அவை பகைமை முறையில் வளர்கின்றன, சில தேசங்கள் தேசியக் குழுக்களை வேறு சில அடிமைப்படுத்துவதும் இதிலுட்படும்.

இவை யாவும், தேசிய விடுதலையும் வளர்ச்சியும் சமூக முன்னேற்றத் திலிருந்து பிரிக்கவொண்ணுதவை என்பதைக் காட்டுகிறது. ஒடுக்கப் பட்ட நாடுகள் சுதந்திரத்திற்காகவும் தேசிய மறுமலர்ச்சிக்காகவும் நடத்தும் போராட்டம், முதலாளித்துவ ஒடுக்குமுறையிலிருந்து மனித குலத்தின் சமூக விடுதலைக்காக மனிதகுலம் நடத்தும் புரட்சிகர இயக்கத்தோடு நெருங்கிய தொடர்புடையதாகும். அனைத்து தேசங் களும் உண்மையான சமத்துவம் அடைந்து, தமது உள்ளார்ந்த சாத்தியக் கூறுகளை வளர்த்துக் கொள்ள முழு வாய்ப்பைப் பெற வேண்டுமானுல் அதற்கான வழி இது ஒன்றே. இந்த மாற்றம் அனைத்து நாடுகளிடையும் நட்புறவையும், சுதந்திரமான பரிமாற்றத்தையும் சாத்தியமாக்கும் நிலைமைகளை உருவாக்க வேண்டும். பின்னுல், ஒரு முன்னேற்றமான கம்யூனிஸ்டு சமூக அமைப்பு ஏற்படும்போது இந்த மாற்றம் தேசிய வேற்றுமைகளை வென்று சமாளித்து, ஓர் உயர்பட்ட சர்வதேச வடிவிலான சமூகத்தை, ஒன்று சேர்ந்த மனித குலத்தை உருவாக்க உதவிகரமாக இருக்கும்.

## பூர்ஷுவா தேசியமும்
## பாட்டாளி வர்கக சர்வதேசியமும்

துவக்க முதலே, முதலாளிகள், மலர்ந்து வரும் தேசிய போதம், தேசிய உணர்வினைத் தமது சொந்த வர்க்க நலன்களை வளர்த்துக் கொள் வதற்குப் பயன்படுத்திக் கொள்ள முயல்கிருர்கள். தேசம் ஒற்றுமை யின் ஆக உயர் வடிவம் என்று பிரகடனம் செய்யப்படுகிறது. இதற்கும் மேலாக, சில தேசங்கள் மற்றவற்றை விட உயர்ந்தவை என்று முதலாளித்துவம் வாதம் செய்கிறது. முதலாளித்துவ சித்தாந்த வாதிகள் மக்கள் மனங்களைக் குறுகிய தேசிய வெறியினுல் விஷப்படுத்தி பாட்டாளிகள் மத்தியில் வர்க்க உணர்வு வளர்வதைத் தடை செய்ய முயல்கிருர்கள், தேசிய இன் அடிப்படையில் உழைக்கும் மக்களிடையே பிரிவினையை விதைக்கிருர்கள்.

தேசியத்தை ஒவ்வொரு குறிப்பிட்ட நாட்டின் விஷயத்திலும் அதன் தகுதிகளுக்கு ஏற்பப் பரிசீலிக்க வேண்டும். காலனி ஆதிக்கத்தை

எதிர்த்துப் போராடும் ஓர் ஒடுக்கப்பட்ட நாட்டின் தேசியம், ஒரு ஜனநாயக முற்போக்கு அர்த்தம் கொண்டது. இந்த விஷயத்தில் தேசியக் கருத்துக்களும் உணர்வுகளும் ஏகாதிபத்தியத்தை எதிர்த்த ஒரு கண்டன வடிவமாகும். ஒரு தேசத்தின் பெரும்பான்மையாகவுள்ள தொழிலாளி வர்க்கமும், உழைக்கும் மக்களின் இதர பகுதிகளும் நலவுரிமைகளை முரணின்றிப் பாதுகாத்து வந்தால் மட்டுமே இந்த முற்போக்கு அம்சங்களை மேம்படுத்த முடியும். இது பிற்போக்காளர் நலன்களுக்கு முற்றிலும் மாறானதாகும். அவர்கள் தமது வர்க்கத் தனி உரிமைகளைப் பேணிக் காப்பதற்கு தேச விடுதலை லட்சியத்தையும் காலனி - எதிர்ப்பு புரட்சியின் வெற்றிகளையும் காட்டிக் கொடுக்கத் தயங்க மாட்டார்கள்.

தொழிலாளி வர்க்கத்தைப் பொருத்தவரை அது தேசியவாதத்தை, பாட்டாளி வர்க்க சர்வ தேசியம் கொண்டு எதிர்க்கிறது. இது அனைத்து சமூக தேசிய ஒடுக்கு முறைகளிலிருந்தும் விடுதலை பெற, ஏகபோகங்களின் ஆதிக்கத்தை எதிர்த்த, அனைத்து தேசங்கள், வருண இனங்களையும் சேர்ந்த உழைக்கும் மக்களின் வர்க்க ஒருமைப் பாடாகும். ''அனைத்து நாடுகளின் தொழிலாளர்களே ஒன்று சேருங்கள்!'' என்ற புகழார்ந்த கோஷம் அவர்களது சர்வதேச சகோதரத்துவத்தின் வெளியீடாகும்.

பாட்டாளி வர்க்க சர்வதேசியம் முதலாளித்துவ சமூக அமைப்பிலான தொழிலாளி வர்க்கத்தின் எதார்த்த நிலையிலிருந்து கிளைக்கிறது. முதலாளித்துவம் ஒரு சர்வதேச சக்தி. தொழிலாளர் தேசிய இனம் வருண இனம் எதுவாயிருப்பினும் சரி, அது அவர்களைச் சுரண்டுகிறது. கோடீசுவரர்களின் இரும்புப் பெட்டிகளில் பெருக்கெடுத்துப் பாயும் லாபங்கள் பல்வேறு நாடுகளிலிருக்கும் தொழிலாளர்களின் உழைப்பால் ஏற்பட்டதாகும். உலக முதலாளித்துவத்தை நசுக்க வேண்டுமானால் அனைத்துப் பாட்டாளி வர்க்கத்தின், அனைத்து உழைக்கும் மக்களின் சர்வ தேசக் கூட்டணி அவசியம். தொழிலாளி வர்க்கத்தின் முன்னணிப் படையான மார்க்சிய - லெனினியக் கட்சிகள் பாட்டாளி வர்க்க சர்வ தேசியக் கோட்பாட்டை தமது நடவடிக்கைகளின் அடித்தளமாக ஏற்றுள்ளனர்.

அத்தகைய கருத்துக்கள் நிலவிய போதிலும் பாட்டாளி வர்க்க சர்வதேசியத்திற்கும் தேசிய விரோதக் கருத்துக்களுக்கும் பொதுவான அம்சம் எதுவும் கிடையாது. தேசங்கள் உண்மையில் இருக்கின்றன என்பதையே புறச்சணிக்க வேண்டும் என்று வாதிடுவோர் உள்ளனர்- தேசியமான வாழ்க்கை முறையின் சிறப்பு அம்சங்கள் கலாசாரம் தேசியப் பெருமிதம் யாவும் அசட்டை செய்யப்பட வேண்டும் என்று அவர்கள் கருதுகின்றார்கள். ஆனால் சர்வதேசியம் என்னும்போது தேசிய நலன்களை மறுக்க வேண்டும் என்று அர்த்தமல்ல. சர்வதேசிய வாதிகள் வலியுறுத்துவதென்னவென்றால், இந்த நலன்களை உலக முழுதிலுமுள்ள உழைக்கும் மக்களின் வர்க்க நலன்களுடன் சேர்த்துப் பார்க்கவேண்டும் என்பதே.

பூர்ஷுவா தேசியவாதம் முதலாளித்துவத்தின் தேசியவாதத்தைப் பொருத்தவரை அது தேசிய நலன்கள் விஷயத்தில் உதட்டளவில் பேசினும் இந்த நலன்களை உண்மையில் சேதப்படுத்தியே வருகிறது. இந்த வகையான தேசியவாதம் அல்லது குறுகிய தேசிய வெறி ஏகாதிபத்தியப் போர்களை மூட்டி விடுவதற்காகப் பலமுறை தூபம் போட்டு ஊக்குவிக்கப்பட்டது. இது பல நாடுகளுக்கு பயங்கரமான துன்பதுயரங்களைக் கொண்டு வந்தது. உதாரணமாக, ஜெர்மன் இன மேதாவித்தனக் கருத்தால் தூண்டப்பட்டு நாஜிசம் மனித குலத்தை இரண்டாம் உலகப் போரில் ஆழ்த்தியது; இது ஜெர்மானியருக்கு நாசகர விளைவுகளை ஏற்படுத்தியது. இற்றை நாட்களில் ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலுமான ஏகபோக முதலாளித்துவத்தின் தேசியவாதம் மக்களிடையே சமுசயங்களையும் பூசல்களையும் விளைப்பதில் தீவிரமாக உள்ளது. ஒடுக்கப்பட்ட நாடுகளின் தேசியம் முற்றிலும் வேருனது என்பது கண்கூடு. அது அவர்களை ஏகாதிபத்தியத்திற்கு எதிராகப் போராட ஊக்குவிக்க முயல்கிறது.

பாட்டாளி வர்க்க சர்வதேசியம் உலக நாடுகளின் எதிர் காலத்தை உழைக்கும் மக்களின் சமுதாய விடுதலையுடன் இணைக்கிறது. அது ஒவ்வொரு நாட்டின் ஜீவ சக்திகளையும் விழிப்படையச் செய்து சமத்துவமுடைய நாடுகளின் ஒரு சர்வதேசக் கூட்டணியால் சுபிட்சமான எதிர் காலத்திற்குரிய வாய்ப்பை முன் வைக்கிறது. உலகத் தொழிலாளி வர்க்கத்தின் பொது நலன்களைப் பாதுகாக்கும் பொழுதில் சர்வதேச அரங்கில் தலைமை சக்தியாக இன்று திகழும் பாட்டாளி வர்க்க சர்வதேசியம் அதே சமயம் அனைத்து நாடுகளின் உண்மையான நலவுரிமைகளுக்குச் சேவை புரிகின்றது.

## 5. வரலாற்று அவசியமும் மனிதச் செயல்பாடும்

### மக்களே வரலாறு படைக்கிறார்கள்

சமூகம் இயற்கையைப் போலவே புறநிலை விதிகளுக்கு ஏற்ப வளர்ச்சியடைவதால், மக்கள் வரலாற்றில் வகிக்கும் பாத்திரம் என்ன என்று கேட்பது நியாயமே. மனிதன் வரலாற்றுத் தேவையின் கண்மூடித்தனமான கருவியா?

> விதி என்னும் தெய்வத்தாள் மனிதனுக்கு என்று எதை நிர்ணயித்திருக்கிறாளோ அதை மனிதனால் மாற்ற முடியாது என்று புராதன கிரீசின் கற்பனைக் கதைகள் யாவும் வாதிக்கின்றன. வரலாற்றுத் தேவையும் அதே போன்று அதோகதியாக்கும் என்று ஒருவர் நினைக்கலாம். அப்படியானால், பொதுச் செயல்பாடுகளைக் கைவிட்டுக் காத்திருந்து பார்ப்போம் என்ற போக்கை ஏற்பது நல்லதல்லவா?

உலக முதலாளித்துவப் பிரசாரகர்கள் மார்க்சிய - லெனினியத்தை மறுக்கும் பொழுது, அது விதிவசப்படி நடக்கும் வழிக்கு இட்டுச் செல்கிறது என்று வாதிடுகிறார்கள். அதாவது நிகழ்ச்சிகளின் நடப்பு காலகாலத்திற்கும் முன்கூட்டியே நிர்ணயிக்கப்பட்டுவிடும் அதை மாற்றுவதற்கு மனித ஜீவன்களுக்கு சக்தி இல்லை என்ற கருத்தை ஆதரிக்கிறார்கள். வரலாற்றின் விதிகள் தவிர்க்க முடியாத வகையில் கம்யூனிசத்திற்கு எப்படியும் இட்டுச் செல்லுமாயின் எதற்காக ஒருவர் சோஷலிசம் கம்யூனிசம் என்று போராட அழைக்கவேண்டும் என்று கேட்கிறார்கள். வசந்தமோ கோடையோ வரவேண்டும் என்பதற்காகப் போராட எவரும் நினைப்பதில்லை.

எனினும், வரலாற்றின் விதிகளுக்கும் இயற்கையின் விதிகளுக்கும் இடையிலான அடிப்படை வேற்றுமை முந்தியவை மக்களின் செயல்பாடுகள் மூலம் அமுல் நடத்தப்படுகின்றன என்பதேயாகும். வரலாற்றுத் தேவை தவிர்க்க முடியாத ஏதாவது ஒன்றாகவோ, மனிதச் செயல்பாட்டின் செல்வாக்குக்கு அப்பாற்பட்டதாகவோ தன்னை வெளிப்படுத்திக் கொள்வதில்லை. மாறாக, அது உற்பத்தி முன்னேறி, சமூகத்தில் புதிய பொருளாயதத் தேவைகள் எழுந்து பெருமளவிலான மக்களை ஒரு குறிப்பிட்ட திசையில் செயல்படத் தூண்டும் வகையில் தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறது.

நிலப்பிரபுத்துவ உறவுகள் உற்பத்தி சக்திகளுக்குத் தடையாக வரும்பொழுது அவற்றை ஒழித்துக் கட்டுவதற்கான பௌதிகத் தேவை தோன்றுகிறது. இந்தத் தேவை பூர்ஷுவாக்கள், விவசாயிகளின் புரட்சிகரச் செயல்பாடுகளில் பிரகடனமாயிற்று. அவர்களது புரட்சிகரப் போராட்டம் நடந்திரா விட்டால் நிலப்பிரபுத்துவ அமைப்பு தானாகவே சரிந்து வீழ்ச்சியடைந்திருக்காது. இந்த உதாரணம் எடுத்துக் காட்டுவது என்னவென்றால் வரலாற்று விதிகள் தாமாகவே செயல்படுவதில்லை என்பதைத்தான். மக்கள் தமது சொந்த வரலாற்றை சிருஷ்டித்துக் கொள்கிறார்கள். ஆனால் தன் முனைப்பாகச் செய்வதில்லை. மாறாக அவர்கள் சந்தர்ப்ப சூழ்நிலைகளின் செல்வாக்கின் கீழ் செயல்படுகிறார்கள், இதில் பிரதானமான ஒன்று பொருளாதாரத் தேவை. இந்தத் தேவை சமூக வளர்ச்சியின் அவசரத் தேவைகளை ஓரளவு தெளிவாகப் பார்ப்பவர்கள் செயல்பாடு மூலம் நிறைவு செய்யப்படுகிறது.

பிற்போக்கு சக்திகளைப் பிரதிநிதித்துவப் படுத்தும் வேறு சில மக்கள் வரலாற்றுத் தேவையை மறுக்கின்றனர். ஏனெனில் அது அவர்களது நலவாழ்வையும் அதிகாரத்தையும் பாதிக்கிறது. அவர்களது செயல்கள் முன்னேற்றத்தைச் சற்றே மந்தமாக்கிய போதிலும் அதை தடுத்து நிறுத்திவிட முடியாது. உதாரணமாக, காலனியாதிக்கத்தைப் பேணி வைத்திருக்க

ஏகாதிபத்தியவாதிகள் நடத்தும் முயற்சி எப்பாடுபட்டேனும் காலனி மக்களின் விடுதலையைத் தவக்கப்படுத்த முயன்றது. ஆனால் தேசவிடுதலை இயக்கத்தின் தீ ஜ்வாலையை அணைக்க முடியவில்லை, காலனியாதிக்க அமைப்பு சரிந்து வீழ்ச்சியடைவதைத் தவிர்க்க முடியவில்லை.

சோஷலிசத்திற்கான தீவிரமான புரட்சிகரப் போராட்டத்தின் முக்கியத்துவத்தையும், சோஷலிச போதம், புரட்சிச் சித்தாந்தம், மார்க்சிய கட்சி ஆகியவற்றின் பாத்திரத்தையும் குறைத்து மதிப்பிட்ட சந்தர்ப்பவாதிகளை லெனின் கடுமையாக எதிர்த்தார் - புதிய அமைப்பினை ஸ்தாபிக்க வேண்டுவதன் அவசியத்தை புரட்சிகர சக்திகள் எந்தளவு அதிகமாக தெளிவாக உணர்கிறார்களோ அந்தளவுக்கு அவர்கள் அதற்காகச் செயலூக்கத்தோடு போராடுவர், அந்தளவு துரிதமாக சமூக முன்னேற்றத்தின் வேகம் இருக்கும். நிலைமை மாறுதலுக்குப் பக்குவமாக இருக்கலாம்;ஆனால் முற்போக்கை பிரதிநிதித்துவப்படுத்தும் சக்திகள் போராடத் தயாராக இல்லாதிருக்கலாம். இந்த இடத்தில் பிறபோக்கு சக்திகள் பழைய முறைகளை காலவரையறை இன்றி பேணி வைத்திருக்க சகல முயற்சிகளையும் செய்யும். வரலாற்றின் தீர்ப்பை நிறைவேற்றும் ஆற்றல் படைத்த சக்திகள் தோன்றும்போது இறுதியில் மாற்றம் வரும் என்பது வாஸ்தவம். ஆனால் இந்தத் தாமதம் பெருமளவு அவசியமில்லாத துன்ப துயரங்களை விளைக்கும்.

## வரலாற்று அவசியமும் சுதந்திரமும்

வரலாற்று அவசியம் ஒருவருக்கு விரும்பியதைத் தேர்ந்து கொள்ளும் சுதந்திரத்தை மறுக்கிறது என்று முதலாளித்துவப் பிரசாரகர்கள் வழக்கமாக வாதிடுவதுண்டு. அவர்களது கருத்துப்படி சுதந்திரம் அவசியத்திற்குப் பொருந்தாதது.

இந்தப் பிரச்சினையை மேலும் ஆழமாகப் பார்ப்போம். ஒரு காட்டில் இரண்டு மனிதர்கள் வழி தெரியாமல் திண்டாடுகிறார்கள் என்று வைத்துக் கொள்வோம். அவர்களில் ஒருவர் தான் விரும்பிய பக்கம் போகும் சுதந்திரம் உண்டு என்று கருதுகிறார். எனவே முதலில் கண்ட பாதையை மனம்போன போக்கில் தேர்ந்தெடுக்கிறார். எந்த நேரமும் திசைமாறலாம் எந்தப் பாதையில் வேண்டுமாயினும் செல்லலாம் என்று அவர் தன்னைத் தானே தேற்றிக் கொள்ளலாம். பலமணிநேரம் அலைந்து திரிந்து சரியான வழி காணாமல் தவிக்கும் போதுதான் அவர் தனது சுதந்திரம் வெறும் ''பிரமை'' என்பதை உணர்வார். உண்மையில் அவர் சுதந்திரயாக இல்லை. தமது சுற்றுச் சூழல் தயவில் அவர் இருந்தார், அவை அவரை அச்சுறுத்தி அவற்றை அவர் புரிந்து கொள்ள முடியாததால் பீதியூட்டின. இன்னொரு மனிதன் வேறு வகையில் செயல்

பட்டார். வழியைக் கண்டு பிடிக்கத் தன்னைச் சுற்றி நிச்சயம் ஏதாவது அடையாளம் இருக்கவேண்டும் என்பது அவனுக்குத் தெரியும். சூரியன், அடர்ந்த மரங்கள் இவற்றைவைத்து அவன் புலனறிய முடியும். அவசியம் தெரிந்து அவன் செயல்பட்ட தால் இந்த சூழ்நிலைமைகளில் வழியைக் கண்டு பிடிக்கிறான், அவை சம்பந்தப்பட்ட வரையில் உண்மையில் சுதந்திரனாக இருக்கிறான்.

எதார்த்த அவசியம் குறித்த அறிவே மக்களுக்கு வரலாற்றுச் செயல்பாட்டுக்கான சுதந்திரத்தை அளிக்கிறது. இதில் குறிப்பிடத் தக்க உதாரணம் கம்யூனிஸ்டுக் கட்சிகளின் நடவடிக்கைகளே. சமூக வளர்ச்சியை ஆட்சி செய்யும் விதிகள் குறித்த அறிவை அவர்கள் பெற்றிருப்பதால் அவர்கள் தொழிலாளி வர்க்கத்தின் போராட்டங்களை வரலாற்று அவசியத்திற்கு ஏற்ப ஒழுங்கமைக்கிறார்கள். இதன் விளைவு களை எவரும் காணலாம். பல நாடுகள் சோஷலிச சமூக அமைப்பைக் கட்டி விட்டன.

ஒரு குறிப்பிட்ட பிரதேசத்தில் எப்படி சரியான வழியைக் கண்டறி வது என்பதைத் தெரிந்திருக்கும் மனிதனைப் போல, மக்கள் மார்க்சிய லெனினியக் கொள்கையை ஆயுதமாகக் கொண்டால் அவர்கள் சுதந்திரத்திற்கான சரியான பாதையைத் தேர்ந்தெடுக்க முடியும். எனவே இதன் விளைவாக அவசியம் சுதந்திரத்தை வேண்டாம் என்று மறுத்து விடுவதில்லை, மறுபுறம் சுதந்திரம் அவசியத்தை மறுத்து விடு வதில்லை. சுதந்திரம் என்பது அவசியத்தை ஆய்ந்து அறிந்து அதை நடை முறையில் பயன்படுத்துவதாகும்.

## மக்களும் தனிநபரும்

வரலாற்று நூலை பக்கம் பக்கமாகப் புரட்டிக் கொண்டு போகும் போது, சமுதாயத்தின் வாழ்க்கையில் ஆழமான முத்திரை பதித்துச் சென்றுள்ள பல மனிதர்களின் பெயர்கள் நம்முன் காட்சி தரும். அவர்கள் மாபெரும் விஞ்ஞானிகள், தளபதிகள், சிந்தனையாளர்கள், புரட்சிகர இயக்கங்களின் தலைவர்கள் ஆவர். மாவீரன் அலெக்சாண்டர், லியோனார்டோ டா வின்சி, மஹாபீட்டர், நெப்போலியன், கன்பியூஷியஸ், அல்லது அவிசென்னா ஆகியோர் பற்றி கேள்விப்படா தவர் யாருமே இருக்கமுடியாது. ஒவ்வொரு நாடும் தனது வரலாற்று முக்கியத்துவமுள்ள பிரமுகர்களைப் படைத்துள்ளது. இவர்கள்தான் வரலாற்றைப் படைக்கின்றனர் என்று யாரும் நினைக்கக்கூடும்.

அவர்கள் பெரும் பாத்திரத்தை வகிக்கின்றனர் என்பது உண்மையே. உதாரணமாக, மாக்சிமிலியன் ராபஸ்பீயரி, பிரான்சின் வரலாற்றில் ஒரு பெரும் முத்திரையைப் பதித்துச் சென்றுள்ளார் என்பது மறுக்க முடியாத உண்மை. ஆனால் அவருடைய பலம் எதில் அடங்கியிருக்

கின்றது? அவருடைய நடவடிக்கைகள் சொற்பொழிவுகள், ஆணைகளை நெருக்கமாக ஆராய்ந்தால், நிலப்பிரபுத்துவத்திற்கு எதிரான பிரெஞ்சு மக்களின் இயக்கத்தின் நலன்களை அவர் பிரதிபலித்தார் என்பது புலப்படுகிறது. அதனால்தான் மக்கள் அவரைத் தமது தலைவராகத் தேர்ந்தெடுத்து ஆதரித்தனர். புரட்சியின் எதிரிகள் கொல்லப்பட்ட அதே முறையில் அவரும் கொல்லப்படுவதற்கான அவருடைய பலவீனம் எதில் அடங்கியிருந்தது? அவர் தனது நடவடிக்கைகளின் பிந்திய கட்டத்தில் பொது மக்களின் ஆதரவை இழந்து விட்டார் என்பதில் இதற்கான பதிலைக் காண்கிறோம். இதன் விளைவாக, மாபெரும் தலைவர்களின் வரலாற்று நடவடிக்கைகள் சமூக. தேசிய வளர்ச்சியின் ஆழமான தேவைகளிலிருந்து எழும் மக்களின் இயக்கங்களைப் பின்பலமாகக் கொண்டுள்ளன.

இந்த மாமேதைகள் யாரும் அரங்கத்தில் தோன்றவில்லை என்றால் வரலாற்றுக்கு என்ன தீங்கு விளைந்திருக்குமோ என்று யாரும் கேட்கத் தோன்றும். உதாரணமாக, ஏதோ ஒரு அசம்பாவிதம் காரணமாக, ஆலிவர் கிராம்வெல் தனது குழந்தைப் பருவத்தில் மரணமடைந்திருந்தார் என்று வைத்துக் கொள்வோம்; அப்படியானால், இங்கிலாந்தின் பூர்ஷுவாப் புரட்சியே நடைபெறாதிருந்திருக்குமா? இல்லை. புரட்சி எப்படியும் நடந்திருக்கவே செய்யும். சமூக-பொருளாதார அமைப்புகளின் வளர்ச்சியை ஆளுமை செய்யும் ஆழமான எதார்த்த விதிகள்தான் வரலாற்றை நிர்ணயிக்கின்றன. பிரிட்டனின் 17ஆவது நூற்றாண்டு பூர்ஷுவா புரட்சி ஒரு வரலாற்று அவசியமாயிருந்தது. கிராம்வெல் இருந்திராவிட்டால், இதே நோக்கத்தை, ஆனால் ஒரு வேளை வேறு முறையில், நிறைவேற்றுவதற்கு வேறு ஆட்கள் தோன்றியிருப்பர். பல சம்பவங்கள் ஒரு வேளை வேறு பாதையை மேற் கொண்டிருக்கலாம் அல்லது வேறு சமயத்தில் நிகழ்ந்திருக்கலாம். ஆனால், எப்படியும் வளர்ச்சியின் பிரதான போக்கு அது மாதிரியேதான் இருந்திருக்கும்.

ஒரு நபரை மேதையாக்குவது என்னவென்றால் இதரர்களை விடத் தெளிவாக அவர் அக்காலத்தின் சமுதாயத் தேவைகளைத் திட்டவட்டமான முறையில் வெளிப்படுத்தி பின்னர் முற்போக்கு சக்திகளை ஒன்று திரட்டி, இத்தேவைகளுக்கான போராட்டத்தில் அவைகளுக்குத் தலைமை தாங்குவதாகும்.

பல்வேறு காலகட்டங்களின் தலைசிறந்த பிரமுகர்களைப் பற்றிய ஆராய்ச்சியானது அவர்களுடைய நடவடிக்கைகளின் வரலாற்று முக்கியத்துவம் அவர்களே பிரதிபலித்த நலன்களைக் கொண்ட சமூக இயக்கத்தின் வீச்சினால் எப்போதுமே நிர்ணயிக்கப்படுகிறது என்பதை எடுத்துக்காட்டும்.

பாட்டாளி வர்க்கத்தின் புரட்சிகர இயக்கம் முந்தியவை எல்லா வற்றையும் விட ஈடிணையற்ற மாபெரும் முக்கியத்துவம் வாய்ந்ததா யிருப்பதால், அது தனது தலைவர்கள் முன்னால் வெகு உயர்வான கோரிக்கைகளை முன்வைக்கிறது.

விஞ்ஞான சோஷலிச சித்தாந்தத்தை உருவாக்கிய மாமேதைகளைத் தொழிலாளி வர்க்க இயக்கம் சிருஷ்டித்தது. அவர்கள் காரல் மார்க்ஸ், ஃபிரடெரிக் எங்கல்ஸ், விளதீமிர் லெனின் ஆவர். இவர்கள் உலக உழைப்பாளி மக்களின் மாபெரும் தலைவர்கள். மார்க்சிய-லெனினிய மூலவர்கள் தலைசிறந்த திறமைகளைப் பெற்றிருந்தனர்; அவர்கள் அதிசயிக்கத்தக்க விஞ்ஞான தொலைப்பார்வை கொண்டிருந்தனர்; அவர்கள் புரட்சிகர இயக்கத்தின் அனுபவத்தைத் தொகுத்து கொள்கையை நடைமுறையுடன் இணைக்க முடிந்தது; அவர்கள் ஸ்தாபன ரீதியாக ஒன்று திரட்டுவதற்கான திறமையையும், வெற்றி பெறுவதற்கான வளையாத உறுதியையும், தைரியம், மாபெரும் தனி நபர் கவர்ச்சியையும் பெற்றிருந்தனர். மனித குலத்தை சுரண்டலி லிருந்துப் ஒடுக்குமுறையிலிருந்தும் விடுவிப்பதற்கான போராட்டத்திற்கு அவர்கள் ஆற்றிய பிரம்மாண்டமான பங்குப் பணிக்காக அவர்கள் அனைவரின் நன்றியையும், மதிப்பையும் பெற்றனர்.

எந்த மாமேதையின் நடவடிக்கையின் வரலாற்றுக் கட்டமைப்பும், அவன் வாழும் சகாப்தத்தின் சமூகத் தேவைகளை வரம்பாகக் கொண் டிருப்பது குறிப்பிடத் தக்கது. திறமை, விசேஷ முக்கியத்துவம் வாய்ந்த விஞ்ஞானம், கலாசாரம், கலைத்துறைகளிலும்கூட, இறுதியாகப் பார்க்கப் போனால்,கலாசார முன்னேற்றம் சமூகத் தேவைகளினால் நிர்ண யிக்கப்படுகிறது. சமுதாயத்தின் வளர்ச்சி வழி வகுத்துள்ளதால்தான், மாபெரும் விஞ்ஞானிகளும் புதிய கண்டுபிடிப்புகளைச் செய்ய முடிகிறது. இதே போன்று, கலைஞர்கள் தமது பணிகளில் தமது சகாப்தத்தின் சமூகக் கருத்துக்களைப் பிரதிபலிக்கின்றனர்.

விவசாயத்தில் ஏற்பட்ட முன்னேற்றத்தின் காரணமாகவே இயற்கையின் வளர்ச்சியை ஆளுமை செய்யும் சார்லஸ் டார்வினுடைய சித்தாந்தம் சாத்தியமாயிற்று. அவருடைய சித்தாந்தத்துக்கான அவசியம் பக்குவமடைந்திருந்தது என்பதை அவருடைய முன்னோடிகள் வெளியிட்ட கருத்துக்கள் காட்டின. உயிரியலின் முன்னேற்றங்களைத் தொகுத்தளித்த போது டார்வின், இயற்கையின் பரிணமம் பற்றி ஒரு முடிவுக்கு வந்து மனிதனின் தோற்றத்தை விளக்கினார்.

பழம் பெரும் கலைகளிலும்கூட ஏதாவது ஒரு வகையில் கருத்துக்களை யும், மனோ நிலைகளையும், அல்லது நலன்களையும் பிரதிபலிக்காத ஒரு படைப்புக் கிடையாது. குறிப்பாக, வரலாற்றின் பெரும் திருப்புமுனை களில் தலைசிறந்த கலைப்படைப்புக்கள் தோன்றியுள்ளன. உதாரணமாக, 15 ஆவது 16 ஆவது நூற்றாண்டுகளில் மேற்கு ஐரோப்பாவிலும், மத்திய

ஐரோப்பாவிலும், பல நாடுகளில் முதலாளித்துவ உறவுகள் தோன்றிய தால் ஏற்பட்ட மறுமலர்ச்சி மாபெரும் கவிஞர்களையும், கலைஞர்களையும் கொண்ட ஒரு பட்டியலையே உருவாக்கிற்று.

முதலாவதாக உற்பத்தித் துறையின் முன்னேற்றத்தின் விளைவாக சமூகத் தேவைகள் தோன்றுகின்றன. இது இவ்வாறிருப்பதால், தமது கைகளினாலும் அறிவினாலும் சமுதாயத்தின் செல்வங்களையும் சீலங்களை யும் சிருஷ்டிக்கும் தொழிலாளிகள் வரலாற்றில் கேந்திரமான பாத்திரத் தை வகிப்பது தர்க்க ரீதியான நியாயமே.

இப்போது அரசியல் துறைக்குத் திரும்புவோமேயானால், மொத்தத் தில் மக்கள் நிர்ணயமான பாத்திரம் வகிக்காத தனியொரு திருப்புமுனை கூட வரலாற்றில் கிடையாது என்பதை யாரும் நிச்சயமாகக் கூற முடியும். பொதுஜன ஆதரவில்லாத தலைவர்கள் பட்டாளங்கள் இல்லாத தளபதிகளைப் போன்றவர்கள். புரட்சிகள், விடுதலைப் போர்கள் ஆகிய இரண்டிலுமே இறுதி முடிவு எப்போதும் மக்களிடமே உள்ளது, சமாதான காலத்திலும்கூட, ஆளும் வர்க்கங்கள் மக்களை அரசியலிலிருந்து தனிப்படுத்தி வைத்திருக்க முயலும்போது, மக்கள் எப்படியும் ஓரளவு தமது செல்வாக்கைச் செலுத்தி வந்துள்ளனர். சுரண்டும் வர்க்கங்களின் நலன்களைப் பாதுகாக்கும் அதே சமயத்தில் மன்னர்களும், ஜனாதிபதிகளும், அமைச்சர்களும்கூட பொதுமக்களின் கோரிக்கைகளையும் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டிய நிலை ஏற்பட் டுள்ளது. போராட்டத்தின் போக்கில், ஆளும் வர்க்கங்களின் தனிச் சலுகைகளைக் கட்டுப்படுத்தி அவர்களின் கொடுங்கோன்மையை மட்டுப் படுத்துவதில் உழைப்பாளி மக்கள் வெற்றி கண்டுள்ளனர். மேலும் அவர்கள் தமக்குச் சலுகைகள் அளிக்கும்படியும் அடிக்கடி கட்டாயப் படுத்தியுள்ளனர்.

விஞ்ஞானங்கள், கலைகள் சம்பந்தப்பட்ட மட்டிலும், முதலில் பார்க்கும்போது அவை அரசியலிலிருந்து முற்றிலும் விலகியிருப்பது போலத் தோன்றலாம். ஆராய்ச்சியாளர்கள், எழுத்தாளர்கள், கவிஞர்கள், கலைஞர்கள், இசைவாணர்களின் மாபெரும் பெயர்கள் அடங்கிய ஒரு பட்டியல் மட்டுமே காணப்படும். எனினும், நாம் கேட்க வேண்டிய கேள்வி என்னவென்றால், கலைஞர்களும், விஞ்ஞானிகளும் இன்னபிறரும் எங்கிருந்து தமது கருத்துக்களையும் உத்வேகத்தையும் பெறுகின்றனர், என்பதே. விஞ்ஞானம் நடைமுறையின் மூலம் வளர்ச்சி அடைகிறது என்பதும், உற்பத்தியின்போது அது முன்னேறு கிறது என்பதும் வெளிப்படை. விஞ்ஞானக் கருத்துக்களின் வேர் பற்பல தலைமுறையினர் ஒன்று திரட்டியுள்ள உற்பத்தி அனுபவக் குவியலில் ஊன்றி நிற்கிறது.

கலைகள் சம்பந்தப்பட்ட மட்டிலும், கிராமியப் பாடல்கள், வீரக் கதைப்பாடல்கள், பழங்கதைகள் ஆகியவையே இதற்குச் சான்று.

ஒவ்வொரு நாட்டு மக்களிடையேயும் மா பெரும் கவிஞர்கள், கலைஞர்கள், இசைவாணர்கள் தோன்றியுள்ளனர். மெய்யான கலைஞர்கள் தமது கருத்துக்களையும் சித்திரங்களையும் மக்களின் வாழ்க்கையிலிருந்தும் கிராமிய இலக்கியங்களிலிருந்தும் பெறுகின்றனர்.

## மக்களின் தத்துவவியல்

தத்துவவியல் பல நூற்றாண்டுகளாக நிலவி வந்துள்ளது. தர்க்கவியல் பொருள்முதல்வாதத்தையும், வரலாற்றியல் பொருள்முதல் வாதத்தையும் தன்னகத்தே கொண்ட மார்க்சிய தத்துவவியல் உலக அரங்கில் தோன்றுவதற்கு முன்பு, அது மக்களிடமிருந்தும் புரட்சிகரப் போராட்டத்திலிருந்தும் தொலைதூரத்தில் பிரிந்து நின்றது.

> கிரேக்க தத்துவவியலாளர் டியோஜீனஸ் தனது வாழ்க்கையை ஒரு பீப்பாயில் கழித்தார் என்பது பழங்கதை. அவருக்கிருந்த ஒரே கவலையெல்லாம் மக்கள் லௌகீக விவகாரங்களைக் கூறியும், அவருடைய சிந்தனைக்கு இடையூறு செய்தும் தொந்தரவு கொடுக்கக்கூடாது என்பதே. எல்லாத் தத்துவவியலாளர்களும் டியோஜீனஸ் போல் இருக்கவில்லை என்பது உண்மையே. பலர் பொது விவகாரங்களிலும், அரசியலிலும் சுறுசுறுப்பாக இயங்கி வந்தனர். ஆனால் கடந்த காலத்தின் மிக மிகச் செறிவான தத்துவியல் கருத்தமைப்புகள் கூட முரணற்ற விஞ்ஞானத்தன்மை சொண்டதாகவோ எதார்த்தமானதாகவோ இருக்கவில்லை. கருத்துக்களும், சித்தாந்தங்களும்தான் வரலாற்றின் பிரதான உந்து சக்தி என்று கருதியதால் சகல தத்துவவியலாளர்களும் சமுதாயத்தை கருத்து முதல் வாத நிலையிலிருந்து பார்த்தனர். வறுமையை எவ்வாறு ஒழிக்க முடியும் என்பதையோ அல்லது சுரண்டலுக்கு எவ்வாறு முற்றுப்புள்ளி வைக்கமுடியும் என்பதையோ அவர்களின் போதனைகள் மக்களுக்கு எடுத்துக்காட்ட முடியவில்லை.

இந்த நிலையில், பாட்டாளிகளின்—மனித குலத்தை விடுதலைசெய்வது, சுரண்டல் அமைப்பை ஒழிப்பது, கம்யூனிசத்தை நிர்மாணிப்பது ஆகிய வரலாற்றுப்பணியை மேற்கொள்ள வேண்டிய ஒரு வர்க்கம்—நலன்களைப் பிரதிபலிக்கும் ஒரு சித்தாந்தமாக மார்க்சிய தத்துவவியல் தோன்றிற்று. இவற்றை எவ்வாறு சாதிப்பது என்னும் கேள்விக்கு பதிலிறுக்கும்படி தத்துவவியலிடம் கோரப்பட்டது. ஒரு சமயம் மார்க்ஸ் குறிப்பிட்டது போல, ''தத்துவவியலாளர்கள் பல்வேறு முறைகளில் உலகைப்பற்றி விளக்கியுள்ளனர்; எனினும் அதை மாற்றுவது தான் விஷயமாகும்.'' [1]

(1) கே. மார்க்ஸ், எஃப், எங்கல்ஸ், தேர்வு நூல்கள், பாகம் 1. பக். 15.

சமுதாயத்தின் வளர்ச்சியை ஆளுமை செய்யும் விதிகளை வெளிப் படுத்தும் மார்க்சியத் தத்துவவியல் உலகைப் பற்றிய ஓர் எதார்த்தமான சித்திரத்தை அளித்தது; எனவே அது பாட்டாளி வர்க்கத்தின் ஓர் ஆயுதமாக மாறிற்று. மக்களின் தத்துவவியல் என்ற வகையில், கடந்த காலத் தத்துவவியல்களில் இல்லாத பயனுடைமையை மார்க்சியம் பெற்றது. தர்க்கவியல் பொருள் முதல்வாதமும், வரலாற்றியல் பொருள் முதல் வாதமும் பாட்டாளி வர்க்கத்தின் வர்க்கப் போராட்டத் திற்கான சித்தாந்த வேலைத் திட்டத்திற்கான அடிப்படையை நல்கியது. அது கம்யூனிச நிர்மாணத்திற்கான தத்துவ அடிப்படையாக விளங் கிற்று. தற்கால சகாப்தத்தின் சிக்கலான நிலைமைகளில் தமது கொள்கை களை வகுப்பதில் கம்யூனிஸ்டு, தொழிலாளர் கட்சிகள் இவ்வேலைத் திட்டத்தில் நம்பிக்கை வைத்திருக்கின்றன.

வரலாற்றை விஞ்ஞான பூர்வமாகப் புரிந்து கொள்வதற்கான கருவி என்ற வகையில், தர்க்கவியல் பொருள்முதல் வாத தத்துவத்தை பயன்படுத்திய மார்க்சியத்தின் மூலவர்கள் முதலாளித்துவப் பொருளா தார அமைப்பைப் பற்றி முழுமையாக ஆராய்ந்தனர். அவர்கள் முதலாளித்துவச் சுரண்டலின் காரணங்களையும், நடைமுறையையும் வெளிப்படுத்தினர். கடைசிப் பகைமைத் தன்மை வாய்ந்த சமுதாய- பொருளாதார அமைப்பு ஆகிய முதலாளித்துவம், தவிர்க்க முடியாத வகையில் வீழ்ந்தே தீரும் என்று அவர்கள் எடுத்துக் காட்டினர்.

இரண்டாவது அத்தியாயம்

# முதலாளித்துவமும் அதன் வீழ்ச்சியும்

சமுதாயத்தின் வாழ்க்கையில் பல முகங்கள் உள்ளன என்பதை நாம் ஏற்கெனவே கண்டு விட்டோம். எல்லா சமுதாய உறவுகளிலும், பொருளாதார உறவுகள் ஒரு விசேஷ பாத்திரம் வகிக்கின்றன. காரணம் அவைதான் இதர உறவுகள் அனைத்தையும் நிர்ணயிக்கும் அடிப்படைத்தன்மையும், அசல் தன்மையும் ஆகும்.

ஒவ்வொரு பொருளாதார சகாப்தத்திற்கும் அவற்றுக்கென தனியான வளர்ச்சி விதிகளும், விசேஷ அம்சங்களும் உள்ளன. தனது பிரதான நூலான மூலதனத்தில், மார்க்ஸ், முதலாளித்துவ உற்பத்தி முறையை பகுப்பாய்வு செய்தார். அவர் முதலாளித்துவத்தின் கீழ் செல்வம் உற்பத்தியாவது, வினியோகம் செய்யப்படுவதை ஆளுமை செய்யும் விதிகளை வெகு தெளிவுடன் வெளிப்படுத்தினார். முதலாளித்துவத்தின் தவிர்க்க முடியாத வீழ்ச்சி, சோஷலிசத்தின் வெற்றி ஆகியவற்றுக்கான காரணங்கள் வாழ்க்கையின் பொருளாதார நிலைமைகளிலிருந்து எழுந்தன என்பதைக் காட்டினார்.

## 6. முதலாளித்துவ உற்பத்தி

பண்ட உற்பத்தி ஒட்டு மொத்த ஆதிக்கம் வகிப்பது முதலாளித்துவத்தின் ஒரு சிறப்பம்சம் ஆகும். பண்டத்திலும். பண்ட பரிமாற்றத்தின் செயல்பாட்டிலும் முதலாளித்துவ சமுதாயத்தின் சகல முரண்பாடுகளையும் காணலாம்.

> பண்ட பரிமாற்றம் முதலாளித்துவத்திற்கு நீண்ட காலத்திற்கு முன்பே நிலவியபோதிலும், முதலாளித்துவத்திற்கு முற்பட்ட அமைப்புகளில் அநேகமாக இயற்கைப் பொருளாதாரமே நிலவி வந்தது. ஒவ்வொரு நிலப் பிரபுத்துவ யூனிட்டுச்கும் தனக்கென ஒரு வாழ்க்கை முறை இருந்தது. நிலப் பிரபுவுக்கும் அவருடைய பணியாட்களுக்கும் தேவையானவற்றில் அநேகமாக அனைத்தையும் விவசாயிகளும் கைவினைஞர்களும் உற்பத்தி செய்ததால், வெளி உலகுடன் அதன் பரிவர்த்தனை மிக அரிதாகவே இருந்தது.
>
> விவசாயிகள் ஒரு இயற்கைப் பொருளாதார உற்பத்தியில் ஈடுபட்டிருந்தனர். அவர்கள் தானியங்களைப் பயிர் செய்தனர்; கால் நடைகளை வளர்த்தனர்; துணிகளை நெய்தனர்;

காலணிகளையும் மற்றும் சகல விதமான உழைக்கும் கருவிகளையும் செய்தனர், இயற்கைப் பொருளாதாரத்திலும்கூட, உப்பு. இரும்பு, லவங்கப் பொருட்கள், ஆடம்பரப் பொருட்கள் போன்ற சில சாமான்கள் பண்டங்களாக சந்தையில் பரிமாற்றம் செய்து கொள்ளப்பட்டன என்பது உண்மையே. ஆனல் இத்தகைய பரிமாற்றம் இரண்டாம் பட்ச முக்கியத்துவம் வாய்ந்ததாகவே இருந்தது; காரணம், அது உற்பத்தியில் அற்ப சொற்பமானதாகவே இருந்தது.

முதலாளித்துவ சமுதாயத்தில் தான் தொழிற்சாலைகளும், பண்ணைகளும் விற்பனைக்காகவே பிரதானமாக உற்பத்தி செய்கின்றன. பண்ட பண உறவுகள் வாழ்க்கையின் ஒவ்வொரு அம்சத்தின் மீதும் ஆதிக்கம் செலுத்துகின்றன; மேலும் பண்டங்களின் பரிவர்த்தனை வெகு பரவலாகிறது.

## பண்டமும், பண்ட உற்பத்தியும்

பண்ட உற்பத்தி என்பது, உற்பத்தியாளர்களின் பயனீட்டிற்காக இன்றி விற்பனைக்காகவே உற்பத்தி செய்யப்படும் ஒரு வகையான பொருளாதார ஏற்பாட்டைக் கொண்ட ஒரு சமுதாயமே.

உழைப்புப் பொருட்கள் பண்டங்களாக மாறுவதற்கு, முதன் முதலில், உழைப்புப் பிரிவினை ஏற்பட வேண்டும்; அதாவது, தமது சொந்தத் தேவைகளுக்காக மட்டுமே மக்கள் உற்பத்தி செய்யாத ஒரு நிலைமை தோன்றவேண்டும். இரண்டாவதாக, உற்பத்தி சாதனங்கள் தனி நபர்களாலோ அல்லது மக்கள் குழுக்களாலோ உடமையாக்கப்பட்டிருக்கவேண்டும். இந்த இரு நிலைமைகளும் நிலவும்போதுதான் பண்டங்களின் விற்பனையும் வாங்கலும் ஒரு பொருளாதார அத்தியாவசியமாகின்றன.

மூன்று வகையான பண்ட உற்பத்தி முறைகள் உள்ளன: **சாமான்ய பண்ட உற்பத்தி.** இதில் பொருட்கள் சிறு சிறு சுதந்திரமான உற்பத்தியாளர்களால்—கைவினைஞர்கள், விவசாயிகளால்—உற்பத்தி செய்யப்படுகின்றன; முதலாளிகள் கூலி உழைப்பாளிகளைச் சுரண்டும் **முதலாளித்துவ பண்ட உற்பத்தி; சோஷலிசப் பண்ட உற்பத்தி.**

சாமான்ய பண்ட உற்பத்தி பல்வேறு உற்பத்தி முறைகளிலும் தொடர்ந்து இருந்து வந்துள்ளது. அது சீரழிந்து வந்த பூர்வீக குலமரபு அமைப்பில் தோன்றி அடிமை - உடமை சமுதாயத்திலும். நிலப்பிரபுத்துவ சமுதாயத்திலும் நீடித்து முதலாளித்துவ சமுதாயத்திலும், முதலாளித்துவத்திலிருந்து சோஷலிசத்திற்கு மாறிச் செல்லும் கட்டத்திலும் கூட தொடர்ந்து நிலவி வருகிறது.

முதலாளித்துவ பண்ட உற்பத்தி நிலப் பிரபுத்துவ சமுதாயத்தில் தோன்றிற்று. கைத் தொழிலுக்கும் விவசாயத்திற்கும் இடையேயும், நகரத்திற்கும் கிராமப்புறத்திற்கும் இடையேயும் உழைப்புப் பிரிவினை ஏறுமுகமாக வளர்ச்சி அடைய அடைய, நிலப் பிரபுத்துவ சமுதாயம் மென்மேலும் அதிகமாக மார்க்கெட் உறவுகளில் சிக்கிப்பணத்தின் கட்டுப் பாட்டிற்குள் வந்தது. பண்ட உறவுகளின் வளர்ச்சி தான் நிலப் பிரபுத் துவத்தின் வீழ்ச்சிக்கு வழி வகுத்தது. இதன் விளைவாக, நிலப் பிரபுத் துவம் சீரழிந்து வந்த சூழ்நிலைமையில் சாமான்ய பண்ட உற்பத்தி முறையிலிருந்து முதலாளித்துவப் பண்ட உற்பத்தி முறை தோன்றிற்று.

இப்போது சாமான்ய உற்பத்தி முறை, முதலாளித்துவ பண்ட உற்பத்தி முறை ஆகியவற்றின் பிரதான அம்சங்களை ஒப்பிட்டுப் பார்ப்போம். இவை இரண்டிற்கும் பொதுவான, அம்சம் என்ன வென்றால், அவை இரண்டும் உழைப்புப் பிரிவினையையும் உற்பத்தி சாதனங்கள் உற் பத்திப் பண்டங்களின் தனிவுடமையையும் அடிப்படை யாகக் கொண்டுள்ளன. எனினும், கைவினைஞர்,விவசாயியின் சாமான்ய பண்ட உற்பத்தி முறையில் உழைப்புப் பொருட்கள் உற்பத்தியாளர் களின் உடமையாக இருக்கும் விஷயத்தில், அவ்வுற்பத்தி முறை முதலாளித்துவ வடிவ உற்பத்தி முறையிலிருந்து வேறுபடுகிறது. உற்பத்தி சாதனங்களை உடமையாக வைத்திருப்பவர்கள், ஒரு போதும் அவற்றை உற்பத்தி செய்யாத போதிலும், அவற்றைச் செய்வதற்காக ஒரு சுண்டுவிரலைக் கூட அசைக்காத போதிலும் முதலாளித்துவத்தின் கீழ் உழைப்புப் பொருட்கள் உற்பத்தி சாதனங் களின் உடைமையாளர்களின் உடமையாக இருக்கின்றன. முதலாளித் துவபண்ட உற்பத்தி முறைக்கும் சாமான்ய பண்ட உற்பத்தி முறைக்கும் இடையேயான அடிப்படை மாறுபாடு இதுவே.

## பயன் மதிப்பும், பண்டத்தின் மதிப்பும்

பண்டங்கள் என்பவை பரிமாற்றத்திற்காக உற்பத்தி செய்யப் படும் பொருட்கள் ஆகும். அவை சில தேவைகளைப் பூர்த்தி செய்ய வேண்டும், ஏதாவது ஒரு வகையில் பயனுள்ளதாயிருக்க வேண்டும் என்பது தெளிவு; இல்லாவிடில் அவற்றை யாரும் வாங்கமாட்டார்கள். ஒரு பொருள் மக்களுக்கு ஏதாவது ஒருவகையில் பயனுடையதாயிருப் பதற்கு பயன் மதிப்பு என்று பெயர்.

ரொட்டி, சர்க்கரை, வெண்ணை, பால், இறைச்சி அல்லது சூப்பு களின் பயன் மதிப்பு, அப்பண்டங்கள் மக்களின் உணவுத் தேவை களைப் பூர்த்தி செய்வதில் அடங்கியிருக்கின்றது. செருப்புக்களின் பயன் மதிப்பு அவை மக்களின் காலணித் தேவைகளைப் பூர்த்தி செய் வதில் அடங்கியிருக்கின்றது. மக்களின் தனிப்பட்ட தேவைகளைப் பூர்த்தி செய்யும் உழைப்புப் பொருட்கள் தவிர, பொருளாயத

செல்வத்தை உற்பத்தி செய்வதற்காகப் பயன் படுத்தப்படும் உற்பத்தி சாதனங்களுக்கும் ஒரு பயன் மதிப்பு உள்ளது.

பண்டங்களைப் பயன்படுத்துவதற்கு முன்பு ஒவ்வொருவனும் முதலில் அதை வாங்கியாக வேண்டும் என்பது உண்மையே. ஒரு குறிப்பிட்ட அதே அளவு பணத்தைக் கொண்டு ஒரு குளிர்பதனப் பெட்டியையோ, நான்கு சூட்டுகளையோ, மூன்று தையல் இயந்திரங் களையோ வாங்க முடியும் என்பதை இந்த சந்தர்ப்பத்தில் நாம் காண்கிறோம். வேறு சொற்களில் கூறுவதெனில், ஒரு குளிர்பதனப் பெட்டியின் விலை நான்கு சூட்டுகளின் விலைக்கு ஈடாகும்; இது போன்று இதரவற்றையும் பற்றிக் கூறலாம். இதன் பொருள் என்னவென்றால் முற்றிலும் வெவ்வேறான பண்டங்களுக்கு அவை ஒவ்வொன்றையும் மற்றொன்றுடன் ஒரு குறிப்பிட்ட விகிதத்தில் ஒப்பிட்டுப்பார்ப்பதற் கான ஏதோ ஒரு பொதுவான அம்சம் உள்ளது என்பதாகும். குறிப்பாகச் சொல்வதெனில், இவையெல்லாம் மனித உழைப்புப் பொருட்கள் என்ற பொருளில் ஒரு பொதுவான அம்சம் இருக்கின்றது. இதுதான் அவற்றை ஒன்றுடன் மற்றொன்றை ஈடாக்குகின்றது. பண்டங்களை மதிப்பீடு செய்யும் போது, அவற்றை ஒன்றுடன் மற்றொன்றை ஒப்பிடும் போது, நாம் உண்மையில் அவற்றில் அடங்கியுள்ள உழைப்பின் அளவைத்தான் ஒப்பிடுகிறோம். ஒரு பண்டத்தில் அடங்கியுள்ள உழைப்புத்தான் பண்டத்தின் மதிப்பை நிர்ணயம் செய்கிறது. உழைப்பே மதிப்பல்ல; பண்டங்கள் பரிமாற்றத்திற்காக உற்பத்தி செய்யப்படும்போது மட்டுமே அது மதிப்பைப் பெறு கின்றது.

மதிப்பின் முக்கியமான தன்மையை முழுமையாகப் புரிந்து கொள்வது எளிதான காரியமல்ல. மார்க்ஸ் சுட்டிக் காட்டியிருப்பது போன்று மதிப்பு தன்மட்டில் எவ்விதமான சாரமும் உடையதன்று. மதிப்பு என்ற கருத்தை நாம் படிப்படியாக ஆய்வு செய்ய முயல்வோம்.

மதிப்பு என்பது ஒரு பண்டத்தில் அடங்கியுள்ள உழைப்பாதலால் அதன் பரிமாணம் இந்தப் பண்டத்தைச் செய்வதற்குப் பயன்படுத்திய உழைப்பின் அளவைச் சார்ந்திருக்கும். இந்த அளவு வேலை நேரத்தின் அளவினால் வரையறுக்கப்படுகிறது. இதன் விளைவாக இந்த நேரம், உழைப்பின் அளவாகவும், மதிப்பின் அளவாகவும் விளங்குகிறது. வேலை நேரமே மணிகள் நாட்கள் என்று அளவிடப்படுகின்றது.

ஒரு பண்டத்தை உற்பத்தி செய்வதற்கு எந்தளவு அதிக உழைப்புத் தேவைப்படுகிறதோ அந்த அளவுக்கு அதன் மதிப்பு உயரும். இதை விளக்க இதோ ஒரு சாதாரணமான உதாரணம்: ஒரு சுரங்கத் தொழிலாளி 10 டாலர் மதிப்புடைய தாதுவை வெட்டி எடுக்கிறார் என்று வைத்துக் கொள்வோம். ஓர் ஊதுலை இயக்குநர் இந்தத் தாதுவை உருக்கி 30

> டாலர்கள் மதிப்புடைய தேனிரும்பு செய்கிறார். இந்தத் தேனிரும்பு 100 டாலர்கள் மதிப்புடைய உருக்கைச் செய்ய உதவுகிறது. இந்த உருக்கை 300 டாலர் மதிப்புள்ள ஊசிகள், 900 டாலர் மதிப்புள்ள கத்திகள், அல்லது 3000 டாலர் மதிப்புடைய கடிகார ஸ்பிரிங்குகள் செய்யப் பயன் படுத்தலாம். ஒவ்வொன்றிலும் ஒரே அளவிலான உருக்குப் பயன்படுத்தப்பட்டுள்ளது. அப்படியிருக்க, கத்தி குண்டூசியைவிட அதிக விலையும், ஸ்பிரிங்குகள் கத்தியைவிட அதிக விலையுள்ளதாயும் இருப்பதேன்? இதற்குக் காரணம் மதிப்பு அதிகமுள்ள பண்டங்களைச் செய்வதற்கு மேலும் அதிக அளவிலான உழைப்பு தேவைப்படுகிறது என்பதே.

பண்டங்களை உற்பத்தி செய்யும் மக்கள் பல்வேறான நிலைமைகளில் வேலை செய்கிறார்கள், பல்வேறான உழைப்புக் கருவிகளைப் பயன் படுத்துகிறார்கள், பல்வேறு வகையான தனித் தேர்ச்சியுடையவர்களாக இருக்கிறார்கள், ஒரே விதப் பண்டங்களை உற்பத்தி செய்ய வெவ்வேறு அளவிலான நேரத்தைச் செலவிடுகிறார்கள். ஆயினும் மார்க் கெட்டில் ஒரே விதமான பண்டங்களுக்கு ஒரே விதமான மதிப்பு இருக்கிறது. இதன் விளைவாக, ஒரு பண்டத்தின் மதிப்பு உற்பத்தி யின் அல்லது உற்பத்தியாளரின் தனிப்பட்ட அம்சங்களைச் சார்ந்த தாக இல்லை, மாறாக, நிலவும் உழைப்பு நிலைமைகளை, சமூக ரீதியில் அவசியமான உழைப்பு நேரத்தைச் சார்ந்ததாக இருக்கிறது.

மதிப்பு என்ற கருத்தை நாம் வரையறுக்கலாம். மதிப்பு என்பது ஒரு பண்டத்தை உற்பத்தி செய்வதில் செலவழிக்கப்படும் சமூக ரீதியில் அவசியமான உழைப்பாகும்.

மதிப்பு என்பது வரலாற்று வகைப்பட்டதாகும். அது பண்ட உற்பத்தியின் தனி அம்சமாகும். இயற்கைப் பொருளாதாரம் நிலவிய பொழுதில் மதிப்பு இருக்கவில்லை. கம்யூனிச சமூக அமைப்பின் உயர்கட்டத்திலும் அது நிலவாது. ஏனெனில் அந்தக் காலகட்டத்திற்குள் பண்ட உற்பத்தி என்பது மிகையானதாகி விடும். எனவே மதிப்பு என்பது பொருட்களின் உள்ளார்ந்த தன்மை அன்று. மாறாக, உற்பத்தியாளர்களிடையிலான சமூக உறவின் வெளிப்பாடாகும்.

ஒரு பண்டத்தைச் செய்யத் தேவைப்படும் சமூக ரீதியில் அவசிய மான வேலை நேரம் மாறுதலடையாது இருப்பதில்லை. உற்பத்தி சக்திகள், விஞ்ஞானம் தொழில் நுட்பம் ஆகியவை முன்னேறுந்தோறும் அது குறுகியதாகிறது.

> பிரிட்டனில், 1784 ல் ஒரு பவுண்டு நூலின் விலை 130 பென்சுகளாக இருந்தது. 1823 ல் இது ஏறத்தாழ 11

பென்சுக்குச் சரிந்தது. நூற்பு யந்திரம் கண்டுபிடிக்கப்பட்டு விரிந்த அளவில் புகுத்தப்பட்டதை ஒட்டி நூல் ஆலைகளில் செய்யப்பட்டது, அதன் மதிப்பு யந்திர உற்பத்தியால் நிர்ண யிக்கப்பட்டது. நூற்பு ராட்டைகளைப் பயன்படுத்தி வந்த கைவினைஞர் நூல் உற்பத்திக்கு ஆலைகளைவிட அதிக நேரம் செலவிட்டனர். அதே பொழுதில் அதன் மதிப்பு ஆலை நூலின் அளவுக்குக் குறைக்கப்பட்டது. போட்டியைச் சமாளிக்க முடியாமல் கைவினைஞர்கள் நாசமாயினர்.

ஒரு பண்டத்தின் மதிப்பு தொழிலாளர் உற்பத்தி ஆற்றலைச் சார்ந்த தாக இருக்கிறது என்பதை இந்த உதாரணம் காட்டுகிறது. உற்பத்தி ஆற்றல் அதிகரிக்க அதிகரிக்க ஒரு பண்டத்தைச் செய்வதற்குச் செலவழிக்கப்படும் நேரம் குறைகிறது, அதன் மதிப்பும் குறைகிறது.

தொழிலாளர் உற்பத்தி ஆற்றல் ஒரு குறிப்பிட்ட கால அளவில் ஒரு மணி அல்லது ஒரு நாளில் உற்பத்தி செய்யப்படும் பொருட்களின் அளவால் நிர்ணயிக்கப்படுகிறது. முதன் முதலாக இது உழைப்புக் கருவிகள், அவற்றின் தொழில்நுட்ப மட்டம் ஆகியவற்றைச் சார்ந்த தாக உள்ளது. எந்திரங்கள் எத்துணை சிறந்தனவாக உள்ளனவோ அந்தளவுக்கு தொழிலாளர் உற்பத்தி ஆற்றல் அதிகமாக இருக்கும். உற்பத்தி ஆற்றல் தொழிலாளர் தேர்ச்சியாலும், எந்திரங்களைப் பயன் படுத்தும் திறமையாலும் சாதக பாதகத்திற்குள்ளாகும். விஞ்ஞான முன்னேற்றத்தின் மட்டமும் மிகவும் முக்கியமானதாகும். விஞ்ஞான சாதனைகள் எந்தளவு துரிதமாக உற்பத்தியில் புகுத்தப் பெறுகின்றன வோ அந்தளவுக்கு தொழிலாளர் உற்பத்தியாற்றலின் குறியீடுகள் உயரும். இறுதியாக தொழிலாளர் உற்பத்தி ஆற்றல் இயற்கை நிலைமை களையும் சார்ந்ததாக இருக்கிறது. உதாரணமாக பயிர் சாகுபடி விஷயத்தில் மண்ணின் வளமும், சாதகமான பருவநிலையும் பெரும் பங்கு வகிக்கின்றன. சுரங்கத் தொழில், எண்ணெய் தோண்டி எடுக்கும் தொழில்களில் தாதுக்கள், எண்ணெய் வளப்படிவங்கள் இருப்பதையும் கிடைப்பதையும் சார்ந்தே அனைத்தும் உள்ளன.

தொழிலாளர் உற்பத்தி ஆற்றல் எல்லா நிறுவனங்களிலும் ஒரே அளவில் உயர்வது கிடையாது. பொதுவாக இது மிகவும் முன்னேற்ற மான தொழில்நுட்பத்தையும், மிகவும் நவீனமான எஞ்சினியரிங் முறைகளையும் கையாளும் சிலவற்றில் மட்டுமே உயர்கிறது.

ஒரு குறிப்பிட்ட தொழிலில், பெரும்பாலான ஆலைகளில் ஒரு தொழிலாளி எட்டு மணி வேலை நேரத்தில் எட்டுப் பண்ட யூனிட்டுகளை உற்பத்தி செய்வதாகவும், ஒரு மணி நேர வேலை இரண்டு டாலர்கள் புதிய மதிப்பை உருவாக்குவதாயும் வைத்துக் கொள்வோம். அவ்வாருக நாள் பூராவும் அவர் 16 டாலர் புதிய மதிப்பை உருவாக்குகிருர்.

ஓர் ஆலையில் புதிய யந்திரம் அல்லது புதிய முறை புகுத்தப் பெற்று மேம்பாடு செய்யப்பட்டுள்ளது என்று வைத்துக் கொள்வோம். அவை பயன்படுத்தப் பெற்றதால் தொழி லாளர் உற்பத்தி ஆற்றல் இருமடங்காகியது. இதன் விளைவாக, எட்டு மணி வேலை நாளில் இந்த ஆலையானது 8 க்குப் பதில் 16 பண்ட யூனிட்டுகளை உற்பத்தி செய்யும். ஒரு பண்ட யூனிட்டின் தனிப்பட்ட மதிப்பு குறையும், இரண்டு டாலர் களுக்குப் பதில் ஒரு டாலராகும்.

எனினும், முன்னேற்றமான ஆலையில் தொழிலாளர் உற்பத்தி ஆற்றல் அதிகரித்து, மதிப்பு யூனிட்டுக்கு இரண்டு டாலர்களாகவே இருந்த போதிலும், இந்த வகையான பண்டத் தின் சமூக மதிப்பு மாற்றமடையவில்லை. சம்பந்தப்பட்ட ஆலையில் இந்தப் புதிய முறைகளைப் புகுத்திய உடமையாளர், தனது பண்டத்தை சமூக மதிப்புக்குத் தொடர்ந்து விற்பனை செய்வார், அவரது போட்டியாளருடன் ஒப்பிடும்போது ஒவ்வொரு யூனிட்டிலும் ஒரு டாலர் உபரியாகப் பெறுவார். இந்த உபரி, பண்டத்தின் சமூக மதிப்புக்கும் அதன் தனிப்பட்ட மதிப்புக்கும் இடையிலான வித்தியாசத்திற்குச் சமமாக இருக்கும்.

வேறு முதலாளிகளும் அதிக லாபம் அடைய விரும்புவார்கள், எனவே அவர்களும் உற்பத்தியாற்றலால் ஏற்படும் பொதுவான உயர்வு பண்டத்தின் மதிப்பைக் குறைத்துவிடுமாயினும் சரி, முன்னேற்றமான நிறுவனங்களுடன் போட்டி போட முயன்று உற்பத்தியை மேம்படுத்த வும், தொழிலாளர் உற்பத்தி ஆற்றலைப் பெருக்கவுமான வழி வகைகளைத் தேட முயல்கிறார்கள்.

குறிப்பிட்ட தொழில் துறையில், பெரும்பாலான தொழிற் சாலைகள் தொழிலாளர் உற்பத்தி ஆற்றலை உயர்த்தி, ஒரு தொழிலாளி எட்டு மணி நேரத்தில் எட்டுக்குப் பதில் 16 பண்ட யூனிட்டை உற்பத்தி செய்வதை சகஜமாக்குமானால், ஒரு பண்ட யூனிட்டை உற்பத்தி செய்வதற்கான சமூக ரீதியில் அவசியமான நேரம் ஒரு மணியிலிருந்து 30 நிமிடங்களாகக் குறையும், அதன் சமூக மதிப்பும் இதற்கேற்ப 50 சதவிகிதம் சரியும்.

இதன் விளைவாக எல்லா முதலாளிகளும் ஒரே நிலையில் இருப்பார்கள். மற்றவர்களை விட அதிகமாக உற்பத்தி செய்வதற்கு ஒவ்வொரு உடமையாளரும் தொழிற்சாலையில் தொழிலாளர் உற்பத்தி ஆற்றலை அதிகரிக்க முயல்கிறார்கள். இந்தச் சுற்று வட்டம் மீண்டும் மீண்டும் நடைபெறும், உற்பத்தி சக்திகளின் உயர் மட்டத்தில் நடைபெறும்.

தொழிலாளர் உற்பத்தியாற்றலின் பெருக்கம் ஒவ்வொரு அமைப்புக்கும் அவசியமானது, ஏனெனில் இதுவே சமுதாயத்தின் பொருளாதார கலாசார முன்னேற்றத்திற்கும் பிரதான முன்தேவை.

தொடர்ந்து வரும் ஒவ்வொரு உற்பத்தி முறையும் முந்தியதைக் காட்டிலும் உயர்ந்த தொழிலாளர் உற்பத்தி ஆற்றலைச் சிறப்பம்சமாகக் கொண்டுள்ளது. இது சமுதாயத்திற்கு அதிகமான பண்டங்களையும் மேலதிகமான செல்வத்தையும் அளிக்கிறது. தொழிலாளர் உற்பத்தி ஆற்றலின் வளர்ச்சியே பழையதைவிட புதிய சமூக அமைப்பு சாதகமானது என்பதைக் காட்டுகிறது.

''இறுதியாக ஆய்வு செய்து பார்க்கும்பொழுது தொழிலாளர் உற்பத்தி ஆற்றலே புதிய சமுதாய அமைப்பின் வெற்றிக்கான மிக முக்கியமான பிரதான அம்சம்''. முதலாளித்துவம் அடிமை சமுதாயத்தில் என்றும் கண்டிராத அளவு, தொழிலாளர் உற்பத்தி ஆற்றலை உருவாக்கியது. சோஷலிசம் புதிய, மேலும் மிக உயர்ந்த தொழிலாளர் உற்பத்தி ஆற்றலை உருவாக்குவதன் மூலம் முதலாளித்துவத்தை முற்றிலும் முறியடிக்க முடியும், முறியடிக்கும் என்று லெனின் சுட்டிக் காட்டியிருக்கிறார். [1]

## பணம்

பண்டங்களைப் பரிமாற்றம் செய்யும் சமூக அமைப்பில் பணம் இன்றியமையாதது. பணமும் ஒரு பண்டமே, மற்ற பொருட்கள் அனைத்தின் மதிப்பையும் வெளிப்படுத்தும் ஒரு பண்டத்தின், உலகளாவிய சம மதிப்பின் பாத்திரத்தை வகிப்பது மூலம் மற்ற பலவற்றிடமிருந்து இது தனியாகப் பிரித்துக் காட்டப்படுகிறது. பணம் அரங்கத்திற்கு வந்த பொழுது ஒரு புதிய பொருளாதார சக்தி தோற்றமளித்தது, அதை உடமையாக வைத்திருந்தவர்களுக்கு செல்வமும் அதிகாரமும் அளித்தது. பணம் பண்டங்களின் பண்டம், மற்ற அனைத்தையும் மறைவான வடிவில் வைத்திருக்கும் பண்டம் என்று எங்கெல்ஸ் சித்தரித்தார். ஜாலவித்தை போன்று அது கண்கவரும் விருப்பமான எந்தப் பொருளாக வேண்டுமாயினும் மாறவல்லது. பண்ட-பண உறவுகள் வளர வளர பணத்தின் வலிமை தொடர்ந்து அதிகரிக்கிறது. முதலாளித்துவ சமூகத்தில் உயர் முன்னேற்றமடைந்த பண்ட உற்பத்தி முறையின் கீழ், பணம் மக்கள் மீது ஆட்சி செலுத்துகிறது, மக்களை அடிமைப்படுத்துகிறது.

சமூக உற்பத்தி உறவுகளின் வெளியீடு என்ற முறையில் மட்டுமே பணத்திற்குப் பொருள் உள்ளது. ராபின்சன் குரூசோ நிர்மானுஷ்யமான தீவில் தன்னந்தனியனாகத் திண்டாடியபோது பணத்தைத் தவிர தகர்ந்துபோன கப்பலிலிருந்து மீட்ட பொருட்கள் அனைத்தையும் பயன்

---

1. லெனின், தொகுப்பு நூல்கள், பாகம் 29. பக். 427.

படுத்த முடிந்தது. பரிமாற்றம் செய்து கொள்ள எவரும் இருக்க வில்லை, எனவே முதலாளித்துவ சமூக அமைப்பில் ஆகப்பெரும் மதிப்பை உடைய பண்டமான பணம், அங்கே அதன் வலிமையை இழந்து சாமான்யமாகிவிட்டது, உண்மையில் பயனற்றதாகிவிட்டது. ''அந்தோ ? அருவருப்பான, மோசமான பயனற்ற சரக்கு கிடக்கிறது'' என்றார் ராபின்சன் குரூசோ.

தங்கத்தைப் பொருத்தவரை அது பொதுவாக ஏற்கப்பட்டுள்ள பணம் எனும் பண்டமாகும். அதன் இயல்பான தன்மைகளால் தங்கம் பணத்தின் சமூகச் செயல்பாடுகளை நிகழ்த்த மிகவும் வசதியான சாதனமாகும். அதை எளிதில் பகிர்ந்தளிக்கலாம், மதிப்புக் குறையாது ஒன்று சேர்க்கலாம். இது காற்றில் தேய்ந்து போகாது எனவே பத்திர மாக வைத்திருக்கலாம். மேலும் அதன் கனத்தை நோக்கில் பரிமாணம் குறைவே, மதிப்போ கணிசமானது.

பணம் பல பணிகளைச் செய்கிறது. முதலாவதாக அது ஒரு மதிப்பின் அளவுகோலாகச் செயல்படுகிறது, அதாவது அது இதர பண்டங்களின் மதிப்பை அளவிடப் பயன்படுத்தப்படுகிறது.

ஒவ்வொரு பண்டமும் ஒரு குறிப்பிட்ட அளவு பணத்திற்கு விற்பனை செய்யப்படுகிறது, இதுவே அதன் மதிப்பை வெளிப்படுத்துகிறது. பண உருவிலான ஒரு பண்டத்தின் மதிப்பே அதன் விலையாகும்.

வழங்கலும் தேவையும் சமமாக இருக்க பண்டங்களின் மதிப்பை பண உருவில் வெளியிடும் முறையில் பண்டங்களின் விலைகள் இரு காரணங்களைச் சார்ந்து இருக்கின்றன : பண்டங்களின் மதிப்பு, தங்கத் தின் மதிப்பு. தங்கத்தின் மதிப்புக் குறைவாக இருக்குமளவுக்கு விலை அதிகமாக இருக்கும். எதிர்மாறாகவும் இருக்கும். இதன் விளைவாக, பண்டங்களின் விலைகள் அவற்றின் மதிப்புக்கு நேர்விகிதமாயும், தங்கத் தின் மதிப்புக்கு எதிர் விகிதமாயும் வேறுபடும்.

பணம் மதிப்பின் அளவு கோலாக லட்சியப்பணி புரிகிறது. இதன் பொருள் என்னவென்றால், பண்டங்களின் மதிப்பை அளவிட ரொக்கம் அவசியம் என்பது இல்லை. விற்பனை, கொள்முதல் பணத்திற்காக பண்டங்கள் பரிமாற்றம் ஆகியவை பலமுறை மீண்டும் மீண்டும் நடத்தப் படுகின்றன. வாங்குவோர் விற்பனை செய்வோர் மனப்போக்கு பண்டத்தை அதன்மதிப்புக்குரிய பணத்திற்கு (தங்கம்) சமமாகக் கருதுகிறது.

பணத்தின் உதவியுடன் பண்டங்கள் பரிமாற்றம் செய்யப்படும் பொழுது, பணமும் புழக்கத்திற்குரிய சாதனமாக உதவுகிறது. இந்தக் காரியத்தைச் செய்ய பணம் உண்மையில் வேண்டும். வெறும் கற்பனை ஆற்றலில் சேவை செய்தால் மட்டும் போதாது. பணப் புழக்

கத்தின் ஊடே தனது பண்டங்களை விற்பனை செய்து இன்று பணம் பெற்ற ஓர் உற்பத்தியாளர் நாளை வேறு உற்பத்தியாளர்கள் செய்துள்ள பண்டங்களை வாங்க அதைச் செலவழிக்கிறார். புழக்கத்திற்கான மார்க்கம் என்ற முறையில் பணம் பண்டங்கள் பரிமாற்றத்தில் ஒரு சாதனமாகச் செயல்படுகிறது, இதை மதிப்பின் சின்னங்கள் அடையாளங்கள் மூலம், காகிதப் பணம் மூலம் இட்டு நிரப்பலாம். இந்த மதிப்பின் அடையாளங்களைப் பெற்றிருக்கும் எவரும் அவை வேறு பண்டங்களுக்காகக் கொடுபடும்போது அவரிடமிருந்து ஏற்கப்படும் என்று உத்தரவாதம் வேண்டும். இதனால் தான் அரசுகள் காகிதப் பணத்தை சட்டப்படி செல்லும் என்று பிரகடனப் செய்கின்றன.

முதலாளித்துவ உலகில் பண நெருக்கடிகள் பற்றி பத்திரிகைகள் வெளியிடும் அறிக்கைகள் விமரிசனங்களில் சில குறிப்பிட்ட சொற்களை அடிக்கடி பயன்படுத்துகின்றன. சாதாரணமாகப் பயன்படுத்தப் பெறும் சொற்களை மேலும் கூர்ந்து நோக்கி பொதுவாக எது எதைக் குறிக்கிறது என்பதைத் தெரிந்து கொள்வது பயனுடையதாகும்.

புழக்கத்திலுள்ள காகிதப் பணத்தின் தொகைக்கு முற்றிலும் நிகரான தங்கம் இருக்கும் பட்சத்தில் அதன் வாங்கும் சக்தி தங்கத்திற்குச் சமமானதாக இருக்கும். ஆனால் வழக்கமாக முதலாளித்துவ நாடுகள் தமது செலவுகளை, குறிப்பாக போர்க்காலங்களில் சமாளிப்பதற்காக வர்த்தகப் புழக்கத்தின் தேவைகளை எதுவாக இருப்பினும் அமிதமான அளவில் காகித நோட்டுகள் வெளியிடுகின்றன. இவ்வாறு காகிதப் பணம் அமிதமாக வெளியிடப்படுவதால் அதன் மதிப்புக் குறைந்து விடுகிறது, பண வீக்கம் ஏற்படுகிறது. இது குறிப்பாக அவர்களது சம்பள உயர்வு, வாழ்க்கை சாதனங்களின் விலையிலிருந்து மிகவும் பின்தங்கி நிற்பதன் காரணமாக உழைக்கும் மக்கள் மீது, குறிப்பாக ஆலை அலுவலகத் தொழிலாளர் மீது கனத்த சுமையாக ஏறுகிறது. குடியானவர்களைப் போன்ற சிறு உற்பத்தியாளர்களும் பணவீக்கத்தால் தொல்லையுறுகின்றனர். இதனால் பாதிக்கப்படாமலிருப்பவர்கள் முதலாளிகளும் பெரும் தொழில் உடமைகளுமே, அவர்கள் இதிலிருந்து லாபம் கூடப் பெறுகின்றனர்.

எனினும் பணவீக்கம் முதலாளித்துவப் பொருளாதாரத்திற்கு ஆபத்தாக வரும் கட்டத்தில் அரசு நிதி அமைப்பை ஸ்திரப்படுத்த நடவடிக்கைகள் எடுக்கிறது. எத்தனையோ வகையான சீர்திருத்தங்கள் புகுத்தப்படுகின்றன. இதில் முதலாவது, மதிப்பைக் குறைத்தல், செலாவணியின் தங்க உள்ளடக்கத்தைக் குறைப்பது.

பணம் சேகரிப்பதற்கான சாதனமாக செல்வத்தைக் குவித்து வைத்திருப்பதற்கோர் மார்க்கமாயும் உதவுகின்றது. பணத்தால் எதையும் வாங்கலாம் என்ற உண்மையிலிருந்தே இந்தச் செயல்பாடு கிளைக்கிறது. இது செல்வத்தின் உலகளாவிய சின்னம், அதைப் பதுக்கி வைக்கும்

சாதனம். புழக்கத்திலிருந்து எடுபட்டு விட்டால் பணமானது, சுத்தத் தங்கத்திலான பொருள்கள், வெள்ளிப் பொருள்கள், அரிய உலோகங்கள், அல்லது உயர் கற்கள் வடிவிலான வெறும் கருவூலமாகி விடுகிறது.

பணம் எப்போதும் ரொக்கமாகப் புழங்குவதில்லை. பொருள்கள் வாங்கப்பட்டுத் தவணையில் பணம் செலுத்தப்படுகிறது. இதற்குக் காரணம் பண்டங்களை உற்பத்தி செய்ய பல்வேறு கால அளவு தேவைப் படுகிறது, அவற்றின் செய் முறையும் விற்பனையும் பருவங்களை அடிப் படையாக்கியவை.

உதாரணமாக, ஓர் உற்பத்தியாளர் வசந்த காலத்தில் ஒரு டிராக் டரை உற்பத்தி செய்து விற்பனைக்கு வைக்கிறார். விவசாயிக்கு இது தேவை. ஆனால் அறுவடை நடைபெறும் முன்பனிக் காலம் வரை இதை வாங்குவதற்குரிய பணம் அவர் கையில் இல்லை. இந்த நிலையைச் சமாளிப்பதற்கு விவசாயி இந்த யந்திரத்தைத் தவணை முறையில் வாங்கு கிறார்; இந்த விஷயத்தில் பணம் கொடுப்பல் சாதனமாக செயல்படுகிறது. பண்டங்கள் பேரம் சம்பந்தமில்லாத நடவடிக்கைகளிலும் - உதாரண மாக வரிகளை வசூலித்தல் - இது இந்த முறையில் செயல் படுகிறது.

நாடுகளிடையிலான பொருளாதார உறவுகளில் பணம் உலகப் பண மாக செயல்படுகிறது. தங்கப் பவுன் என்ற தனது மூலவடிவில் பணி யாற்றுவதற்காக அது தனது தேசிய அம்சங்களை உதறி விடுகிறது. நாடுகளிடை கணக்குத் தீர்த்துக் கொள்ளத் தங்கம் எடைக்கணக்கில் ஏற்றுக் கொள்ளப்படுகிறது.

> ஒரு தேசியச் செலாவணியை உலக செலாவணியாகவும் பயன்படுத்தலாம். எந்த ஒரு தேசிய பாங்கின் வேண்டுகோள் படியும் இது சுதந்திரமாகத் தங்கத்துடன் பரிவர்த்தனை செய்யப் படலாம் ஒரு குறிப்பிட்ட சமவிகிதத்தின் கீழ் இதைச் செய்ய லாம், மாற்றக்கூடிய செலாவணியாக இதை ஆக்கலாம். முதல் உலகப் போருக்கு முன்னால், பவுன் (பிரிட்டிஷ் நாணயம்) பிரதான உலகச் செலாவணியாக இயங்கியது. பின்னர் அதனிடத்தை அமெரிக்க டாலர் பிடித்துக் கொண்டது.

இதன் விளைவாக, முதலாளித்துவ சமூக அமைப்பில் பணம் (1) மதிப்பின் அளவுகோலாக, (2) புழக்கத்தின் சாதனமாக (3) சேகரிப்பின் சாதனமாக (4) கொடுப்பலுக்குரிய சாதனமாக (5) உலகப் பணமாக செயல்படுகிறது.

## மதிப்பின் விதி

முதலாளிகள் உற்பத்தியில் ஈடுபடும்போது பெரும்பாலும் அவர்கள் தமது சொந்த வழிகளில் செயல்படுகிறார்கள். ஒரே மாதிரியான பண்டங்களை எத்தனை தொழிற்சாலைகள் உற்பத்தி செய்யும், ஒன்று

அல்லது இரண்டாண்டுகளில் எவ்வளவு உற்பத்தி செய்யப்பட்டு மார்க்கெட்டிற்கு வரும், வாடிக்கையாளர்களால் எந்தளவுக்கு வாங்க முடியும் என்பது பற்றியெல்லாம் யாருக்கும் சரியாக முன்கூட்டித் தெரிந்திருக்காது. இந்த நிலைமை உற்பத்தியில் அராஜகத்தை நோக்கி, முதலாளித்துவப் பொருளாதாரம் முழுவதிலும் ஸ்தாபன முறைபோ திட்டமோ இல்லாத ஒரு போக்குக்கு இட்டுச் செல்லும். ஒரு முதலாளி தனது நிறுவனத்தில் விவகாரங்களை நடத்தி வந்த போதிலும், அவர் மார்க்கெட்டை சார்ந்து நிற்கிறார், அதன் பொருளாதார விதிகள் அவரது கட்டுக்கு மீறியவை.

உற்பத்தியிலான அராஜகம், போட்டியுடன் - மேலும் ஆதாயகரமான உற்பத்தி, விற்பனையில் சாதகம், உயர் லாபங்களுக்காக முதலாளிகளிடையே நடைபெறும் மூர்க்கமான போராட்டத்தோடு - பிரிக்க முடியாதபடி இணைந்துள்ளது. முதலாளித்துவ உலகில் சமூகத்தின் நலனுக்காக சொத்து உடமையாளர்கள் தமது உற்பத்தி சாதனங்களைப் பயன்படுத்த வேண்டும் என்று எவரும் கட்டாயப்படுத்த முடியாது.

இத்தகைய அமைப்பு வளர்ச்சியடைவது ஒருபுறமிருக்க எப்படி வாழ முடியும் என்று அதிசயிக்கத் தோன்றும். இதற்குள்ள விளக்கம் என்னவென்றால் மறைவாக ஒரு சக்தி இருக்கிறது என்பதே. இந்த சக்தி தான் மதிப்பின் விதி, இது முதலாளித்துவ உற்பத்தியைத் தானாகவே முறைப் படுத்துகிறது.

இந்த விதிபின்படி பண்டங்கள் அவற்றை உற்பத்தி செய்வதற்குச் செலவழிக்கப் பெற்ற சமூக ரீதியில் அவசியமான உழைப்பின் அளவுக்கான விலைகளில் பரிவர்த்தனை செய்யப்படுகிறது, ஒரு பண்டத்தின் விலை கொள்கை அளவில் அதன் மதிப்புக்கு இணையானதாகும். ஆனால் மார்க்கெட் விலைகள், வரத்து விற்பனை ஆகியவற்றின் தாக்கத்தின் கீழ் யதேச்சையாக நிர்ணயிக்கப்படுகின்றன. பண்டங்களின் வரத்து தேவையை விடவும் அதிகமாக இருப்பின் விலை பண்டத்தின் மதிப்பை விடக் குறைவாக இருக்கும். தேவையும் வரத்தும் ஒன்றாக இருக்குமானால், விலை, மதிப்புக்குச் சமமானதாக இருக்கும். ஊசலாட்டமான விலைகளின் செல்வாக்கின் கீழ் முதலாளிகள் பண்டங்களின் விலை மதிப்பை விடக் குறைவாக உள்ள தொழில்களிலிருந்து, மதிப்பை விட விலை கூடுதலாக உள்ள பண்ட உற்பத்தித் தொழில்களுக்குத் தம் முதலீடுகளை மாற்றுகிறார்கள்.

ஒரு காரின் மதிப்பு 4000 டாலர்கள் என்று வைத்துக் கொள்வோம். உற்பத்தியாளர் ஒருவர் தேவையைத் தவறுதலாகக் கணக்கிட்டு தேவைக்கு மேல் அதிகமான கார்களை உற்பத்தி செய்தார். விலை ஏற்பாடுக்குப் பொருத்தமாக மார்க்கெட் தானாகவே பிரதிபலிக்கிறது. போட்டியின் விளைவாக

காரின் விலை அதன் மதிப்புக்குக் குறைவாக இறங்கி 3000 டாலர் தான் பெற்றுத் தரும். விலை மதிப்புக்கும் கீழே விழுவதால், கார் உற்பத்திச்சாலை உடமையாளர்கள் உற்பத்தியை வெட்டுவார்கள். போட்டியைத் தாங்க முடியாது தோல்வியுற்ற பல முதலாளிகள் விலைகள், மதிப்பை விடவும் அதிகமாக இருக்கும் தொழில்களுக்குத் தமது முதலீட்டை மாற்றிக் கொள்ளும் கட்டாயத்திற்குள்ளாகிறார்கள். முன்னால் 2,50,000 கார்கள் உற்பத்தி செய்யப்பட்டிருந்தது, இப்போது 1,70,000 மாக வெட்டப்பட்டதாக வைத்துக் கொள்வோம்; டைரக்டர்கள் மீண்டும் தவறாகக் கணக்குப் போட்டிருப்பது தெரிய வருகிறது. தேவை 2,00,000 கார்கள், உற்பத்தியானது 1,70,000, எனவே விலை மீண்டும் மதிப்பை விட அதிகமாகிறது, சுமார் 4500 டாலராக உயர்கிறது. எனவே மீண்டும் விஸ்தரிப்பு, இதர தொழில்களிலிருந்து இதற்குப் புதிய மூலதனம் திருப்பப்படுகிறது. விலைகள் ஏறி இறங்கத் தொடங்கி மீண்டும் மதிப்பை விடக் குறைகின்றன, மறுபடியும் உற்பத்தி வெட்டு, தொடர்ந்து மதிப்பை விட விலை உயர்வு என்று இந்தச் சக்கர வட்டம் திரும்பத் திரும்ப நிகழ்கிறது.

மதிப்பைச் சுற்றி விலைகள் தாமாகவே ஏற்ற இறக்கம் காட்டுவதே முதலாளித்துவ பண்ட உற்பத்தியை முறைப்படுத்துவதற்கான சாத்தியமான ஒரே ஏற்பாடு. ஒரு தொழிலில் உற்பத்தியை அதிக லாபகரமாக்கும் அல்லது, குறைந்த லாபகரமாக்கும் விலை ஏற்ற இறக்கம் அத்தொழில் உற்பத்தியை விரிவுபடுத்துமா வெட்டிக் குறைக்குமா என்பதை நிர்ணயிக்கும். இதுவே மதிப்புப் பற்றிய விதியின் சாரம். முதலாளித்துவத்தின் கீழ் இந்த விதி ஒரு தொழிலில் பண்டங்கள் பரிமாற்றத்தையும், உற்பத்தி சாதனங்களின் வினியோகத்தையும், உழைப்பையும் முறைப்படுத்துகிறது.

விலைகள் பற்றிய மார்க்கெட் ஏற்றத் தாழ்வுகள், வரத்து தேவை ஆகியவை உற்பத்தியாளர்களிடையே அசமத்துவங்களை விளைக்கிறது. அவர்களில் சிலர் பஞ்சைகளாகி வருகிறார்கள், அதே பொழுதில் சிலர் செல்வம் செழிக்க வாழ்கின்றனர். இது தவிர்க்க வொண்ணாத விளைவு, ஓர் உற்பத்தியாளர் போட்டியாளரால் இந்தத் துறையிலிருந்தே துரத்தி ஒதுக்கப்படாமல் வாழ விரும்புவாரானால், அவர் தமது பண்டங்களை மலிவாக விற்கவேண்டும், தொழிற்சாலையில் தொழிலாளர் உற்பத்தி ஆற்றலை உயர்த்த வேண்டும், மேலும் சிறந்த உற்பத்தி நுட்பங்களைப் புகுத்த வேண்டும்.

ஒரு பண்டம் இரண்டு டாலர்களுக்கு விற்பனை செய்யப்படுகிறது, இது அதன் மதிப்புக்குச் சமமானது என்று வைத்துக் கொள்வோம். இதன் பொருள் இதற்கான தேவை வரத்துக்குச்

சமம் என்பதாகும், ஏனெனில் இந்த சமயத்தில் தான் விலையும் மதிப்பும் ஒன்ருக இருக்கின்றன. எனினும் ஒரு முன்னேற்ற மடைந்த தொழிற்சாலை உயர் உற்பத்தியாற்றல் மூலம் தனது உற்பத்தியை இருமடங்காக்குமானுல், வரத்து, தேவையை விஞ்சும், விலை, பொது மதிப்பை விட 1 டாலர் அல்லது 50 சதம் தவிர்க்க முடியாத வகையில் குறையும். முன்னேற்ற மான தொழிற்சாலை அதிபருக்கு இதனுல் எவ்வித அபாயமும் இல்லை, காரணம் இந்த சந்தர்ப்பச் சூழ்நிலைமைகளிலும் அவன் தனது பண்டங்களை அவற்றின் தனிப்பட்ட மதிப்புக்கு மேல் தொடர்ந்து விற்பனை செய்ய முடியும். சற்றே முன்னேற்றம் குறைந்த நிறுவனங்களின் உரிமையாளர்களுக்கு இந்த விலை வீழ்ச்சி மிகவும் அபாயகரமானது. அவற்றின் லாபங்கள் வீழ்ச்சியடைகின்றன, போட்டி போட இயலாது போகின்றன, மூடுவிழாச் செய்யும் நிலையும் ஏற்படலாம். எனவே முதலாளி களாக நீடித்து வாழ அவர்கள் புதிய உற்பத்தி முறைகளைப் புகுத்த வேண்டும், புதிய யந்திர சாதனங்களை நிறுவ வேண்டும், சிக்கனம் செய்ய வேண்டும், உற்பத்தி ஆற்றலை உயர்த்த உதவும் அனைத்தையும் செய்தல் வேண்டும்.

இவ்வாருக, போட்டி ஓரளவுக்கு புதிய யந்திரங்களைப் புகுத்தல், உற்பத்தியை நவீனப்படுத்தல் மட்டுமன்றி தொழிலாளர்களை மேலும் கடுமையாகச் சுரண்டுவதற்கு ஊக்குவிக்கும்.

## 7. முதலாளித்துவச் சமுதாயத்தில் சுரண்டல்

### உபரி மதிப்பு

முதலாளித்துவ வர்க்கத்தை மேலும் செல்வந்தர்களாக்குவதே முதலாளித்துவ உற்பத்தியின் ஏக நோக்கமாக இருப்பதால், இது எவ்வாறு யாருக்குப் பாதகம் விளைத்து சாதனையாகிறது என்பதைப் பார்ப்போம். மார்க்கெட்டில் பண்டங்களை விற்பனை செய்து அவற்றுக்குப் பணம் பெறுவதற்கு முன்பாக அவற்றை உற்பத்தி செய் தாக வேண்டும். பொருளாயத மதிப்புடைய எதை உற்பத்தி செய்ய வேண்டுமாயினும் சரி உழைப்பு மூலமே அது சாத்தியம். முதலாளி ஓர் அடிமை. எஜமானல்ல. அவர் ஒரு நிலப்பிரபுவும் அல்ல. அவரிடம் அடிமைகளோ பண்ணை நில அடிமைகளோ இல்லை. தொழிற்சாலைக்குப் போய் வேலை செய்யும்படி ஆணையிடும் வகையில் அவர் மக்களைத் தமது சொந்தச் சொத்தாக வைத்திருக்கவில்லை. ஆனுல் அவர் உற்பத்தி சாதனங்களுக்கு உடமையாளராக இருக்கிருர், முதலாளித்துவ சமூக அமைப்பில் இந்த சாதனங்கள் இல்லாத பாட்டாளி வர்க்கம் இருக் கிறது. தொழிலாளி சொந்த முறையில் முதலாளியைச் சார்ந்து நிற்காமல் பெயரளவில் சுதந்திரமாகவே இருக்கிருன், ஆனுல் அவரிடம்

வேலே தேடவேண்டியுள்ளது. தனது உழைப்பு சக்தியை அவருக்கு விற்க வேண்டியுள்ளது. முதலாளி அதை வாங்கும் பொழுது பொருளாயத மதிப்பைப் படைக்கும் ஆற்றலுடைய ஒரே பண்டத்தைப் பெறுகிறுர்.

ஒரு பண்டம் என்ற முறையில், உழைப்பு சக்திக்கு ஓரளவு மதிப்பு இருக்கிறது. ஒரு தொழிலாளிக்கு அவனது அடிப்படைத் தேவைகள் கிட்டாவிடில் அவனுல் வேலே செய்ய முடியாது. ஒவ்வொரு நாளும் அவன் ஓரளவு உணவு உட்கொள்கிறுன், அவனுக்கு உடுக்க உடையும் இருக்க இடமும் வேண்டும். பொதுவாக அவன் தனது குடும்பத்தையும் முதலாளிகளுக்கான புதிய உழைப்பாளர் படையான குழந்தைகளேயும் பராமரிக்க வேண்டும். எனவே உழைப்பு சக்தியின் மதிப்பு தொழிலாளிக்கும் அவனது குடும்பத்திற்கும் உயிர் வாழ்வதற்கான சாதனங்களின் மதிப்புக்குச் சமமாகும்.

> உழைப்பு சக்தியின் மதிப்பு நாட்டுக்கு நாடு சகாப்தத்திற்கு சகாப்தம் வேறுபடுகிறது. இது இயற்கை நிலேமைகளேயும் வரலாற்றுப் போக்கில் தொழிலாளர் அடைந்துள்ள வாழ்க்கைத் தரங்களேயும் சார்ந்ததாக இருக்கிறது. உற்பத்தி அபிவிருத்தி தொழில்நுட்ப முன்னேற்றம் போன்ற பொருளாதாரக் காரணிகள் இதன் மீது செல்வாக்குச் செலுத்துகின்றன. ஒரு புறத்தில் தொழிலாளர் உற்பத்தி ஆற்றல் தொழிலாளியின் ஜீவனச் செலவைக் குறைக்கிறது, இதன் விளேவாக உழைப்பு சக்தியின் மதிப்பைக் குறைக்கிறது. மறு புறத்தில் நகரங்கள் பெருகப் பெருக போக்குவரத்துக் கட்டணங்களும் ஏறுகின்றன. எரிவாயு, டெலிபோன் போன்ற சேவைகளின் கட்டணங்கள் அதிகரிக்கின்றன, இறுதியாக கலாசாரத் துறையில் புதிய தேவைகள் எழுகின்றன. தற்போது, முன்னேற்றமடைந்த முதலாளித்துவ நாடுகளிலுள்ள தொழிலாளிக்கு செய்திப் பத்திரிகை, சினிமா, ரேடியோ. டெலிவிஷன் போன்றவை அவசியமாகி விட்டன. தொழிலாளிக் குடும்பத்தின் தேவைகள் அதிகரிக்குந்தோறும், செலவும் அதிகரிக்கிறது, உழைப்பு சக்தியின் மதிப்பும் அதிகரிக்கிறது.
>
> எனினும், உழைப்புச் சக்தியின் மதிப்பு மீது செல்வாக்குச் செலுத்தி வரும் பிரதான அம்சம் தனது நிலேமைகளே மேம்படுத்திக் கொள்வதற்காக முதலாளிகளே எதிர்த்துப் பாட்டாளி வர்க்கம் நடத்தும் வர்க்கப் போராட்டமாகும்.

முதலாளி உழைப்புச் சக்தியை விலேக்கு வாங்கும் போது அவர் அதை உற்பத்தி சாதனங்களுடன் இணேக்கிறுர். தொழிற்சாலே ஏற்கெனவே இருக்கிறது, மூலப் பொருட்கள் கொண்டுவரப்படுகின்றன. விலேக்கு வாங்கிய உழைப்பு சக்தியைச் சேர்த்தால் முதலாளித்துவ உற்பத்தி இயங்கத் தொடங்குகிறது.

உழைப்பும், உற்பத்தி சாதனங்களும் வெவ்வேறு பாத்திரம் வகிக்கின்றன. உழைப்பு சக்தி புதிய மதிப்பை உருவாக்குகிறது, உற்பத்தி சாதனங்களால் எதையும் சிருஷ்டிக்க முடியாது. உழைப்பு உற்பத்தி சாதனங்களின் மதிப்பைப் பேணிக் காக்கிறது, அவை குறைவடையும் போது இந்த மதிப்பை உற்பத்தியான பண்டத்தின் மீது மாற்றுகிறது. ஒரு யந்திரத்தின் பயனுள்ள உழைப்புக் காலம் 10 ஆண்டுகள் என்ருல், அது ஒவ்வொரு ஆண்டிலும் அதன் பத்தில் ஒரு மடங்கு மதிப்பை இழக்கும், இந்தப் பகுதி உற்பத்தியான பண்டத்தின் மீது மாற்றப்படும். மூலப்பொருள்கள்-உதாரணமாக பருத்தி, துணி ஆவதற்கான நடைமுறையில் புதிய பண்டத்தில் இணைந்து விடுகின்றன. பருத்தியின் மதிப்பும் துணியின் மதிப்பில் ஒரு பகுதியாக மாற்றப்படுகிறது.

ஒரு கோட்டுக்குத் தேவையான துணியின் மதிப்பு 50 டாலர்கள் என்ருல் தையற்காரர் தமது வேலைக்கு 30 டாலர் கட்டணம் வசூலிக்கிருர். பூர்த்தி செய்யப்பட்ட கோட்டின் மதிப்பு 80 டாலர்களாகும். பழைய 50 டாலர் மதிப்பு தையற்காரர் வேலையால் பேணிக்காக்கப்பட்டு கோட்டுக்கு மாற்றப்பட்டது. தையற்காரர் உருவாக்கிய புதிய மதிப்பு 30 டாலர்களுக்குச் சமம்.

முதலாளித்துவ உற்பத்தியின் போக்கில் தொழிலாளி உருவாக்கும் புதிய மதிப்பு அவரது உழைப்பு சக்தியை விஞ்சுகிறது.

ஒரு தொழிலாளி ஒரு மணி நேரத்தில் 2 டாலர் புதிய மதிப்பை உருவாக்குகிருர் என்று வைத்துக் கொள்வோம். அவரது உழைப்பு சக்தியின் தினசரி விலை ஆறு டாலர்கள். இந்த இடத்தில் மூன்று மணி நேர வேலை அவரது முழு நாள் உழைப்புக்கான செலவை ஈட்டித் தந்துவிடும். ஆனல் இத் தொழிலாளி ஒரளவு உழைப்பை மட்டுமல்ல, மாருக தனது உழைப்பு சக்தியை விற்றிருக்கிருர். இதன் பொருள் மூன்று மணி நேரம் வேலை செய்வதற்குப் பதில் அவர் நாள் முழுதும் உழைக்க வேண்டும். எட்டு மணி நேர வேலையாக இருப்பின் அவர் 16 டாலர்கள் மதிப்பை சிருஷ்டிக்கிருர். எனவே உற்பத்தியின் போக்கில் தொழிலாளி தனது உழைப்பு சக்தியின் விலையை விட அதிகமான மதிப்பை உருவாக்குகிருர்.

இவற்றுக்கிடையிலான வித்தியாசத்தை எவ்வித ஈடும் இன்றி முதலாளி சுவீகரித்துக் கொள்ளுகிருர்; அவருக்குச் செல்வத்தின் ஆதாரமாகத் திகழும் இது உபரி மதிப்பு என்று அழைக்கப்படும்.

எனவே, முதலாளித்துவ சுரண்டலின் சாரம், உபரி மதிப்பு உற்பத்தி யாவதும் அதை முதலாளிகள் சுவீகரித்துக் கொள்வதுமாகும். கூலி உழைப்பின் இந்த அமைப்பு கூலி அடிமைத்தனத்தின் அமைப்பாகும்.

வேலை நாள் இரு பகுதிகளைக் கொண்டதாக உள்ளது என்பதை நாம் பார்க்கிறோம். முதற் பகுதி அவசியமான வேலை நேரம் என்றழைக்கப்படுகிறது, இதில் தொழிலாளி தனது உழைப்பு சக்திக்குச் சமமான மதிப்பைப் படைக்கிறார், உபரி வேலை நேரம் என்றழைக்கப் படும் இரண்டாம் பகுதியில் அவர் முதலாளிக்கு உபரி மதிப்பை உருவாக்குகிறார். இதன் விளைவாக, ஒரு தொழிலாளி தனக்காக உழைப்பதற்கு அதிக நேரம் எடுத்துக் கொண்டால், முதலாளிக்காக குறைந்த நேரமே உழைப்பார், எதிரெதிர் மாறாகவும் செயல்படுவார். இந்த நிலைமையில் தொழிலாளியை மேலும் கடுமையாகச் சுரண்டவும், தனது லாபத்தைப் பெருக்கிக் கொள்ளவும் வேண்டி முதலாளி உபரி நேரத்தை சாத்தியமான அளவுக்கு அதிகரிக்கவே முயல்வார்.

முதலாளியின் நடவடிக்கைகளின் பின்னால் பிரதான ஊக்குவிப்பு சக்தியாக இருப்பது உபரி மதிப்பே. பெரும்பாலும் என்ன உற்பத்தி செய்யப்படுகிறது, பயனீட்டுக்கு உதவும் துணி உணவு போன்ற பொருட்களா, அல்லது சாவும் நாசமும் விளைக்கும் சாதனங்களா என்பது பற்றி அவருக்குக் கவலை இல்லை. ஆனால் அவர் பயன் மதிப்புடைய பொருள்களைச் செய்ய வேண்டும் உபரி மதிப்புக்கு அவை முக்கியமானவை.

கூலி உழைப்பைச் சுரண்டுவது மூலம் உபரி மதிப்பை உற்பத்தி செய்வதே முதலாளித்துவத்தின் பிரதான பொருளாதார விதியாகும். இந்த விதியால் முதலாளித்துவ உற்பத்தியின் நோக்கமும், இந்த நோக்கத்தை அடையும் சாதனங்கள் இரண்டும் வெளிப்படுகின்றன.

பொருளாயத உற்பத்தித் துறையில் மட்டுமே உபரிமதிப்பு உருவாக்கப்படுகிறது. முதல் தோற்றத்தில் தொழில்துறை முதலாளிகள் இதை முற்றிலும் தாமே எடுத்துக் கொள்வது போலத் தோன்றும். உண்மையில் உபரி மதிப்பு தொடர்ச்சி யான கடுமையான போட்டி மூலம் பல்வேறு முதலாளித் துவக் குழுக்களிடையே பகிர்ந்து கொள்ளப் படுகிறது. முதலில் உபரி மதிப்பு தொழிலுடமையாளர்களால் சுவி கரித்துக் கொள்ளப்படுகிறது, பிறகு அவர்கள் வியாபாரிகள் பாங்கர்கள் ஆகியோருக்கு ஒரு பங்கு தரும் கட்டாயம் ஏற் படுகிறது, ஏனெனில் பண்டங்களை உற்பத்தி செய்தால் மட்டும் போதாது, விற்பனை செய்யவும் வேண்டும். பொது வாக தொழில் உடமையாளர் வர்த்தகர்களுக்கு தமது பொருட்களை மொத்த விற்பனை செய்கிறார்கள், அவர்கள் பயனீட்டாளர்களுக்கு விற்கிறார்கள். தொழிற் சாலை உடைமையாளர் தானே தனது பண்டங்களை விற்பனை

செய்ய நேர்ந்தால் அவர் கிடங்கு, கடைகள், ஷாப் சிப்பந்திகளை கூலிக்கமர்த்தல் போன்றவற்றுக்குப் பணம் செலவழிக்க வேண்டும். இந்த உபரி செலவுகளைத் தவிர்க்க அவர் வர்த்தகர் பண்டங்களை விற்பனை செய்ய விட்டுவிடுகிறார், உபரி மதிப்பில் ஒரு பகுதியை அவருக்கு அளிக்க வேண்டி வருகிறது.

இதன் விளைவாக முதலாளித்து சமூக அமைப்பில் பாடுபட்டு சம்பாதிக்காத வருவாய் யாவும் உபரி மதிப்பின் ஒரு வடிவமே யாகும். வர்த்தகர் பாங்குகளின் லாபங்கள் வட்டிகளுக்கும் பொருந்தும். இந்த பாடுபடாத வருவாயின் ஒரே ஆதாரம் பொருளாயத உற்பத்தித் துறையில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்களின் உபரி உழைப்பேயாகும். இதன் பொருள் தொழிலாளர்கள் தமது முதலாளிகளால் மட்டுமின்றி முதலாளித்துவ வர்க்கத்தால் ஒட்டு மொத்தமாகச் சுரண்டப்படுகின்றனர் என்பதே. இதனால்தான் தொழிலாளர்கள் தமது உரிமைகளுக்காகப் போராடும் போது அவர்களை எதிர்க்க முதலாளிகள் ஒரு ஐக்கிய முன்னணியை உருவாக்குகின்றனர்.

## மூலதனம்

முதலாளித்துவ சமூகத்தில் உற்பத்தி சாதனங்கள் விற்பனை செய்யப்பட்டுப் பணத்திற்கு வாங்கப்படுகின்றன, அதாவது அவை தமக்கென சொந்த மதிப்புடைய பண்டங்களாக இருக்கின்றன. முதலாளி உற்பத்தி சாதனங்களையும் உழைக்கும் சக்தியையும் வாங்கும் பொழுது உற்பத்தி தொடங்குகிறது. அவை ஒன்று சேர்க்கப்படும் போது, பண்டங்கள் உற்பத்தி தொடங்குகிறது. இந்தப் பண்டங்களை அவற்றை உற்பத்தி செய்வதற்குச் செலவழித்ததைவிடவும் அதிகத் தொகைக்கு முதலாளி விற்பனை செய்கிறார். கூலி உழைப்பைச் சுரண்டுவது மூலம், உபரி மதிப்பை உருவாக்கும் சாதனமாக இருக்கும் மதிப்பே மூலதனம் என்பதாகும்.

மூலதன உடமையாளர்கள் விடாமுயற்சி உள்ளவர்களாயும் நேர்மையாளர்களாகவும் இருந்ததால்தான் மூலதனம் தோன்றியது என்று முதலாளித்துவத்தின் பிரசாரகர்கள் உரிமை கொண்டாடுகிறார்கள். சிக்கனமாக இருந்தவர்கள் முதலாளிகள் ஆயினர், எனவே சோம்பேரிகளும், அதிகச் செலவாளிகளும் கூலித் தொழிலாளர்களாயினர் என்று கூறப்படுகிறது. சாமான்ய அப்பாவிகளை ஏய்க்க எழுந்த இந்தப் பொய்யை மார்க்ஸ் அம்பலப்படுத்தினார். மூலதனம் கொள்ளை, வன்முறை, விவசாயிகளின் நிலங்களை கபளிகரம் செய்தல் காலனிகளில் சூறையாடல் ஆகிய முறைகளிலிருந்து தோன்றியது. ஆரம்பத்தில் மூலதனம் உழைப்பு மூலம் சம்பாதிக்கப்பட்டது என்று வைத்துக் கொண்டாலும்கூட இது அதன் சாரத்தை மாற்றிவிடாது. சற்று காலத்திற்குப் பிறகு அத்தகைய மூலதனத்திற்கான முதலீடு

உபரி மதிப்பு மூலம் சுரண்டல் மூலம் திரட்டப்படுகிறது. முதலாளிகள் உபரி மதிப்பை சுவிகரித்துக் கொள்வது மூலம் தமது செலவினத்தை ஈடு செய்கிறார்கள். கூலி உழைப்பு சுரண்டப்படா விட்டால், ஆரம்ப மூலதனம் செலவழிக்கப்பட்டு வெறுங்கையே மிஞ்சும்.

ஒரு முதலாளித்துவ நிறுவனத்தில் மொத்தம் 1,00,000 டாலர்கள் முதலீடு செய்யப்பப்பட்டிருப்பதாக வைத்துக் கொள்வோம். கூலிக்கு உழைக்கும் தொழிலாளர் ஆண்டு தோறும் 20,000 டாலர்கள் உபரி மதிப்பை உற்பத்தி செய்கின்றனர். இதை முதலாளி தனது பயனீட்டுக்காகச் செலவுக்கு எடுத்துக் கொண்டார் என்று வைத்துக் கொள்வோம். இந்த விஷயத்தில் ஐந்தாண்டுகளில் செலவழிக்கப் பட்ட மொத்த உபரி மதிப்பு ஆரம்ப மூலதனத்திற்குச் சமமாக இருக்கும். இதன் விளைவாக, கூலித் தொழிலாளர்களைத் தொடர்ந்து சுரண்டாமல் இருந்தால் ஐந்து வருடங்களுக்குப் பிறகு முதலாளியின் பணத்தில் எதுவும் மீதம் இருக்காது. முதலாளி தொழிலாளிகளிடமிருந்து லாபத்தைப் பிரித்தெடுப்பது மூலம் மட்டுமே தனது மூலதனத்தை வைத்திருக்க முடியும், வளர்க்க முடியும்.

நடைமுறையில் முதலாளிகள் உபரி மதிப்பு முழுவதையும் விரயம் செய்வதில்லை. லாபப் பேராசை அவர்களை உற்பத்தியை விஸ்தரிக்கவும், அதில் வருவாயில் ஒரு பகுதியைச் செலவிடவும் தூண்டுகின்றன. உற்பத்தி விரிவடையுந் தோறும் சுரண்டப்படும் தொழிலாளர்கள் எண்ணிக்கை அதிகரிக்கும், அதே போன்று முதலாளிகளிடம் சேரும் உபரி மதிப்பின் தொகையும் அதிரிக்கும்.

இதன் தொடர்பாக முதலாவதாக எந்த மூலதனமும் சுரண்டலின் விளைவே என்பதும் ஏற்படுகிறது. இரண்டாவதாக பணமும், எவ்வளவு பெருந்தொகையாக இருப்பினும் சரி, தொழிற்சாலைகள், கச்சாப் பொருள்கள் யந்திரங்கள் ஆகிய உற்பத்தி சாதனங்களும் தாமே உண்மையான மூலதனம் ஆகா. அவை மூலதனமாக வேண்டுமானால், உற்பத்தி சாதனங்களின் தனிஉடமையாளர்களாக ஒரு வர்க்கமும், தமது உழைப்பு சக்தியைப் பண்டமாக விற்பனை செய்யும் கூலிக்கு அமர்த்தப்பட்ட தொழிலாளர்களும் இருக்கும் நிலை ஏற்படவேண்டும். எனவே மூலதனம் முதலாளிகளுக்கும் தொழிலாளர்களுக்கும் இடையிலான ஒரு சமூக உறவினைப் பிரதிநிதித்துவப்படுத்துகிறது, அதன் சாரம் தொழிலாளர்களைச் சுரண்டுவதாகும்.

முதலாளித்துவ அமைப்பு ஒழிக்கப்பட்டால், உற்பத்தி சாதனங்கள் பொதுச் சொத்தாகும், உழைப்பு சக்தி பண்டமாக இராது, முதலாளித்துவம் வரலாற்று வகைப்பட்ட கூறு என்ற முறையில் நீடிக்காது.

## மூலதன சேகரமும் பாட்டாளி வர்க்கத்தின் நிலைமை மோசமடைவதும்

உபரி மதிப்பு முதலாளித்துவ சேகரிப்பின் ஆதாரமாகும். இந்த உபரி மதிப்பில் ஒரு பகுதி அவர்களின் சொந்தத் தேவைகளுக்காக மற்றப் பகுதி உற்பத்தியை விஸ்தரிப்பதற்குப் பயன்படுத்தப் பெறுகிறது. இந்தப் பகுதி தானே மூலதனமாக மாறுகிறது, அல்லது மூலதனமாக்கப் படுகிறது. இந்த நடைமுறை மூலதன சேகரம் என்று அழைக்கப்படுகிறது.

உற்பத்தி விரிவாக்கப்படுவதால் முதலாளி சுவிகரித்துக் கொள்ளும் உபரி மதிப்பின் அளவு அதிகரிக்கிறது. இது உற்பத்தியை மேலும் விஸ்தரிக்கவும், அதிகமான தொழிலாளர்களை கூலிக்கு அமர்த்தவும், மேலும், அதிக அளவில் உபரி மதிப்பை பறித்துக் கொள்ளவும் அவருக்கு வாய்ப்பளிக்கிறது. இதன் விளைவாக, ஒரு புறத்தில் ஒரு சமூகத்தில் ஒரு பகுதி அளப்பரிய செல்வத்தைக் குவித்துக் கொள்கிறது, இதனால் சுரண்டும் வர்க்கங்களின் ஆடம்பரமும் பிறர் உழைப்பில் சுகிக்கும் போக்கும் அதிகரிக்கின்றன. மறுபுறம் பாட்டாளி வர்க்கம் சுரண்டப்படுவது முனைப்பாகிறது, இதன் விளைவாக தமது உழைப்பினால் சமூகத்தில் செல்வம் அனைத்தையும் சிருஷ்டிப் போருக்கும், அவற்றைக் கவர்ந்து கொள்பவர்களுக்கும் இடையிலான இடைவெளி விரிவடைகிறது. இதுவே முதலாளித்துவ சேகரிப்பின் விதியாகும்.

முதலாளித்துவத்தின் துவக்கத்தில் முன்னோடி மாதிரி முதலாளி தொழிலாளர்களிடமிருந்து சாத்தியமான அனைத்தையும் கசக்கிப் பிழிந்து பெற்றதோடு தனது மூலதனத்தைப் பாதுகாக்க முடிந்த அனைத்திலும் சிக்கனம் செய்கிறார். கற்பனை நவீனங்களில் தமது பெரும் செல்வத்தை விரயமாக்கிய ஊதாரிப் பிரபுக்களுக்கு எதிர்மாறாக கருமமே கண்ணாக லாபம் பறிக்கும் தொழிலதிபர், பாங்கர்கள், லேவாதேவிகள் சித்தரிக்கப்படுகிறார்கள். அந்த நாட்களில் முதலாளி இரவு, பகல் தொழிற்சாலைகளிலேயே தங்கியிருந்தார். தொழிலாளர்களை எல்லாம் அவருக்கு நேருக்கு நேர் தெரியும், அவரே கணக்குப் பிள்ளை.

எனினும் மூலதனம் சேகரிக்கப்பட்டதைத் தொடர்ந்து அதிக வெற்றிகளைத் திறமையுள்ள தொழிலதிபர் பெரும் பொருளீட்டிவிட்டனர், அன்றாட வேலைகளைப் பற்றி அலட்டிக் கொள்ளவில்லை. இன்றைய கோடீஸ்வரர்கள் சிக்கனமாக இருக்கத் தேவையில்லை. மாறாக அவர்களிடம் தாம்தூம் என்று எல்லா விதமான ஆடம்பர தான்தோன்றி தர்பாரில் ஈடுபடுவதற்கான பணம் இருக்கிறது. நீச்சல்

குளம் உள்ள மாளிகைகளைக் கட்டினார்கள், தங்க ஓடு போட்டார்கள். பிரிட்டனில் மாளிகைகளை வாங்கி அவற்றை அமெரிக்காவுக்கு கப்பல்களில் அனுப்பினார்கள், தமது நாய் பூனைகளுக்கு ஆடம்பர விருந்தளித்தார்கள், தமது உயில்களில் அவற்றிற்கு சொத்து எழுதிவைத்தார்கள்.

முதலாளித்துவம் விரல்விட்டெண்ணத் தக்க சில புல்லுருவிகள், மற்றவர்கள் உழைப்பைச் சுரண்டி வாழ இடமளிக்கிறது. அதே சமயம் தொழிலாளர்களுக்கு வேலையில்லாத் திண்டாட்டம், வறுமை உண்டாக்கி உயிர்வாழ்வதற்கான மார்க்கத்தைக் கூட மறுக்கிறது.

**வேலையில்லாத்திண்டாட்டம்** முதலாளித்துவத்தினை தவிர்க்க வொண்ணு வகையில் பின்தொடர்கிறது. முதலாளித்துவ வளர்ச்சியின் ஆரம்ப கட்டத்திலேயே அது தலைகாட்டியது. தொழில்நுட்ப முன்னேற்றம் மேலும் மேலும் திறமான யந்திரங்களை உற்பத்தி செய்வதால் உழைப்பு சக்திக்கான தேவை குறைகிறது. வேலையில்லாத் திண்டாட்டம் முதலில் தாற்காலிகமானதாக இருந்தது, வேலை இல்லாதிருந்தவர்கள் ஏறத்தாழ குறைந்த கால அளவில் வேலை பெற்றார்கள். பின்னால் அது தீரா வியாதியாகி விட்டது. வேலையில்லாத பெரிய வெகுஜனப் பகுதி தொழிலாளர் ரிசர்வ் குழுவாக உள்ளது. அமெரிக்காவில் பல ஆண்டுகளாக வேலையில்லாதார் தொகை 30 லட்சம் தொட்டு 50 லட்சமாக இருக்கிறது.

வேலை நிறுத்தத்தின் அடிப்படையான காரணங்கள் யாவை? சிலருடைய ஜீவனமே பறிக்கப்பட்டிருப்பதற்கு, ஒரு வேளை, புதிய இயந்திரங்கள் காரணமாக இருக்கலாமோ?

தொழில்துறையில் இயந்திரங்கள் புகுத்தப்பட்டதனால் தான் வேலையில்லாத் திண்டாட்டம் ஏற்பட்டது என்று தொழிலாளர்கள் நினைத்த காலம் ஒன்று உண்டு. லுட்டைட்ஸ்[1] என்று அழைக்கப்பட்ட ஒரு தன்னிச்சையான இயக்கம் பிரிட்டனில் தோன்றியது. இயந்திரங்களை நொறுக்கி அழிக்கும் வேலையில் இந்த இயக்கம் ஈடுபட்டது. 18ஆவது நூற்றாண்டின் பிற்பகுதியிலும், 19ஆவது நூற்றாண்டின் துவக்கத்திலும் இந்த இயக்கம் தீவிரமாக நடைபெற்றது. தொழிலாளர்கள் இயந்திரங்களின் மீது தமது கோபத்தைத் திருப்பினர்; ஏனெனில் அவர்களது வர்க்க உணர்வு இன்னும் வளர்ச்சியடையவில்லை. ஆனால் அதற்கும் இயந்திரங்களுக்கும் சிறிதும் சம்பந்தமில்லை என்பது அறிந்ததே. சோஷலிச நாடுகள் இதற்குத் தெளிவான சான்று பகர்கின்றன. அவை

---

1, என். லுட் என்ற ஆங்கிலேயத் தொழிலாளியின் பெயரிலிருந்து லுட்டைட்ஸ் என்ற பெயர் வந்தது; கோட்பாட்டின் பேரில் தனது இயந்திரத்தை முதல் முதலில் உடைத்தவர் இவரே.

பெருவீத அளவில் புதிய இயந்திரங்களைப் புகுத்திய போதிலும் அந்நாடு களில் வேலையில்லாத் திண்டாட்டம் இல்லை. சோஷலிசத்தின் கீழ் வேலையில்லாத் திண்டாட்டம் எதுவும் இருக்கவும் முடியாது.

வேலையில்லாத் திண்டாட்டத்தின் அடிப்படைக் காரணம் முதலாளித்துவப் பொருளாதார அமைப்பில் அடங்கியுள்ளது. தொழில் நுட்பவியல் முன்னேற்றமானது, குறைந்த முயற்சியில் அதிகப் பொருள் களை உற்பத்தி செய்வதையும், வேலை நேரத்தைக் குறைப்பதையும், சம்பளங்களை உயர்த்துவதையும் சாத்தியமாக்குகிறது. ஆனால் முதலாளி புதிய இயந்திர சாதனத்தைப் புகுத்தும் போது, அவன் மேலும் அதிக லாபத்தை அடைவதற்கு விரும்புகிறான், தனது தொழிலாளிகளுக்கு உதவி செய்ய அல்ல என்பது அனைவரும் அறிந்ததே. அவர்களது வேலையை இலகுவாக்குவதற்கு மாறாக, அவன் அவர்களில் சிலரை வேலையை விட்டு நீக்கி விட்டு, மீதமுள்ளோரை முன்னிலும் கூடுதல் கடுமையாக வேலை செய்யும்படி நிர்ப்பந்தப்படுத்துகிறான். இதை அவனால் செய்ய முடிவதற்குக் காரணம், வேலையில்லாமல் இருக்கும் மக்களின் எண்ணிக்கை அதிகமாக, அதிகமாக, வேலையிலிருப்போர், தமது வேலை களில் முன்னிலும் பலமாக ஒட்டிக் கொள்கின்றனர். தமது ஜீவனத்திற் குரிய சாதனத்தை இழக்கும் பயமானது ஓவர்சியரின் சாட்டையை விடவும் மேலான தூண்டுகோலாக அமைகிறது.

நவீனத் தொழில்நுட்பவியலானது மனிதனின் அறிவுத் திறத்தின் ஒரு வியப்புக்குரிய சாதனையாகும். அது வேலையை இலகுவாக்க முடியும், வாழ்க்கைத் தரங்களை உயர்த்த முடியும். ஆனால் முதலாளித்துவத்தின் கீழ், இது தொழிலாளிவர்க்கத்தின் நிலைமையை மேலும் மோசமாக்கு கிறது.

கஷ்டப்படுவது வேலையில்லாதோர் மட்டுமல்ல. நெற்றி வியர்வை நிலத்தில் விழும்படியாகத் தொழிலாளியிடம் கடும் உழைப்பை வாங்கும் முறையானது தொழிலாளியை உரிய காலத்திற்கு முன்பாகவே வயோதிகனாக்கி விடுகிறது. முதலாளித்துவத்தின் கீழ், முதலாளித்துவ சுரண்டல் இயந்திரத்தில் அறைக்கப்படும் மிகப்பல தொழிலாளிகள் 40 அல்லது 50 வயதிலேயே ஏலாமையை அடைந்து விடுகின்றனர்.

தொழிலாளி வர்க்கத்தின் நிலைமை மோசமடைவதானது ஒரு நேர் கோடு போன்று ஒரு சீராக மோசமடைவதோ அல்லது தொடர்ச்சியான நிகழ்ச்சிப் போக்கோ அல்ல. ஒரு குறிப்பிட்ட நாட்டின் பிரத்தியேக நிலைமைகளுக்கு ஏற்ப அதில் ஏற்றத்தாழ்வுகள் உண்டு. தொழி லாளர்கள் தமது உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்வதற்காக, குறிப் பாக, முற்போக்குத் தொழிற்சங்கங்கள், கட்சிகளின் பாத்திரம் வளர, வளர, முதலாளிகளை எதிர்த்துப் போராடுகின்றனர். ஆர்ப்பாட்டங்கள், வேலை நிறுத்தங்கள் போன்ற நடவடிக்கைகளில் ஈடுபடுவதன் மூலம்,

சம்பள உயர்வு, குறைந்த வேலை நேரம் முதலியன வடிவத்தில் தொழிலாளர்கள் பல சலுகைகளைப் பெறுவதில் வெற்றியடைந்துள்ளனர். ஆயினும், இவை எதுவும், முதலாளித்துவ உலகில் தொழிலாளர்கள் சுரண்டப்படுவது வளர்ந்து வருகிறது என்ற உண்மையை மாற்றுவதில்லை.

உற்பத்தி வீழ்ச்சியடையும் போது, முதலாளித்துவ உலகம் பொருளாதார நெருக்கடிகளால் உலுக்கப்படுகிறது. இத்தகைய நெருக்கடிகள் ஏற்படுவதற்குக் காரணம் லாப வேட்கையினாலும் போட்டியினாலும் தூண்டப் பெற்ற முதலாளிகள், மென்மேலும் அதிகமான பொருள்களை உற்பத்தி செய்வதிலேயே சதா சர்வகாலமும் முனைந்துள்ளனர். ஆனால் வருமானங்கள் மிகவும் மெதுவாக அதிகரிக்கின்றன. சில சமயங்களில் இருந்த இடத்திலேயே அப்படியே இருக்கின்றன. இதன் பொருள், பண்டங்களுக்கான தேவைக் கோரிக்கை உற்பத்திக்குப் பின்தங்கி நிற்கிறது. இதன் விளைவாக, பண்டங்களின் பெரும் சேமிப்பு உருவாகி விடுகிறது. மத்தியதர முதலாளிகள் பாப்பராகி விடுகின்றனர், விவசாயிகள் நொடிந்து விடுகின்றனர், ஆயிரக்கணக்கான தொழிற்சாலைகள் மூடப்படுகின்றன, வெகுஜன வேலையில்லாத் திண்டாட்டம், சம்பளங்களில் வெட்டு ஏற்படுகிறது.

இவை அனைத்தும் அமித உற்பத்தியினால் ஏற்பட்டவையாகத் தோன்றும், ஆனால் உண்மையில், இந்தப் பொருள்களை வாங்குவோர் இல்லை, ஏனெனில் ஜனங்களிடம் பணமில்லை, அந்தப் பொருள்கள் அவர்களுக்குத் தேவையில்லை என்பதனால் அல்ல. பயனீட்டின் சாத்தியப்பாடு, உங்களிடம் எவ்வளவு பணம் இருக்கிறது என்பதைப் பொறுத்தது, நீங்கள் எவ்வளவு பசியோடிருக்கிறீர்கள் என்பதையல்ல. இதன் விளைவாக, முதலாளித்துவ சமுதாயத்தில், செல்வச் செழிப்பின் நடுவே பட்டினி தாண்டவமாடும் இயற்கைக்கு மாறான இயல் நிகழ்வைக் காண்கிறோம். கடைகளும் பண்டசாலைகளும் பண்டங்கள் நிறைந்து காணப்படுகின்றன, ஆனால் முதலாளிகள், அவற்றை மிகவும் குறைவான விலைகளில் விற்பதைக் காட்டிலும், அழித்து விடுவதே அதிக லாபகரமானது என்று கருதுகிறார்கள். தமது நஷ்டங்களுக்கு ஈடுகட்டுவதற்காக, விலைவாசிகளை உயர்வான மட்டத்திலேயே வைத்துக் கொள்வதற்கு அவர்கள் எந்த அளவுக்கும் செல்வதற்குத் தயாராயிருக்கிறார்கள்.

> இதற்குப் பல உதாரணங்களைக் கூறலாம். 1934 ல், முதலாளித்துவ நாடுகளில் 24,00,000 பேர் பசியினால் மாண்டனர், அதே பொழுதில் அமெரிக்கா, பத்து லட்சத்திற்கு அதிகமான ரயில் வேகன்கள் உணவு தானியத்தை நாசம் செய்தது—ஓர் ஆண்டுக்கு 10 கோடி மக்களுக்கு உணவளிப்பதற்கு இது போதுமானது. அமெரிக்க முதலாளிகள் மேலும் 2,67,000 வேகன் காப்பிக் கொட்டையையும், 2,58,000 டன் சர்க்கரையையும், 26,000 டன்

அரிசியையும், 25,000 டன் இறைச்சியையும், மேலும் ஏராளமான பிற உணவுப் பொருள்களையும் நாசம் செய்தனர்.

நெருக்கடிகள் முதலாளித்துவத்தின் கொடிய எதார்த்தத்தை வெளிப்படுத்துகின்றன. அது உற்பத்தி சக்திகளின் வளர்ச்சியைத் தடுத்து நிறுத்துகிறது, பல அம்சங்களில் மனிதகுலத்தைப் பின்னுக்கு இட்டுச் செல்கிறது. முதலாளித்துவம் தனது வாழ்வின் கடைசிக் கட்டத்தின் வழியே சென்று கொண்டிருக்கும் போது இது மிகத் தெளிவாகத் தெரிகிறது.

## 8. ஏகாதிபத்தியம் (ஏகபோக முதலாளித்துவம்)

### முதலாளித்துவத்தின் கடைசிக் கட்டம்

கடந்த நூற்றுண்டின் கடைசிக் காலத்தில் மத்திய அமெரிக்கா மீதும், தென் ஆப்பிரிக்கா மீதும் உலகின் கவனம் திரும்பியது, இவ்விடங்களில் அப்போது ஸ்பானிஷ்-அமெரிக்க, மற்றும் ஆங்கிலோ-போயர் யுத்தங்கள் நடைபெற்றன. லத்தீன் அமெரிக்காவிலுள்ள ஸ்பெயினின் காலனிகளைப் பிடித்துக் கொள்வதற்காக அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகள் 1898ல் ஸ்பானிஷ்-அமெரிக்கப் போரைக் கட்டவிழ்த்து விட்டனர்; அதே பொழுதில், தென் ஆப்பிரிக்காவில் இருந்த ஆரஞ்சு ஃப்ரீ ஸ்டேட், டிரான்ஸ்வால் என்ற இரு போயர் குடியரசுகளுக்கு எதிராக 1899-1902ல் பிரிட்டன் கட்டவிழ்த்து விட்ட போர் ஆங்கிலோ-போயர் போராகும். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகள் அக்குடியரசுகளை அடிமைப்படுத்தி, சகல எதிர்ப்பையும் மிருகத்தனமாக ஒடுக்கிய பிறகு, இந்த இரு குடியரசுகளும் யூனியன் ஆப் சவுத் ஆஃப்பிரிக்கா என்ற மற்ருெரு டொமினியனில் இணைத்துக் கொள்ளப்பட்டு விட்டன.

இந்த இரண்டு போர்கள் ஏகாதிபத்திய சகாப்தத்தில் முதலானவையாகும். அந்த சமயத்தில், உலகின் பிரதேசங்கள் பிரித்துக் கொள்ளப்படுவது முடிவடைந்திருந்தது, அதை மறு பிரிவினை செய்வது தான் அடுத்த கட்டமாயிருந்தது, இந்த இரு போர்களும் முதலாளித்துவத்தின் மிக உயர்ந்த, மற்றும் கடைசி கட்டமாகிய ஏகாதிபத்தியம் தோன்றுவதைக் கட்டியங் கூறின.

> பிற நாடுகளை அடிமைப்படுத்துவதோடு ஏகாதிபத்தியம் தன் வேலையைக் கட்டுப்படுத்திக் கொள்வதில்லை. முதலாளித்துவம் மேலும் பரிணம வளர்ச்சி அடைவதோடு, அது முக்கிய பொருளாதார, அரசியல் மாற்றங்களை அடைந்தது. இந்த மாற்றங்கள்தான், முதலாளித்

துவத்தின் கடைசிக் கட்டம் என்று கூறுவதற்கான சான்றை அளிக்கின்றன.

எனினும், ஏகாதிபத்தியம், எந்த அர்த்தத்திலும் முதலாளித்துவத்தினின்றும் மாறுபட்ட ஒரு சமூக அமைப்பு அல்ல. ஏகாதிபத்திய சகாப்தத்தில் உற்பத்தி சாதனங்களில் முதலாளித்துவ உடைமை நீடிக்கிறது. முதலாளித்துவ சமுதாயத்தின் பொருளாதார அஸ்திவாரமாக அது இன்னும் இருக்கின்றது, இந்த உடைமை எந்தக் குறிப்பிட்ட வடிவத்தை—தனியார், கம்பெனிகள், அல்லது அரசு-முதலாளித்துவ-வடிவத்தை—எடுத்துக் கொண்டாலும் சரி. கூலித் தொழிலாளர் வர்க்கம் இருந்து வருவது இந்தப் பொருளாதாரத்தின் அடிக்கல்லாகத் தொடர்ந்து இருந்து வருகிறது.

முதலாளித்துவ வளர்ச்சியை ஆட்சி செய்யும் அதே விதிகளால்—உபரி மதிப்பு விதி, முதலாளித்துவ சேமிப்பின் பொதுவான விதி, போட்டி குறித்த விதிகள் முதலியன-ஏகாதிபத்தியமும் ஆட்சி செய்யப்படுகிறது.

''ஏகாதிபத்தியம், முதலாளித்துவத்தின் மிக உயர்ந்த கட்டம்'' என்ற தமது நூலில், லெனின், ஏகாதிபத்தியத்தின், பொருளாதார, அரசியல் சாராம்சத்தைப் பகுப்பாய்வு செய்தார். முதலாளித்துவத்தின் ஏகபோகக் கட்டமாகிய ஏகாதிபத்தியம், அதனுடைய ஏகபோகக் கட்டத்திற்கு முந்திய கட்டத்திலிருந்து எவ்வகையில் வேறுபட்டது என்பதை அவர் காட்டினுர். ஏகாதிபத்தியத்தின் பிரதான பொருளாதார இயல்புகளை லெனின் இவ்வாறு விளக்கினுர்: (1) உற்பத்தியும் மூலதனமும் செறிவு அடைவது மிக உயர்ந்த கட்டத்திற்கு வளர்ச்சியடைந்திருப்பதன் பயனுய், அது ஏகபோகங்களை உருவாக்கியுள்ளது, இவை பொருளாதார வாழ்வில் ஒரு தீர்மானகரமான பாத்திரம் வகிக்கின்றன; (2) பாங்கு மூலதனம் தொழில்துறை மூலதனத்துடன் ஒன்றிணைந்து, இந்த ''நிதி மூலதன''த்தின் அடிப்படையில் ஒரு நிதி ஆதிக்க சிறு குழு உருவாகிறது; (3) பண்டங்களின் ஏற்றுமதியினின்றும் வேறுபட்டுள்ள மூலதன ஏற்றுமதி விசேஷ முக்கியத்துவம் பெறுகிறது; (4) சர்வதேச ஏகபோக முதலாளித்துவ ஸ்தாபனங்கள் உருவாகின்றன, இவை உலகைத் தமக்கிடையே பங்கிட்டுக் கொள்கின்றன; (5) உலக முழுமையும் மிகப் பெரும் முதலாளித்துவ வல்லரசுகளிடையே பிரதேச ரீதியில் பிரித்துக் கொள்ளப்படுவது பூர்த்தியடைந்து விட்டது.

ஏகாதிபத்தியமானது, வளர்ச்சியின் ஒரு குறிப்பிட்ட கட்டமாகும். முதலாவதாக, அது ஏகபோக முதலாளித்துவம் இரண்டாவதாக, அது புல்லுருவியான, அல்லது அழிந்து வருகின்ற முதலாளித்துவம். மூன்ருவ

தாக, அது இறக்குந் தறுவாயிலுள்ள முதலாளித்துவம். இறுதியாக, ஏகாதிபத்தியத்தின் கட்டம் சோஷலிசப் புரட்சி ஏற்படுகின்ற தறுவாயு மாகும். வரலாற்றில் இதுவே முதலாளித்துவத்தின் கடைசிக் கட்டமாகும்.

ஏகபோகம் என்ருல் என்ன, ஏகபோக முதலாளித்துவம் எந்த வகையில் ஏகபோகக் கட்டத்திற்கு முற்பட்ட முதலாளித்துவத்திலிருந்து மாறுபடுகிறது என்பதை இப்போது நாம் பரிசீலனை செய்வோம். ஏகபோகங்கள் என்பவை முதலாளிகளின் ராட்சத நிறுவனங்கள். இவை பொருளாதாரத்தின் ஏதாவது ஒரு அல்லது பற்பல துறைகள் மீது முற்றிலும் ஆதிக்கம் செலுத்துகின்றன. உற்பத்தியும் மூலதனமும் செறிவடைவதன் தர்க்க நியதியான விளைவே இவை.

தொழில்துறை முதலாளித்துவத்தின் தங்குதடையற்ற போட்டி சின்னஞ்சிறு நிறுவனங்களை அழித்தொழித்து விடுகின்றது, இச்சிறு நிறுவனங்கள் பெரும் நிறுவனங்களால் கபளீகரம் செய்யப்படுகின்றன. மென்மேலும் பெரிய நிறுவனங்களில் உற்பத்தி செறிவடைகிறது, மூலதனம் செறிவடைவதாலும், உபரி மதிப்பில் ஒரு பகுதி அதோடு சேர்க்கப் படுவதாலும் அதுவும் மென்மேலும் பெருகிக் கொண்டே வருகின்றது. இது தவிர, மூலதனம் மத்தியத்துவப் படுத்தவும் படுகிறது. தமது விருப்ப பூர்வமாகவோ அல்லது நிர்ப்பந்தம் காரணமாகவோ பல நிறுவனங்கள் இணையும்போது இது ஏற்படுகிறது. பங்குதார் அமைப்புகள் தோற்றுவிக்கப்படும் போது அவை விருப்ப பூர்வமாக இணைகின்றன; போட்டியின் போக்கில் பெரும் நிறுவனங்களுடன் போட்டிபோட முடியாமல் சிறு நிறுவனங்கள் தவிக்கும்போது அவை நிர்ப்பந்தத்தின் பேரில் இணைகின்றன.

ஏகபோகங்கள் எந்த வடிவத்தை எடுத்த போதிலும் அவற்றின் நோக்கம் எப்போதும் ஒன்றேதான்; அதாவது பெரும் லாபத்திற்காக உற்பத்தி மீதும், சந்தை மீதும் ஆதிக்கம் செலுத்தவேண்டும் என்பதே.

பெரும் முதலாளிகளிடையேயான போட்டி வெகு கடுமையாகவும் நாசகரமானதாகவும் உள்ளது. ஒவ்வொருவரும் தமது போட்டி யாளர்களை அழித்தொழிக்க முயலுகிருர். எனினும், உற்பத்தி, விலைகள், இத்தியாதிகள் சம்பந்தமாக அவசியமாளுல் ஒப்பந்தம் செய்து கொள்ளவும் முயலுகின்றனர். எண்ணிக்கையில் சிலவாக இருப்பதால், இந்த ராட்சத நிறுவனங்கள் நூற்றுக்கணக்கான, ஏன் ஆயிரக்கணக் கான சிறு சிறு நிறுவனங்களைவிடச் சுலபமாக ஒப்பந்தம் செய்து கொள்ள முடிகிறது என்பது மெய்யே. மூலதனமும், உற்பத்தியும் ஒருமுகப்படுத்தப்பட்டு மத்தியத்துவப்படுத்தப்படும்போது தான் ஏகபோகங்கள் தோன்றுகின்றன.

இந்நூற்ருண்டின் தொடக்கத்தில் முன்னேற்றமடைந்த முதலாளித்துவ நாடுகளில் ராட்சத ஏகபோக குழுக்கள்

தோன்றின. நிலக்கரி, எண்ணெய், உருக்கு இதர தொழில் சாம்ராஜ்யங்கள் தோன்றின. உதாரணமாக, அமெரிக்காவில் ஐந்து ஏகபோகங்கள் உருக்குத் தொழில் மீது ஆதிக்கம் செலுத்துகின்றன. அவற்றில் ஆகப் பெரியவை உருக்குக் கார்ப்பரேஷனும், பெதல்ஹாம் உருக்கு நிறுவனமும் ஆகும். இவை இரண்டும் சேர்ந்து அமெரிக்காவின் மொத்த உருக்கு உற்பத்தியில் 80 சதவிகிதத்திற்கு மேற்பட்ட பாகத்தை உற்பத்தி செய்கின்றன. உலகின் ஒரு மிகப் பெரிய நிறுவன மான ஸ்டாண்டர்ட் ஆயில் நிறுவனம் எண்ணெய்த் தொழில் மீது ஆதிக்கம் செலுத்துகிறது. டுபாண்ட் டி நூமர்ஸ் நிறுவனம் இரசாயனத் தொழில்மீது ஆதிக்கம் செலுத்துகிறது; அதே சமயம் ஜெனரல் எலெக்ட்ரிக் நிறுவனம் மின்விசைத் தொழில்மீது ஆதிக்கம் செலுத்துகிறது. ஜெனரல் மோட்டார், போர்டு, கிரைஸ்லர் ஆகிய மூன்று பெரும் நிறுவனங்கள் மோட்டார் தொழிலை ஆட்டிப் படைக்கின்றன.

மேற்கு ஜெர்மனியில் ஐ. ஜி ஃபார்பன் நிறுவனத்தின் வாரிசுகள் இரசாயனத் தொழிலில் ஆட்சி புரிகின்றன; மான்னஸ்மான் நிறுவனமும், குளோக்னர் நிறுவனமும் பொறி யியல் தொழில் மீது ஆதிக்கம் செலுத்தி வருகின்றன. அதே சமயத்தில் உருக்குத் தொழில் ஃபிளிக், தைசென் இதர பெரும் நிறுவனங்களின் சாம்ராஜ்யமாக விளங்குகின்றது.

பிரிட்டனில் ஆயுத உற்பத்தியாளர்களாகிய விக்கர்ஸ் நிறுவனம் பல தொழில்கள் மீது ஆதிக்கம் செலுத்தி வரு கின்றது. இம்பீரியல் இரசாயன தொழில் நிறுவனமும் (ஐசிஐ) ராயல் டச்சு ஷெல் நிறுவனமும் இரசாயனத்திலும், எண்ணெயிலும் ஏகபோக ஆட்சி புரிகின்றன.

பிரான்சில், நான்கு ஏகபோகக் குழுக்கள் அலுமினிய உற்பத்தியில் 80 சதவிகிதத்தை தம் வசப்படுத்திக் கொண் டுள்ளன; அதே சமயத்தில் பௌஸாக் நிறுவனம் பருத்தி ஜவுளி உற்பத்தியில் 70 சதவிகிதத்தினைத் தன் கட்டுக்குள் வைத்திருக் கிறது.

வர்த்தகத்திலும், நிதித் துறையிலும் கூட பெரும் ஏகபோக நிறுவனங்கள் ஆதிக்கம் செலுத்துகின்றன. அமெரிக்காவில், மார்கன்கள், ராக்பெல்லர்கள், டுபாண்டுகள், மெல்லன்கள் போன்ற மிகப் பிரபலமான, விரல் விட்டு எண்ணக்கூடிய ஒரு சில சக்தி வாய்ந்த நிதி ஆதிக்கக் குழுக்கள் தேசியப் பொரு ளாதாரத்தின் மீது ஆதிக்கம் செலுத்தி பொருளாதாரக் கொள்கையை நிர்ணயிக்கின்றன.

இறுதியாக, ஆனால் மிக முக்கியமாக சர்வதேச ஏகபோகங்களும் தமது சக்தியைக் காட்டவே செய்கின்றன. இவை மார்க்கெட்டுகளையும் கச்சாப் பொருள் ஆதாரங்களையும் தம்மிடையே பங்கு போட்டுக் கொள்வதற்காக அமைக்கப்பட்ட பல நாட்டு முதலாளிகளின் அமைப்புகள் ஆகும்.

சுதந்திரமான போட்டி நிலைமாறி ஏகபோக முறை ஏற்பட்டு விட்டதால் இனி போட்டி ஏற்படாது என்பதல்ல இதன் பொருள். முதலாளித்துவ நாடுகளில் பல நடுத்தர நிறுவனங்களும், சிறு நிறுவனங்களும், எண்ணற்ற சிறு சிறு பண்ட உற்பத்தியாளர்கள், விவசாயிகள், கைவினைஞர்களும் கூட இன்னமும் இருக்கவே செய்கின்றனர். இவைகளால் தம்மை நிதி ரீதியில் அடிமைப்படுத்தும் பெரும் ஏகபோக நிறுவனங்களுடன் போட்டி போட முடியாது என்பது உண்மையே. உதாரணமாக, அமெரிக்காவில் பெரும்பாலான விவசாயிகள் தமது உற்பத்திப் பண்டங்களை மொத்தமாக பெரும் வர்த்தக நிறுவனங்களுக்கு விற்பனை செய்கின்றன; இவை முறையே நாடு தழுவிய பரவலான சில்லரை வர்த்தக நிறுவனர்கள் மூலமாக விற்பனை செய்கின்றன. விவசாயிகள் ஏகபோக நிறுவனங்களின் தயவில் வாழ வேண்டியிருப்பதால், அவை நிர்ணயிக்கும் விலையை ஏற்றுக் கொண்டாக வேண்டும். இந்த நிலையைப் பயன்படுத்திக் கொண்டு ஏகபோகங்கள் மொத்த விலைகளைக் குறைந்த மட்டத்திலும், சில்லறை விலைகளை உயர்ந்த மட்டத்திலும் வைத்துக் கொள்கின்றன. இவ்வாறு அவை அமோகமான லாபங்களைக் கபளீகரம் செய்து கொள்கின்றன; அதே சமயத்தில், ஆயிரக்கணக்கான விவசாயிகள் ஆண்டுதோறும் ஓட்டாண்டிகளாகி வருகின்றனர்; அவர்களின் பண்ணைகள் ஏலத்திற்கு விடப்படுகின்றன.

ஏகபோகங்கள் எவ்வாறு விலைகளை நிர்ணயிப்பதில் புரட்டுகளைப் புரிகின்றன என்பதை இந்த உதாரணம் காட்டுகிறது. ஏகாதிபத்திய சகாப்தத்தில் பெரும்பாலான பண்டங்கள் இயல்பான சந்தை விலைகளில் விற்கப்படுவதில்லை; உழைப்பாளி மக்களைக் கொள்ளையடிப்பதன் மூலம் உபரி லாபம் முழுவதையும் உத்தரவாதம் செய்து கொள்வதற்காக ஏகபோகங்கள் வெகு உயர்வான விலைகளை நிர்ணயிக்கின்றன.

ஏராளமான உபரி மூலதனத்தைக் குவித்துள்ள ஏகபோகங்கள் அதை லாபகரமான முறையில் பயன்படுத்த முயலுகின்றன. தமது சொந்த நாடுகளில் முதலீடு செய்வதுடன் அவை திருப்தி அடைந்து விடுவதில்லை; மாறாக பேராசையுடன் செயல்படுவதற்கான புதிய களங்களைத் தேடி ஓடுகின்றன; தமது மூலதனத்தை அதிகரித்த அளவில் வெளி நாடுகளில் தொழில்துறை, வர்த்தகத் துறைகளில் முதலீடு செய்கின்றன.

இரண்டாவது உலக யுத்தத்திற்கு முன்பு மூலதனம் பிரதானமாக காலனிகளுக்கும், குறைந்த வளர்ச்சி பெற்ற, பொருளாதார ரீதியில் பின்தங்கிய நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்யப்பட்டது. இவ்வகையான முதலீடு குறிப்பான உயர் லாபங்களை உத்தரவாதம் செய்தது; காரணம், ஐரோப்பா அல்லது அமெரிக்காவை விட அந்த நாடுகளில் சம்பளம் வெகு குறைவாக இருந்தது.

இந்த முதலீடுகள் மூலம் காலனி ஆதிக்க வல்லரசுகளுக்கு (முதன் முதலில் ஏகபோகங்களுக்கு) ஆப்பிரிக்காவிலிருந்து தங்கமும், வைரமும், அண்டை மத்திய கிழக்கிலிருந்து எண்ணெயும், மலேஷியாவிலிருந்து ரப்பரும், தென் அமெரிக்காவிலிடுந்து செம்பு, தகரம், காப்பி, பழங் களும் கிடைத்தன. லெனின் கூறியது போல ஏகாதிபத்திய விருந்துச் சாப்பாட்டிற்கு வெகு பின்னால் வந்து சேர்ந்த நாடுகள் காலனி ஆதிக்கக் கொள்ளையில் தமக்கும் பங்கு கிடைக்க வேண்டும் என்று கோருவதில் மென்மேலும் உறுதி பூண்டன. இந்நிலைமை காரணமாகத்தான் உலகை மறு பங்கீடு செய்வதற்கான ஏகாதிபத்தியப் போர்கள் வெடித்தன.

முதலாளித்துவ நாடுகள் ஏற்றத்தாழ்வாக வளர்ச்சி அடைந்த தானது நிலைமையை மேலும் சிக்கலடையச் செய்தது. அவை கடுமை யான போட்டாப் போட்டியில் ஈடுபட்டுள்ளன; சில நாடுகள் முன்னேறிச் செல்கின்றன; வேறு சில நாடுகள் எப்போதும் பின்தங்கி நிற்கின்றன. முன்பு பொருளாதார ரீதியிலும், ராணுவ ரீதியிலும் மிக மிக சக்தி வாய்ந்தவையாயிருந்த தமது போட்டியாளர்களுக்கு வழி விட்டுச் செல்லவேண்டியதேற்பட்டது. எதிர்காலத்தில் ஏகாதிபத்திய சக்திகளின் சமநிலையில் மீண்டும் மாறுதல் ஏற்பட்டே தீரும். முன்னேறிய எந்த ஒரு ஏகாதிபத்திய வல்லரசும் தனக்குக் கிடைத்த அனுகூலங்களைப் பயன்படுத்தி, தற்காலிகமாயிருந்த போதிலும், சந்தைகளையும், செல்வாக்கு மண்டலங்களையும், பிரதேசங்களையும் தனக்குச் சாதகமாக மாற்றியமைத்துக் கொள்ள முயலுகிறது. இது தான் லெனின் வகுத் தளித்த ஏகாதிபத்திய சகாப்தத்தில் முதலாளித்துவ வளர்ச்சியின் ஏற்றத் தாழ்வான வளர்ச்சி விதியாகும். தமக்கு இடையேயான பரஸ்பர பகைமை யினால் பிளவுற்ற ஏகாதிபத்திய வல்லரசுகள் தமக்குள் போரிடும் கோஷ்டிகளாக மாறுவதற்கு இது இட்டுச் செல்கிறது.

முதலாளித்துவப் பொருளாதாரம் மாறுவது போல் முதலாளித் துவக் கொள்கையும் மாறுகிறது. ஜனநாயக வடிவத்திலிருந்து பிற்போக்கு வடிவத்திற்கு மாறிச் செல்வது ஏகாதிபத்தியத்தின் ஒரு வழக்கமான அம்சம் என்று லெனின் பல தடவைகளில் சுட்டிக்காட்டி யுள்ளார். தொழிலாளிகளைச் சுரண்டுவதை அதிகரிக்கும் அதே சமயத் தில், ஏகபோகங்கள் தமக்கு எதிரான எதிர்ப்பை ஒடுக்குவதற்காக கொடுங்கோல் ஆட்சி முறைக்கு மென்மேலும் அதிகமாகத் திரும்பு

கின்றனர். இத்தகைய பயங்கர வகையைச் சேர்ந்த சர்வாதிகாரத்தின் மிக மிக மோசமான வடிவம்தான் பாசிசம்.

எனினும், அதிர்ஷ்டவசமாக, ஏகபோகங்கள் சர்வ வல்லமை படைத்தவை அல்ல. அவை தம்மிஷ்டப்படி பயங்கர ஆட்சிகளை நிறுவவோ அல்லது மக்கள் விரோதக் கொள்கைகளைக் கடைப்பிடிக்கவோ முடியாது. சமுதாயத்திலுள்ள உழைப்பாளி மக்களும், இதர முற்போக்குப் பகுதியினரும் ஏகபோகங்களையும், இதர சகல பிற்போக்கு சக்திகளையும் எதிர்க்கின்றனர்.

## அரசாங்க ஏகபோக முதலாளித்துவம்

ஏகபோகங்கள் முதலாளித்துவ அரசுடன் இணைவதைச் சுட்டிக் காட்டும் முதல் அடையாளங்கள் இந்நூற்றாண்டின் ஆரம்பத்தில் தோன்றின. ஏகபோக முதலாளித்துவம் அரசாங்க ஏகபோக முதலாளித் துவமாக மாறிக்கொண்டு வருகிறது என்று லெனின் சுட்டிக்காட்டினார்.

இவ்வளர்ச்சியைப் புரிந்து கொள்வதற்கு, முதலில் ஏகபோகங் களுக்கும் முதலாளித்துவ அரசுக்கும் இடையே ஏற்பட்டுள் மாறுதல்களை கண்டறிவதும், இரண்டாவதாக, ஏகாதிபத்திய நாடுகளில் எவ்வாறு அரசின் பாத்திரம் மாறியிருக்கிறது என்பதைப் பரிசீலனை செய்வதும் அவசியம்.

முதலாளித்துவ அரசு எப்போதுமே முதலாளித்துவ வர்க்க ஆதிக்கத் தின் கருவியாக இருந்து வந்துள்ளது. அது அனைத்து முதலாளித்துவ வர்க்கத்தின் விருப்பத்தையும் நலன்களையும் பிரதிபலிக்கிறது. முன்பு, அரசாங்க விவகாரங்களை நிர்வகிப்பதிலும், அன்னிய நாட்டுக் கொள்கைகள், உள்நாட்டுக் கொள்கைகளை வகுப்பதிலும் பெரும் முதலாளிகள் ஏற்கெனவே செல்வாக்கு மிக்க சக்தியாக விளங்கினர். எனினும் சுதந்திரமான போட்டி நிலவிய சகாப்தத்தில் ஆளும், பூர்ஷுவா வர்க்கத்தின் பல்வேறு பகுதியினர் ஆதிக்கம் செலுத்துவதற்காக தமக்குள் சண்டையிட்டுக் கொண்டனர்; தொழி லாளிகளின் புரட்சிகர எழுச்சிகளை ஒடுக்குவதற்காக தமது சக்திகளை ஒன்றிணைக்கும் கட்டாயம் ஏற்பட்ட போது மட்டுமே இச்சண்டை நின்றது.

முதலாளித்துவம் ஏகாதிபத்தியக் கட்டத்தில் நுழைவதுடன் இந் நிலைமை மாறிற்று. உற்பத்தி ஒருமுகப்படுத்தப்பட்டு மூலதனம் மத்தியத்துவப்படுத்தப்பட்டதோடு கூடவே பெரும் ஏகபோகங்கள் பொருளாதார ரீதியில் மிகுந்த பலம் பெற்றன. இது எந்தளவு இருந்தது என்றால், பூர்ஷுவாக்களின் இதர பகுதியினர், அரசியல் அதிகாரத்திற்கான தமது போராட்டத்தில் பெரும் ஏகபோகங்களோடு போட்டி போட முடியாத அளவுக்கு இருந்தது.

ஏகபோகங்கள் தமது பொருளாதாரப் பிடியைத் தொடர்ந்து இறுக்கி வந்தனர். அதிகாரத்திற்கான அவர்களது பேராசையும், அரசாங்க இயந்திரத்தைப் பூரணமாகத் தமக்குக் கீழ்ப்படுத்துவதும் மென்மேலும் உறுதியடைந்தது. முதன் முதலில் பெரும் ஏகபோகங்கள் பிரதான மாகத் தமது கையாட்கள் மூலமாக செயல்பட்டன. பாராளுமன்ற உறுப்பினர்களுக்கும் சர்க்கார் அமைச்சர்களுக்கும் நிதி உதவி அளிப்பது, அரசியல் கட்சித் தலைவர்களுக்கு லஞ்சம் கொடுப்பது மூலம் இது நடை பெற்றது. எனினும் காலம் செல்லச் செல்ல ஏகபோக முதலாளிகள் தமது முகமூடிகளைக் கழற்றி எறிந்து விட்டு, கேந்திர சர்க்கார் பதவி களுக்கு உரிமை கோரிப் பகிரங்கமாக முன்வந்தனர். அண்மைக் காலத் தில் இந்த மாற்றம் வெகு பரவலாகி விட்டது.

அமெரிக்காவில் ஜனாதிபதி ஐசன்ஹோவரின் நிர்வாகம் 17 கோடீஸ்வரர்களின் மந்திரி சபை என்று பல தடவைகள் அழைக்கப்பட்டது. இதற்குப் பிந்திய நிர்வாகங்களிலும் பெரும் முதலாளிகள் முக்கியமான பதவிகளை வகித்து வந்துள் ளனர். ஏகபோகங்கள் தமது பழைய முறைகளைக் கைவிட்டு விட்டன என்பதல்ல இதன் பொருள். பெரும் ஏகபோக கோஷ்டிகள் தமது கையாட்கள் தேர்ந்தெடுக்கப்படுவதற்கும் அவர்களைப் பதவியில் நீடித்து வைத்திருப்பதற்கும் கோடிக் கணக்கான டாலர்கள், மார்க்குகள் அல்லது பிராங்குகளைச் செலவு செய்கின்றன.

அரசாங்க இயந்திரத்தில் கேந்திரப்பதவிகளில் தமது ஆட்களை வைத்திருப்பதோடு மட்டுமின்றி, உள்நாட்டிலும் நாட்டிற்கு வெளி யிலும் தமது நோக்கங்களை அடைவதில் அதிகபட்ச திறமையுடன் இயங்குவதை முன்னிட்டும் ஏகபோகங்கள் அதை முறைப்படுத்தவும் செழுமைப் படுத்தவும் முயலுகின்றன. பிரதானமாக அவற்றின் செல்வாக்கின் கீழ்தான் முதலாளித்துவ அரசு தனது பாத்திரத்தை கணிசமான அளவில் மாற்றிக் கொண்டிருக்கிறது. பிரதானமாக என்று நாம் கூறுவதற்குக் காரணம் இம்மாற்றத்தின் மீது செல்வாக்குச் செலுத்தும் இதர அம்சங்களும் உள்ளன. ஏகபோகங்களால் ஒடுக்கப் பட்ட தொழிலாளி வர்க்கமும் மக்கட் தொகையின் இதர சில பகுதி யினரும் பலதுறைகளில் கணிசமான வெற்றியுடன் பெருமுதலாளித் துவத்தின் ஆட்சியை எதிர்க்கின்றனர். எனினும், பிரதான மாற்றங் கள் பெரு முதலாளித்துவத்தின் நலன்களாலேயே இன்னமும் நிர்ண யிக்கப் படுகின்றன.

பிரதானமாக, அரசு, பொருளாதார விவகாரங்களில் மென் மேலும் அதிகமாகத் தலையிடுகிறது. சுதந்திரமான போட்டி நிலவிய போது இத்தகைய வகை தலையீடு அரிதாயிருந்தது. தனியார் தொழி லுக்கு பூரண சுதந்திர மிருந்தது. தற்போது அமுலிலுள்ள நிலைமை யைப் பாதுகாப்பதும், வேறு எவ்விஷயத்தைப் பற்றியும் கவலைப்

படாதிருப்பதும் தான் அரசின் பணி என்னும் உண்மையை வலியுறுத்து வதற்காக அதன் பாத்திரத்தைக் காவற் பொறுப்பாளர் பாத்திரம் என்று அந்நாட்களில் முதலாளித்துவ சித்தாந்தம் வருணித்தது. ஆனல் தற்கால ஏகாதிபத்திய அரசு முற்றிலும் மாறுபட்டதாயிருக் கின்றது. அது தொழிலாளிகளுக்கும் முதலாளிகளுக்கும் இடையே யான உறவுகளில் தலையிடுகிறது; பொருளாதார வளர்ச்சியைத் தேசிய அளவில் திட்டமிடுவதற்கு முயற்சி செய்கிறது, ஆராய்ச்சித் துறைக்கு நிதி உதவி அளிக்கிறது. மேலும் அது தேசிய வருமானத்தை மறு பங்கீடு செய்கிறது, பொருளாதாரத்தின் சில பகுதிகளை வசப்படுத்திக் கொள்கிறது; இவ்வாறு எடுத்துக் கொள்ளப்படும் பகுதிகள் சில சமயங் களில் மிக பெரிய பகுதிகளாகக் கூட இருக்கின்றன.

முதற்பார்வையில் இத்தலையீடு சமுதாய வளர்ச்சியின் தற்போதைய தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கே போலும் என்று தோன்றக்கூடும். தற்கால உற்பத்தியின் சமுதாயத் தன்மை திட்டமிடலைக் கோருகிறது; அரசாங்கத்தின் பாத்திரத்தை மேம்படுத்தாமல் இதை நிலைநாட்டுவது சாத்தியமல்ல. இக்கண்ணேட்டத்தில் பார்த்தால் நவீன முதலாளித் துவ சமுதாயத்தில் நடைபெற்று வரும் மாறுதல்கள் சோஷலிச மாற்றத்திற்கான முன் தேவைகளை நிலைநாட்டி வருகின்றன, எனினும், இது பிரச்சினையின் ஒரு பகுதி மட்டுமே. மற்றொரு பகுதி என்ன வென்ருல், அரசாங்க இயந்திரமும், ஏகபோகங்களும் இணையும் போது, பொருளாதார விவகாரங்களில் அரசாங்கம் தலையிடுவது, முதலாவ தாகவும், முதன்மையாகவும், பெரு முதலாளித்துவத்தின் நலன் களுக்குப் பாடுபடுவதாக அமைந்துள்ளது.

தொழிலாளிகளுக்கும் முதலாளிகளுக்கும் இடையேயான உறவு களில் தற்கால முதலாளித்துவ அரசு தலையிடும்போது, தான் ஒரு பாரபட்சமற்ற நீதிபதி ஸ்தானத்தை வகிப்பதாகவும், தான் சம்பந்தப் பட்டமட்டிலும் இருதரப்புகளின் நலன்களும் சமமுக்கியத்துவம் வாய்ந்தவையாக உள்ளதாகவும் பசப்புவது குறிப்பிடத்தக்கது ஆகும். எனினும், உண்மையில், அரசாங்கத்தின் அதிகாரம், சக்தி முழுமையும் முதலாளிகளின் நலன்களுக்குச் சாதகமாக அமுல் செய்யப்பட்டது. உதாரணமாக, அமெரிக்காவில் டாப்ட்-ஹார்லி சட்டமும், இதர மக்கள் விரோதச் சட்டங்களும் அமுலில் உள்ளன. இதன் கீழ் வேலை நிறுத்தங்கள் தேசியப் பாதுகாப்பை அச்சுறுத்துகின்றன என்ற காரணம் காட்டி தடை செய்யப்படுகின்றன, சம்பளங்கள் முடக்கப் படுகின்றன; அதே சமயத்தில் விலைகள் விஷம் போல் உயர்வதற்கும் இன்ன பிறவற்றுக்கும் அனுமதி அளிக்கப்படுகிறது.

பல முதலாளித்துவ நாடுகளில் சர்க்கார் அமைப்புகள் பொருளா தார வளர்ச்சி வேலைத் திட்டங்களை வகுக்கின்றன. இதன் நோக்கம் முலலாளித்துவ உற்பத்தியை ஸ்திரப்படுத்துவது, வேலையில்லாத் திண்டாட்டத்தைக் குறைப்பது, குறைந்தபட்சம் அராஜகம், போட்டி

யின் நாசகரமான விளைவை ஓரளவுக்காவது போக்குவது என்பதே; இத்தகைய திட்டமிடல் சில பலன்களை அளிக்கவே செய்கிறது; ஆனால், இது பெரு முதலாளித்துவத்தின் நலன்களுக்கு எவ்விதத்திலும் பாதகம் விளைவிக்காத முறையில் எப்போதும் நிறைவேற்றப்படுகிறது. இன்னும் சொல்லப்போனால், பெரும் முதலாளித்துவ நிறுவனங்கள் இதை ஒரு திரையாகப் பயன்படுத்துகின்றன. அவை, அரசின் பரிந்துரைகளை பெயரளவில் நிறைவேற்றுவதாகப் பசப்பிக் கொண்டு, அதாவது, தேசிய நலன்களுக்காகப் பாடுபடுவதாகப் பசப்பிக் கொண்டு தொடர்ந்து கொள்ளை லாபமடித்து வருகின்றன.

முதலாளித்துவத் திட்டமிடல் எந்த வகையிலும் சோஷலிசப் பொருளாதாரத் திட்டமிடுதலுக்கு சமமானதல்ல. முதலாளித்துவ நாடுகளில் தனியார் நிறுவனங்கள் பொருளாதாரத் திட்டமிடலை கடைப்பிடிக்க வேண்டும் என்ற கட்டாயமில்லை. அவை பிரதானமாக சிபாரிசுகளோ அல்லது மதிப்பீடுகளோ மட்டுமே. தனியார் முதலாளித்துவ நிறுவனங்களுக்கோ அல்லது ஏகபோக கோஷ்டிகளுக்கோ அரசு உற்பத்தி இலக்குகளை அளிப்பதில்லை; காரணம் அவை ஒன்றுடன் ஒன்று போட்டியிடுகின்றன; அவை தமது நடவடிக்கைகளைத் திட்டமிட்ட முறையில் ஒன்றிணைக்க முடியவில்லை அல்லது சமசீரான பொருளாதார அபிவிருத்தியை உத்தரவாதம் செய்ய முடியவில்லை.

அரசு பட்ஜெட் மூலமாக தேசிய வருமானம் மறுபங்கீடு செய்யப்படும்போது, இது. ஏகபோக லாபங்களை அதிகரிப்பதற்கும் உதவுகிறது. முதலாளித்துவ அரசு வரி மூலமாக உழைப்பாளி மக்களிடமிருந்து ஏராளமான தொகைகளை வசூல் செய்த போதிலும் அது அதில் ஒரு பகுதியை மட்டுமே கல்வி, சுகாதாரப் பாதுகாப்பு, இதர சமுதாய சேவைகளுக்காகச் செலவிடுவதற்காகப் பயன்படுத்துகின்றது. பெரும் தொகை ராணுவ செலவீட்டிற்காகத்தான் பயன்படுத்தப்படுகிறது, ராணுவவெறி தொடர்ந்து அதிகரித்து வருகிறது. உதாரணமாக, 1970 இல் மட்டும் நேடோ நாடுகள் 10,300 கோடி டாலரை போர்த் தயாரிப்புகளுக்காகச் செலவிட்டன. கடந்த சில ஆண்டுகளில் அமெரிக்காவின் ராணுவச் செலவு ஏறத்தாழ 40,000 கோடி டாலராக இருந்தது.

இதன் உண்மையான பொருள் என்னவென்றால் உழைப்பாளி மக்கள் ராணுவச் செலவில் பெரும் பகுதியைத் தாங்கிக் கொள்ள வேண்டியதிருக்கிறது; அதே சமயத்தில் ராணுவ தளவாடங்களுக்காக அரசு செலவுடும் தொகை பெரும் ஆயுத உற்பத்தி செய்யும் பெரு நிறுவனங்களின் பெட்டகத்திற்குச் சென்று விடுகின்றன.

அரசு ஏகபோக முதலாளித்துவத்தின் கீழும் அரசு உடமை அதிகரிக்கிறது; இது மூன்று வழிகளில் நடைபெறுகிறது: தொழிற்சாலைகள் நிர்மாணம் (பிரதானமாக போர் தளவாட உற்பத்தி) மூல

மாக; தனியார் நிறுவனங்களில் பங்கு தொகைகளை வாங்குவதற்காக பட்ஜெட் ஒதுக்கீடுகள் செய்வதன் மூலமாக; முதலாளித்துவ அரசு தொழிற்சாலைகள், தொழில்களை தேசிய மயமாக்குவதன் மூலமாக. அநேக சந்தர்ப்பங்களில் அரசு ஏகபோக உடமை விரிவடைகிறது. காரணம், அணுசக்தித் தொழில், அல்லது நிலக்கரி சுரங்கம் அல்லது மின்விசை பொறியியல் போன்ற லாபகரமற்ற தொழில்கள் போன்றவற்றில் பிரம்மாண்டமான முதலீடுகள் அவசியமாவதால் அரசு இந்தத் தொழில்களை ஏற்று நடத்துகிறது.

> உதாரணமாக, பிரிட்டனில் அரசு, நிலக்கரி, மின்விசை, எரிவாயுத் தொழில்கள்மீது ஆதிக்கம் செலுத்துகிறது. அரசாங்க-உடமை நிறுவனங்களில் நாட்டின் தேர்ச்சி பெற்ற தொழிலாளிகள், அலுவலகத் தொழிலாளிகளில் 20 சதவிகிதத்தினருக்கு மேற்பட்ட பகுதியினர் வேலை செய்கின்றனர். பிரான்சில், ஒட்டுமொத்த தேசிய பண்டத்தில் சுமார் 15 சதவிகிதத்தை அரசுத் துறை உற்பத்தி செய்கிறது. விமானத் தொழிலில் ஏறத்தாழ 80 சதவிகிதத்தையும், நிலக்கரி, தொழிலிலும் மின்விசைத் தொழிலிலும் அநேகமாக அனைத்தையும், அரசாங்கம் தனது கட்டுப்பாட்டின்கீழ் வைத்துக் கொண்டுள்ளது. இத்தாலியில் அரசு-உடமை நிறுவனங்களில் நடுத்தர ஊழியர்களில் தேர்ச்சி பெற்ற தொழிலாளிகளில் 20 சதவிகிதத்தினருக்கு மேற்பட்டோர் வேலை செய்கின்றனர்.

வர்க்க சாரத்தில் அரசு உடமை என்று சொல்லப்படுவதெல்லாம் அரசு ஏகபோக உடமையே. இது எதிர்பார்க்கக் கூடியதுதான்; காரணம், இந்த உடமைகளை உடமையாகப் பெற்று அவற்றின்மீது ஆதிக்கம் செலுத்தும் அரசு பெரு முதலாளித்துவத்தின் நலன்களுக்கே பிரதானமாக சேவை புரிகின்றது.

தொழிலாளி வர்க்கமும், கம்யூனிஸ்டுக் கட்சிகளும், புரட்சிகர ஜனநாயக மனப்பான்மை கொண்ட சமுதாயப் பகுதியினரும் அரசாங்க-ஏகபோக உடமையின் முதலாளித்துவ சாரத்தை அம்பலப்படுத்தவும், முதலாளிகளிடமிருந்து கேந்திரத் தொழில்களை பறிமுதல் செய்யப் போராடவும் முனைந்தன. பிரிட்டனிலும், பிரான்சிலும் பல தொழில்கள் தேசியமயமாக்கப்பட்டபோது, 1962ல் இத்தாலியில் அரசாங்கம் மின்விசைத் தொழிலை கைவசப்படுத்திக் கொண்டபோது இப்போராட்டம் இரண்டாவது உலகப் போருக்குப் பிறகு ஏற்பட்ட மாறுதல்களில் பெரும்பங்கு வகித்தது.

தற்போது கம்யூனிஸ்டு, தொழிலாளர், புரட்சிகர ஜனநாயகக் கட்சிகளின் பெரும்பாலான வேலைத் திட்டங்களில் தேசியமயமாக்குவது பற்றிய கோரிக்கைகள் அடங்கியுள்ளன. எனினும், முற்போக்கு சக்திகள் வெறும் சர்க்கார் நிர்வாகமேற்றலைவிட விஞ்சிய கோரிக்கை

களை வலியுறுத்தி வருகின்றன. அரசாங்க நிறுவனங்கள்மீது பயனுறுதி யுள்ள ஜனநாயகக் கட்டுப்பாடு நிலைநாட்டப்பட வேண்டுமென்று அவை வற்புறுத்துகின்றன.

உலக அரங்கம் சம்பந்தப்பட்ட மட்டிலும், ஐரோப்பிய பொருளா தாரக் கூட்டமைப்பு (பொதுச் சந்தை), ஐரோப்பிய சுதந்திர வர்த்தக அமைப்பு போன்ற சர்வதேச ஏகபோக கோஷ்டிகளின் தோற்றத்தை அரசாங்க ஏகபோக முதலாளித்துவம் குறிப்பிடுகிறது.

இதன் விளைவாக, பெரு முதலாளித்துவத்தின் நிலையை வலுப் படுத்தி முதலாளித்துவத்தின் வாழ்வை நீடிப்பதற்காக அரசு ஏகபோக முதலாளித்துவமானது ஏகபோகங்களின் சக்தியை அரசின் சக்தியுடன் இணைக்கிறது. எனினும் ஏகபோக முதலாளித்துவம் அரசு ஏகபோக முதலாளித்துவமாக மாறும்போது, ஏகாதிபத்தியத்திற்குப் பிறகு ஒரு புதிய கட்டத்திற்கு மாற்றம் ஏற்பட்டிருப்பதாகக் கொள்ளக்கூடாது. ஏகாதிபத்திய வளர்ச்சிக் கட்டத்தில் உள்ள அதே முதலாளித்துவம்தான் இது.

> அரசு - ஏகபோக முதலாளித்துவத்தை அரசு - முதலாளித் துவத்துடன் போட்டுக் குழப்பக்கூடாது; அரசாங்க முத லாளித்துவம் ஒரு மேலும் விரிவான கருத்தமைப்பாகும். அரசாங்க ஏகபோக முதலாளித்துவம் முன்னேற்றமடைந்த முதலாளித்துவ நாடுகளில்தான் நிலவி வருகிறது; மாறாக பொருளாதார ரீதியில் குறைந்த வளர்ச்சி பெற்ற நாடுகளில்— இங்கு இது அரசுத் துறை அல்லது பொதுத் துறையின் பகுதி யாக உள்ளது—அரசாங்க முதலாளித்துவம் நிலவமுடியும்.

அரசியல் சுதந்திரம் பெற்ற பிறகு ஆசியாவிலும் ஆப்பிரிக்கா விலும் பல நாடுகள் தமது பொருளாதாரப் பின் தங்கிய நிலைமையைப் போக்குவதில் தமது முயற்சிகளை முனைப்பாக்கி வந்தன. அவ்வாறு செய்யும் போது, ஒவ்வொரு வகையிலும் பொதுத்துறையை வளர்ப் பதற்கான அவசியத்தை அவை உணர்ந்தன. இத்துறையை வளர்ப் பதும், பொருளாதாரத்தில் திட்டமிடல் கோட்பாடுகளை ஏற்பதும், சகல புதிய நாடுகளுக்கும் பொதுவான வளர்ச்சியின் தர்க்க நியதி விளை வாகும். இத்துறை அவற்றின் பொருளாதாரங்களை வேகமான வீதத்தில் வளர்ப்பதற்கு உதவி புரிவதுடன் அன்னிய முதலாளித்துவ நலன்களின் நிர்ப்பந்தத்தைச் சமாளிக்கவும் துணைபுரிகிறது.

எனினும், பொதுத்துறையானது அதிகாரத்திலுள்ள வர்க்கத்தின் நலன்களுக்கு எப்போதுமே சேவை புரிகிறது. நாட்டின் சொந்த முதலாளிகள் ஆட்சி செலுத்தும்போது, பொதுத்துறை அவர்களின் அரசியல் ஆட்சிக்கான பொருளாதார அடித்தளத்தை நிலைநாட்டுவதற் கான அரசாங்க முதலாளித்துவமாக மாறுகிறது, மறுபுறம், ஆட்சி

அதிகாரம், சோஷலிசத்தை நோக்கிய நாட்டின் முன்னேற்றத்திற்கு வழி காட்டிச் செல்லும் புரட்சிகர ஜனநாயக சக்திகளின் வசமிருக்கும் போது பொதுத் துறையானது முதலாளித்துவமற்ற மாற்றங்களுக்கான அடித்தளமாக மாறிவிடுகிறது.

## 9. முதலாளித்துவத்தின் பொது நெருக்கடி

### முதலாளித்துவத்தின் முரண்பாடுகள் உக்ரமடைதல்

உற்பத்தி சக்திகளுக்கும் உற்பத்தி உறவுகளுக்கும் இடையேயான மோதல் தான் வரலாற்று வளர்ச்சி, ஓர் உற்பத்தி முறையிலிருந்து மற்றோர் உற்பத்தி முறைக்கு மாறிச் செல்லும் வழியில் சமுதாயப் புரட்சிகளின் பொருளாதார அடித்தளம் ஆகியவற்றின் மூலாதார சக்தி ஆகும். உற்பத்தியின் சமுதாயத் தன்மைக்கும் தனியார் முதலாளித்துவ வடிவ பயனீட்டுக்கும் இடையேயான முரண்பாட்டுக்கு இது ஓர் உதாரணம் ஆகும். இதுவே முதலாளித்துவ அமைப்பின் பிரதான முரண்பாடு; இது எப்போதும் மென்மேலும் கடுமை அடைந்து வருவதை நாம் காண்கிறோம்.

முதலாளித்துவம் வளர வளர உழைப்பு சோஷலிச மயமாக்கப்படுவதற்கான அளவில் ஓர் உறுதி மிக்க அதிகரிப்பு இருக்கவே செய்கின்றது. தனிப்பட்ட தொழிற்சாலைகள் தொழில்களுக்கு இடையேயும், இவற்றுக்கும் ஒட்டுமொத்தத்தில் பொருளாதாரத்திற்கும் இடையேயும் பொருளாதார பந்தங்களும் இடைச் சார்பும் மிகவும் நெருக்கமடைந்து வருகிறது.

> ஒரு நவீன தொழிற்சாலை ஒரு ஜதை காலணியை உற்பத்தி செய்வதற்கு கால்நடைகளை வளர்த்தாக வேண்டும், ஒரு தனிச் சிறப்பு வாய்ந்த தொழிற்சாலையில் தோலைத் தயாரிக்க வேண்டும், அதற்குச் சாயமேற்றுவதற்கு இரசாயனங்களைப் பயன்படுத்த வேண்டும், அதேசமயத்தில் இதர தெழிற்சாலைகள் ஜவுளிகளையும், நூலையும் உற்பத்தி செய்தும் பொறியியல் தொழிற்சாலைகள் காலணி தொழிற்சாலைகளுக்குத் தேவையான இயந்திரகளையுப், சாதனங்களையும் உற்பத்தி செய்வதும் அவசியம் மட்டுமின்றி இயந்திரங்களைச் செய்வதற்கு தாதுப் பொருளும், உருக்கும் நம்மிடமிருக்கவேண்டும். எல்லாவற்றுக்கும் மேலாக இந்தத் தெழிற்சாலைகள் அனைத்துக்கும் எரிபொருள், மின்விசை, மசகுப் பொருள்களும் தேவை.

முதலாளித்துவம் உழைப்பை ராட்சத வீதத்தில் ஒருமுனைப் படுத்துவதால் உற்பத்திச் செயல்பாடுகள் சமூகமயமடைகின்றன எனினும், முதலாளிகள் உற்பத்தி சாதனங்களையும் உழைப்புப் பண்டங்களையும் உடமையாக்கி வைத்திருப்பதால், பயனீட்டின்

தனியார் வடிவம் தொடர்ந்து இருந்து வருகிறது. இத் தனியார் உடமை உற்பத்தியின் வளர்ச்சியைத் தடை செய்து உற்பத்தி சக்தி களின் வளர்ச்சியை மட்டுப் படுத்துகிறது.

உதாரணமாக, முன்னேற்ற மடைந்த முதலாளித்துவ நாடுகள் ஓர் உயர் பொருளாதார வளர்ச்சி மட்டத்தை எய்திவிட்ட போதிலும், அவற்றிடம் அளப்பரிய உள்ளாற்றல்கள் இருந்த போதிலும், அவற் றின் உற்பத்தி குறைந்த வேகத்திலேயே வளர்கிறது. சில ஆண்டுகள் அது அதே நிலையில் இருக்கின்றது. இன்றைய முதலாளித்துவத்தின் ஒரு விசேஷ அம்சம் என்ன வென்றால் தொழில்கள் ஒரு போதும் முழு ஆற்றலுடன் இயங்குவதில்லை, ஒரு குறிப்பிடத் தக்க அம்சம் என்ன வென்றால் பொருளாதாரம் ராணுவத் தன்மை பெறுதல் ஆகும்; இது ஏகாதியத்திய வாதிகளின் ஆக்கிரமிப்பு நோக்கங்களிலிருந்து எழுவ தோடு மட்டுமின்றி லாபங்களுக்கான அடங்காப் பசியிலிருந்து எழு கிறது. முதலாளித்துவத்தின் உயர் வளர்ச்சியற்ற உற்பத்தி சக்திகளைப் பயன்படுத்தி கோடிக்கணக்கான மக்களுக்கு குறுகிய கால வரம்புக்குள் மேலும் நல்ல வாழ்க்கைத் தரத்தை அளிக்க முடிந்த போதிலும், இச் சக்திகள் மனித குலத்தின் நலன்களுக்கு விரோதமாக மரண சாதனங் களையும் நாசகரக் கருவிகளையும் உற்பத்தி செய்வதற்குத்தான் பிரதான மாக பயன் படுத்தப் படுகின்றன. உற்பத்தி சக்திகள் சுரண்டும் சிறு பான்மையினராகிய முதலாளித்துவத்தின் ஆதிக்கத்தில் இருப்பதால், உழைப்பாளி மக்கள் அல்லது சமுதாயம் முழுமையின் வசம் இருக்க வில்லை— இந்த நிலைமை ஏற்படுகிறது.

வெகு நீண்டகாலமாகவே முதலாளித்துவ உற்பத்தி உறவுகள் முதலாளித்துவ உற்பத்தி சக்திகளின் தன்மைக்கு ஏற்றவாறு இருக்கும் நிலை மாறிவிட்டன; இவை அவற்றுடன் மோதத் துவங்கி விட்டன. உற்பத்தியின் சமூகத் தன்மைக்கும் பயனீட்டின் தனிவுடமை வடிவத் திற்கும் இடையேயான பகிரங்கமான முரண்பாடு இப்போது வெகு கடுமையாகி விட்டது. அரசாங்க ஏகபோக முதலாளித்துவம் சோஷ லிச மாற்றத்திற்கான சகல பொருளாதார முன் தேவைகளையும் உண்டு பண்ணி விட்டது. அதனுடைய சக்தி வாய்ந்த தொழிற்துறை அடித் தளமும் ஈடு இணையற்ற உயர் உற்பத்தி சமூக மயமாக்கல் மட்டமும் பொருளாதார அராஜகம், நெருக்கடிகளுக்கு முற்றுப்புள்ளி வைக்கப் படுவதையும் மொத்தத்தில் சமுதாயம் முழுவதின் நலன்களை முன் னிட்டு திட்டத்திற்கு ஏற்ப உற்பத்தி சக்திகளின் வளர்ச்சியை உத்தர வாதம் செய்வதையும் சாத்திய மாக்கியுள்ளது, ஆனால் இதை நிறை வேற்றி வைப்பதற்கு உற்பத்தி சாதனங்களின் தனியார் உடமைக்கு முற்றுப்புள்ளி வைக்க வேண்டுவது, அதாவது, முதலாளித்துவ அமைப் புக்கு முற்றுப்புள்ளி வைக்க வேண்டுவது அவசியம்.

ஏகாதிபத்தியத்தை மரணப்படுக்கையிலுள்ள முதலாளித்துவம் என்று வருணிக்கும் போது, தொழிலாளி வர்க்கத்தின் தலைமையில்

மக்களின் உறுதிமிக்க போராட்ட மின்றி அது தானுகவே மடிந்துவிடும் என்று நாம் பொருள் கொள்ள வில்லை. ஏகாதிபத்தியம் மரணப் படுக்கையிலுள்ள முதலாளித்துவம் என்பதோடு மட்டுமின்றி சோஷலிசப் புரட்சியின் தருவாய் என்றும் லெனின் கருத்துத் தெரிவித்தார். இந்நிலையில் முதலாளிகள் தாமாகவே அமைதியாக விலகிக் கொண்டு விடுவர் என்று எதிர்பார்க்கக் கூடாது. மாருக அவர்கள் தமது, நிலையையும், தமது அமைப்பையும் பாதுகாத்துக் கொள்வதற்காக சகல முயற்சிகளையும் செய்வர். ஆனுல் அவர்களால் தவிர்க்க ஒண்ணுத முடிவைத் தவிர்க்கவே முடியாது முதலாளித்துவத்தின் முரண்பாடுகள் வெடிக்கும் நிலையை எய்தியுள்ளன; எனவே அதன் அழிவு நிச்சயம்.

ஏகபோக முதலாளிகள் முனைப்பாகச் சுரண்டுவதை எதிர்த்துத் தொழிலாளி வர்க்கம் மென்மேலும் அதிகமாகப் போராடி வருகிறது. தொழிலாளரின் புரட்சிகர இயக்கம் பெருகிக் கொண்டே வருகிறது. முதலாளித்துவ ஒடுச்கு முறையிலிருந்து மீட்சி அடைவதற்கும், சமுதாதாயத்தை சோஷலிசப் பாதையில் புனரமைத்துக் கொள்வதற்கும் உழைப்பாளி மக்கள் போராடி வருகின்றனர்.

காலனிகள், சார்பு நாடுகளின் மக்களை ஏகபோக முதலாளிகள் அடிமைப் படுத்தும் போது, அவர்கள் கோடிக்கணக்கான மக்களை அழிவுக்கு இட்டுச் செல்கின்றனர். சுதந்திரத்தைப் பெறுவது அல்லது செத்து மடிவது என்னும் ஒரே வாய்ப்புத்தான் அடிமைப் படுத்தப் பட்ட மக்களுக்கு உள்ளது. எனவே தான், ஏகாதிபத்தியத்தியத்திற்கு எதிரான தேச விடுதலை இயக்கம் அலை அலையாகப் பெருகி வருகிறது.

ஏகபோக முதலாளிகள் ராணுவ ஆட்சிகளுக்கு முட்டுக் கொடுத்து போர்களைத் தூண்டி வருகின்றனர், இதில் கோடிக்கணக்கான மக்கள் கொல்லப் படுகின்றனர், உலகில் பல நூற்ருண்டு காலமாக உருவாக்கப் பட்ட பெருஞ் செல்வம் அழித் தொழிக்கப் படுகின்றது, எனவேதான் எங்கணும் சமாதானம், ஜனநாயகத்திற்கான இயக்கம் அதிகரித்து வரு கிறது.

இச்சக்திகள் ஒன்றிணைந்து ஒரே பிரவாகமாக மாறி ஏகாதிபத்தியத்தை நிச்சயமாக அழித்து விடும். முதலாளித்துவ சமுதாயத்தின் முடிவு தவிர்க்க ஒண்ணுதது. இப்போது, நாம் முதலாளித்துவத்திலிருந்து சோஷலிசத்திற்கு மாறிச்செல்லும் கட்டத்தில் நுழைந்துள்ளோம்.

எனினும், முதலாளித்துவம் சமசீரற்ற நிலையில் வளர்ச்சி அடைவதால், இது திடீரென்று நிகழ்ந்துவிட முடியாது; முதலாளித்துவத்தின் அழிவும், சோஷலிசத்தின் வெற்றி வாகையும் ஒரு சகாப்தம் முழுவதும்—முதலாளித்துவப் பொது நெருக்கடி சகாப்தம் முழுவதும் நடைபெறுகிறது.

## முதலாளித்துவப் பொது நெருக்கடியின் கட்டங்கள்

முதலாளித் துவத்துவப் பொது நெருக்கடிக் காலக்கட்டத்தில் அதன் உள் முரண்பாடுகள் வெகுவாகப் பெருகி அது தனது ஆட்சியின் கீழ் தனிப் பட்ட நாடுகளை வைத்திருக்க முடியாத நிலையை அடைந்து விடுகிறது. ஒன்றன் பின் ஒன்ருக அவை முதலாளித்துவ முகாமி லிருந்து பிய்த்துக் கொண்டு சென்று சோஷலிசப் பாதையை மேற் கொள்கின்றன. இத்துடன் கூடவே, சோஷலிசக் கூட்டமைப்பின் தோற்றமும், அதிகரித்து வரும் சக்தியும் ஏகாதிபத்திய அமைப்பின் சீரழிவை வேகப் படுத்துகின்றன.

முதலாவது உலகப் போர், ரஷ்யாவில் 1917 இல் சோஷலிசப் புரட்சியின் வெற்றிவாகை ஆகியவற்றுடன் முதலாளித்துவப் பொது நெருக்கடியின் முதல் கட்டம் துவங்கிற்று. ஆப்பிரிக்கா உட்பட உலகெங் கணும் நடை பெறும் தொழிலாளி வர்க்க இயக்கத்தின் மீதும், தேச விடுதலை இயக்கத்தின் மீதும் இந்தப் புரட்சி பிரமாண்டமான செல் வாக்கு வகித்தது. மிகவும் இழிவான ஒடுக்கு முறையும் சுரண்டலும் உடைய காலனி அமைப்பின் முடிவின் துவக்கத்தை அது குறித்தது,

கிழக்குலக நாடுகள் மீது ஜார் சர்க்கார் திணித்திருந்த சகல நியாய மற்ற ஒப்பந்தங்களையும் சோவியத் அரசு ரத்துச் செய்தது; அவற்றுடன் சமத்துவ உறவுகளை நிலைநாட்டிக் கொண்டது. இந்த நிகழ்ச்சியும் ஏகாதிபத்தியம், காலனி ஆதிக்கத்தின் அடித்தளங்களுக்கு மர்ம அடி கொடுத்தது. ரஷ்யாவில் நடைபெற்ற 1917ம் ஆண்டுப் புரட்சியின் செல் வாக்கின் கீழ் ஆப்பிரிக்காவில் ஏகாதிபத்தியத்திற்கு எதிரான புரட்சிகர நடவடிக்கைகள் கணிசமான அதிகரித்தன. தேச விடுதலைப் போராட்டம் மென்மேலும் அதிக சக்தி பெறத் தொடங்கியது.

1920ஆம் ஆண்டுகளில் பிரிட்டிஷ் காலனி ஆதிக்கத்திற்கு எதிரான மக்களின் ஆயுதந்தாங்கிய போராட்டம், எகிப்து மீதான இங்கிலாந்தின் காப்பு நாட்டு அந்தஸ்துக்கு முற்றுப் புள்ளி வைத்தது. அதே சமயத் தில், ஸ்பெயினின் காலனி ஆட்சிக்கு எதிராக ஓர் ஆயுதந் தாங்கிய எழுச்சி நடைபெற்றது. நைஜிரியா, ஜாம்பியா, சிராலியோன், டாஹோமி, காமரூன், டோகோ ஆகிய வற்றில் பெரும் விவசாயி எழுச்சிகள் நடைபெற்றன, முப்பதாம் ஆண்டுகளில் காங்கோ, மேல் வோல்டா, டாஹோமி, கோல்ட் கோஸ்ட், மற்றும் பல நாடுகளில் விவசாயி இயக்கங்கள் வெடித்தன. நகரப் புறங்களில் ஆப்பிரிக்கத் தொழிலாளிகளும் கூட மேலும் நல்ல வாழ்க்கை ஏற்படுத்துவதற்காக வும், அரசியல் உரிமைகளுக்காகவும் போராடத் துவங்கினர். மக்களின் மிக மிக அரசியல் போதம் பெற்ற மக்கட் பகுதியினரிடையேயும், தொழிலாளிகள், அறிவுத்துறையினர் விவசாயிகளிடையேயும் 1917ம் ஆண்டுப் புரட்சியானது சோஷலிச, கம்யூனிசக் கருத்துக்கள் பரவுவதை ஊக்குவித்தது.

இரண்டாவது உலகப் போர் முதலாளித்துவப் பொது நெருக்கடியை உக்ரப்படுத்தி ஆழமடையச் செய்தது. ஐரோப்பாவிலும் ஆசியாவிலும் பல நாடுகள் முதலாளித்துவ உலகிலிருந்து உடைத்துக் கொண்டு வெளியேறின; இது இந்த நெருக்கடியின் இரண்டாவது கட்டத்தை குறித்தது. சோஷலிசம் ஒரு நாட்டின் எல்லைகளைத் தாண்டிச் சென்றது; ஓர் உலக சோஷலிச அமைப்பு உருவாயிற்று. இதற்கிடையே முன்னுள் காலனிகள், அரைக் காலனிகளில் தேச விடுதலை இயக்கங்களின் காரணமாக, எடுப்பான அளவில் பல சுதந்திர நாடுகள் தோன்றின.

1950ஆம் ஆண்டுகளின் இரண்டாவது பாதியில் முதலாளித்துவத்தின் பொது நெருக்கடி அதன் மூன்றுவது கட்டத்தை அடைந்தது. இதில் முக்கியத்துவம் வாய்ந்தது என்னவென்றுல் இக்கட்டம் ஓர் உலகப் போரின் விளைவாக ஏற்படவில்லை. முன்பு முதலாளித்துவம் வலுவாக விளங்கி, உழைப்பாளி மக்களின் சோஷலிச இயக்கத்தையும் ஒடுக்கப்பட்ட மக்களின் தேச விடுதலைப் போராட்டத்தையும் நசுக்க முடிந்தது. முதலாளித்துவ நாடுகள் உள்நாட்டு பூசல், போர்களினுல் அலைக்கழிக்கப்பட்டு பலவீனமடைந்த பின்னர்தான் விடுதலை இயக்கங்கள் பெரும் வெற்றிகளை அடைவதை முதலாளிகளால் தடுக்க முடியாது போயிற்று.

எனினும், தற்போது ஏகாதிபத்திய அமைப்பின் சீரழிவை எந்த சக்தியினுலும் தடுத்துவிட முடியாது. உதாரணமாக, ஒரு சிறு நாட்டின் - கியூபாவின் - வீரமிக்க மக்கள் தமது சுதந்திரத்தை அடைந்ததோடு மட்டுமின்றி ஏகாதிபத்திய அதிவல்லரசின் வெகு அருகாமையிலேயே சோஷலிசத்தை நிர்மாணிக்கத் தொடங்கியுள்ளனர். இது ஒரு விசேஷச் சிறப்பு வாய்ந்த சாதனை ஆகும்.

> சோஷலிசத்துடனுன தமது மோதலில் முதலாளித்துவ நாடுகளின் ஆளும் வர்க்கங்கள் மறைமுகமான சுரண்டல் வடிவங்களைப் பயன்படுத்துகின்றன. வெகுஜனங்களின் புரட்சிகர நடவடிக்கையை தவிர்ப்பதற்காக அவை தொழில் நுட்பவியல் முன்னேற்றத்தின் அனுகூலங்களை பயன்படுத்தி ஓரளவு சீர்திருத்தங்களை நிறைவேற்றி வருகின்றன.
>
> ஆனுல், புதிய நிலைமைகளுக்கு ஏற்ப தன்னை மாற்றிக் கொள்வதற்கு எவ்வளவு கடினமான முயற்சி செய்தாலும், அதன் பொது நெருக்கடி தொடர்ந்து ஆழமடைந்து வருகின்றது. உரிமைகளைப் பெறுவதற்கான தொழிலாளிகளின் போராட்டம் தொடர்ந்து எப்போதும் அதிகரித்து வருகிறது. 1958-இல் முதலாளித்துவ நாடுகளில் வேலை நிறுத்தங்களில் பங்கு கொண்ட தொழிலாளிகளின் எண்ணிக்கை 2. 6 கோடியாக இருந்தது; மாருக' 1970-இல் இது 7 கோடி எண்ணிக்

கைக்குத் தாவிச் சென்றது. இப்புள்ளி விவரங்கள் உண்மையை எடுத்துரைக்கின்றன.

ஏகாதிபத்தியவாதிகள் ஒரே வர்க்கம் என்ற முறையில் உலக சோஷலிசத்தை எதிர்த்துப் போராடுவதற்காக தமது சக்திகளை ஒன்றிணைக்க முயன்றபோதிலும், ஏகாதிபத்திய நாடுகளிடையேயான பகைமைகளும் தொடர்ந்து நீடித்து வருகின்றன. அவற்றின் பகைமைப் போட்டிக்கான மையங்கள் எழுபதாம், ஆண்டுகளின் துவக்கத்தில் தோன்றின— அவை அமெரிக்கா, மேற்கு ஐரோப்பா, (முதலாவதாக ஆறு பொதுச் சந்தை நாடுகள்) ஜப்பான் ஆகியவை.

தற்போது தேச விடுதலை சச்திகள் ஏகாதிபத்தியத்தை மென்மேலும் அதிகமாக நெருக்கி வருகின்றன. பல ஆசிய, ஆப்பிரிக்க நாடுகளில் சுதந்திரத்தை வலுப்படுத்தி சமுதாய முன்னேற்றத்தை அடைவதற்கான போராட்டமானது நிலப் பிரபுத்துவம், முதலாளித்துவம் ஆகிய இரண்டின் சுரண்டல் உறவுகளுக்கு எதிரான ஒரு புரட்சிகர இயக்கமாக நடைமுறையில் வளர்ச்சி அடையத் தொடங்கி விட்டது.

முதலாளித்துவப் பொது நெருக்கடியை அப்போதைக்கப்போது ஏற்படும் பொருளாதார நெருக்கடிகளுடன் போட்டுக் குழப்பக்கூடாது. முதலாளித்துவத்தின் நெருக்கடி, முதலாளித் துவ சமுதாயத்தின் பொருளாதாரங்களுக்கு அப்பாலும் சென்று அரசியல் சித்தாந்தத் துறைகளை தழுவுவதால் அது பொதுவான நெருக்கடி என்று வருணிக்கப்படுகிறது; அரசியல் துறையில் ஏகபோக முதலாளிகள் தம்மை தொடர்ந்து ஆட்சியில் நீடித்து வைத்திருப்பதற்காக மென்மேலும் அதிகமாக ராணுவ சக்தியில் நம்பிக்கை வைக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டுள்ளது; அதே சமயத்தில், சித்தாந்தத் துறையில் அவை மக்களின் ஆதரவைப் பெறுவதற்காக எவ்விதத்திலும் தாம் அழிந்து போகக்கூடிய சண்டையில் ஈடுபட்டுள்ளனர்.

## இலட்சியங்கள் கிடையாது

மார்க்சியம் - லெனினியத்தின் மாபெரும் கருத்துக்களை எதிர்ப்பதற்கு முதலாளித்துவத்திற்கும், அதன் ஆதரவாளர்களுக்கும் எதுவுமே கிடையாது.

பண்டைக்கால பூர்ஷுவாக்கள் ஆட்சி அதிகாரத்திற்காக போராடியபோது, வெகுஜனங்கள் விடுதலை, சகோதரத்துவம், சமத்துவம் ஆகிய கோஷங்களினுல் உத்வேகம் பெற்றனர். இன்னமும் இக்கோஷங்கள் முதலாளித்துவ நாடுகளின் அரசியல் சட்டங்களில் பிரதிபலித்துள்ளன. ஆனுல் உழைப்பாளி மக்களுக்கு அவற்றின் உண்மையான மதிப்புத் தெரியும்,

அவர்களின் ''சுதந்திரம்'' என்பதன் பொருள், முதலாளிகள் தொழிலாளிகளைச் சுரண்டுவதற்கான சுதந்திரம், பிற்போக்காளர்கள் தமது அரசியல் கொலைகளை நடத்துவதற்கான சுதந்திரம், செய்திப் பத்திரிகை முதலாளிகள் போர் வெறியைத் தூண்டுவதற்கான சுதந்திரம் என்று பொருள். தொழிலாளிகளுக்கு ஒரே ஒரு சுதந்திரம்தான் உண்டு; அவர்கள் தமது முதலாளித்துவ எஜமானர்களுக்காகப் பாடுபடும் ''சுதந்திரம்'' என்பதே அது. கம்யூனிஸ்டுகள் சம்பந்தப்பட்ட மட்டிலும் முதலாளித்துவ அரசு சிறையில் வாழ்வதற்கான ''சுதந்திரத்தை'' அவர்களுக்கு அளித்துள்ளது. அதே சமயத்தில் சமாதான ஆதரவாளர்களைத் தடிகொண்டு தாக்குவதற்கான சுதந்திரத்தை போலீசுக்கு அளிக்கிறது.

முதலாளித்துவ சித்தாந்த வாதிகளால் பயன்படுத்தப்படும் சமத்துவக் கோஷம் கூட பொருளற்றதாகி விட்டது. எஜமானுக்கும் அடிமைக்கும் இடையே எத்தகைய சமத்துவம் நிலவ முடியும்? அமெரிக்க கோடீஸ்வரர் மெல்லன் ஒரு கட்சிக்காக பத்து லட்சம் டாலர்களைச் செலவிடுகிறார். பல்லாயிரக்கணக்கான மக்கள் பயங்கரமான நிலைமைகளில் குடிசைப் பகுதிகளில் வாழ்ந்து தமது தேவைகளை சற்றும் பூர்த்தி செய்ய முடியாதபோது, பைத்தியக்காரத்தனமான செல்வந்தர்கள் தமது அனாவசிய ஆடம்பர காரியங்களுக்காக வேலைக்காரர்களை வைத்துக் கொண்டிருக்கின்றனர்.

ஏகாதிபத்திய உலகத்தில் சோதரத்துவம் என்ற பேச்சுக்கே இடமிருக்க முடியாது. உதாரணமாக இவ்வுலகின் சிறப்பு மிக்கதாகக் கருதப்படும் அமெரிக்கா, காட்டுமிராண்டித்தனமான நிறவெறிப் பாரபட்சம் நிலவும் ஒரு நாடாக விளங்குகிறது.

இன்று முதலாளித்துவம் ஒரு காலத்தில் தான் வெளிப்படையாக ஆதரித்த இலட்சியங்களைக் காற்றில் பறக்க விட்டு அவற்றைக் காலில் போட்டுத் துவைக்கிறது. அதன் பெரும், நன்கு - வசதி செய்யப்பட்டுள்ள பிரசார அமைப்புகளும், மையங்களும் புதிய ''இலட்சியங்களை' கண்டுபிடித்து பரப்ப கடுமையாக முயன்று வருகின்றன. ஆனால் இதனால் எல்லாம் எவ்வித பலனும் ஏற்படுவது கிடையாது.

சோஷலிசம் தான் மெய்யான விடுதலை, சமத்துவம், சோதரத்துவத்தை உத்தரவாதம் செய்ய முடியுமென்று மென்மேலும் அதிகமான மக்கள் உணர்ந்து வருகின்றனர். ஏக போகங்களின் இரும்புப் பிடிக்கு எதிராக தொழிலாளி வர்க்கமும், ஒடுக்கப்பட்ட மக்களும் தமது போராட்டங்களை முடுக்கி வரும் இவ்வேளையில் ஏகாதிபத்திய சர்க்கார்கள் முதலாளித்துவ அமைப்புக்கு முட்டுக் கொடுப்பதற்காக சமூக

சண்டப் பிரசண்டம் செய்வது, ஓரளவு சலுகைகள் அளிப்பது ஆகிய வற்றில் மென்மேலும் அதிகமாக இறங்கி வருகின்றனர். எனினும், கம்யூனிஸ்டுகளுக்கும், சமூகத்தின் இதர முற்போக்குப் பகுதிகளுக்கும் எதிரான அடக்குமுறை நடவடிக்கையும் கூட ஏகாதிபத்தியத்தின் கொள்கையில் முக்கிய இடம் பெற்று வருகின்றது. கம்யூனிஸ்டுக் கட்சி களின், அவற்றின் உறுப்பினர்களின் நடவடிக்கைகள் கட்டுப்படுத்தப்படு கின்றன; பல நாடுகளில் கட்சிகள் சட்ட விரோதமாக்கப்பட்டுள்ளன.

சித்தாந்தத் துறையில், இந்த கம்யூனிஸ-எதிர்ப்பு முதலாளித்துவத் திற்கு மென்மேலும் அதிகமாக ஏற்பட்டு வரும் நெருக்கடிக்கு தெளி வான உதாரணங்களாகும். கலாசாரத்தின் சீரழிவில் இது தெளிவாக பிரதிபலித்துள்ளது. புத்தகக் கடைகள், திரைப்படங்கள், நாடக மேடைகள், தொலைக் காட்சிகள் ஆகியவற்றில் குறைந்த தரமுடைய படைப்புகள் நிறைந்துள்ளன; இவை கொடுமைகள், வன்முறை, கேடு கெட்ட தன்மை, ஆகியவற்றை உயர்த்திக் காட்டி மனிதனின் கீழான உணர்ச்சிகளைத் தூண்டி விடுகின்றன. கலைத் துறையில், மனித னின் மூளையில் ஏற்படும் புதிர்களுக்கு விடை கூறுவதாகப் பசப்பும் அர்த்தமற்ற அவியலான கீறல்களையும், பூச்சுகளையும் உடைய திரைப்படங்களை தயாரிப்பது இப்போது நவீன மோஸ்தர் ஆகிவிட்டது. இசையில், இன்னிசை, பண்ணோசை பொருத்தம் அகற்றப்பட்டு அதற்குப் பதிலாக அருவறுப்பு வாய்ந்த அபசுரம் வளர்க்கப்படுகிறது. சிற்பி கள் சற்றும் பொருத்தமற்ற வகையில் கண்ணுக்கு எரிச்சலை உண்டு பண்ணும் பயங்கரமான சிலைகளை வடிக்கின்றனர்.

எனினும், பூர்ஷுவா கலாசாரத்தின் சீரழிவைப் பற்றிக் குறிப்பிடும்போது, முதலாளித்துவ நாடுகளில் உளப் பூர்வமாக நன்மையும், நீதியும் வெற்றி பெறுவதற்காகப் பங்குப் பணி ஆற்றும் விருப்பமுடைய பல நேர்மையான கலைஞர்கள் இருக் கிறார்கள் என்பதை நாம் புறக்கணித்து விடமுடியாது. ஆனால் உண்மை என்னவென்றால் அவர்களுடைய படைப்புகளை முற்றி லும் முதலாளித்துவத்தின் பிரசார பகுதியென்று இனியும் கருத முடியாது. முதலாளித்துவத்தின் தீம்புகளை அம்பலப் படுத்துவது, இன்று இந்த அழிந்துவரும் அமைப்பு தனது பிடியி லுள்ள நாடுகளை தன்னுடன் இழுத்துவரும் நெருக்கடியி லிருந்து மீள்வதற்கான வழி காண்பது ஆகிய விருப்பத்தினால் அவர்கள் தூண்டப்படுகின்றனர். மேலும் கலாசாரத் துறையில் பிரபலமாயுள்ள பிரமுகர்கள் விஞ்ஞான சோஷலிசக் கருத்துக்களின் சக்தியையும் உண்மையையும் ஒப்புக் கொண்டிருக்கவேண்டும் என்பது இயல்பே. ரொமெய்ன் ரோலந்து, தியோடர் ட்ரீசர், தாமஸ் மான், ஹீன்ரிச் மான், ஃபிரெடெரிக் ஜோலியத் கியூரி, பால் லாங்கவின், ஜார்ஜ் பெர்னாட்ஷா, பாப்ளா நெருடா, நிகோலஸ் குயில்லன்

போன்ற தலைசிறந்த பிரமுகர்கள் இத்தகைய வகையைச் சேர்ந்தவர்கள். இந்நூற்றுண்டின் மிக மிகப் புகழ்பெற்ற ஐரோப்பிய ஓவியர்களில் ஒருவரான பாப்ளோ பிகாசோ கம்யூனிஸ்டுக் கட்சியின் உறுப்பினராயிருந்தார். முற்போக்கு அறிவுத்துறையினர் முதலாளித்துவ உலகத்திலிருந்து தம்மைக் கத்தரித்துக் கொண்டு தமது முயற்சிகளை புதிய, சோஷலிச சமுதாயத்தின் வெற்றிக்கான போராட்டத்திற்காக ஈடுபடுத்தி வருகின்றனர்.

ஏகாதிபத்தியத்தின் ஆன்மீக வறுமையைப் பற்றிப் பேசும் போது சித்தாந்தப் போராட்டத்தில் அதன் முயற்சிகளைக் கண்டிப்பாகக் குறைத்து மதிப்பிடக் கூடாது. ஏகபோக முதலாளிகளும், அவர்களின் அரசாங்கமும் சக்திவாய்ந்த பிரசார இயந்திரத்தையும், செய்தி ஸ்தாபனத்தையும் தமது நோக்கங்களை நிறைவேற்றுவதற்காகப் பயன்படுத்துகின்றனர். சோஷலிசத்தை உருச்சிதைத்து மதிப்பிழக்கச் செய்வதற்கும், தற்கால முதலாளித்துவ சமுதாயத்தை தொழிலாளியின் சொர்க்கமாக சித்தரித்துக் காண்பிப்பதற்கும் அவர்கள் கடும் முயற்சி செய்கின்றனர்.

அமெரிக்கா, பிரிட்டன், இதர பல முன்னேற்றமடைந்த முதலாளித்துவ நாடுகளின் வாழ்க்கைத்தரம் பற்றிய ஒருதலைப் பட்சமான சித்திரத்தை அளிப்பதில் ஏகாதிபத்திய பிரசாரம் செயலூக்கமுடன் விளங்குகிறது. ஒப்பிட்டுப் பார்த்தால் அந்நாடுகளில் உயர்ந்த-சம்பளம் வாங்கக் கூடிய தொழிலாளிகள் வெகு வசதியான வாழ்க்கை நடத்துகின்றனர் என்பது மெய்யே. ஆனால் மொத்தப் பேர்களையும் பற்றி ஒரு பகுதியினரைப் பார்த்து, அதுவும் அனைவரும் ஒன்று போலில்லாத நிலைமைகளில், முடிவு செய்வது சரியாயிருக்க முடியாது. சம்பாதிப்பவர்கள் மட்டுமின்றி முதலாளித்துவ நாடுகளில் முழுமையாகவோ அல்லது பகுதியாகவோ வேலையில்லாதிருப்பவர்கள் இருக்கவே செய்கின்றனர். தமது தேவைகளைப் பூர்த்தி செய்ய முடியாத திறமை பெற்றதும் திறமை பெறுததும் ஆன தொழிலாளிகளும், பண்ணைத் தொழிலாளிகளும் ஏராளமாக உள்ளனர். அமெரிக்காவில் வெள்ளைக்காரத் தொழிலாளிகள் மட்டுமின்றி கோடிக்கணக்கான கருப்பு நிறத்தவர்கள், மெக்சிகோகாரர்கள், பியூர்டோ ரிகர்கள் இருக்கின்றனர். வெள்ளைக் காரர்களைப் போன்று அதே வேலையைச் செய்த போதிலும் இவர்களுக்குக் குறைந்த சம்பளமே கொடுக்கப்படுகிறது. அமெரிக்க ஆட்சியாளர்கள் வெளிநாட்டுப் பயணிகளுக்கு போர்டு நிறுவனத் தொழிலாளிகளின் வசதியான வீடுகளை மட்டுமே காட்டுவதில் மிகுந்த அக்கறை செலுத்துகின்றனர். கருப்பு நிறத்தவர் பயங்கரமான எலிகள் நிறைந்த வறுமை மிகு நியூயார்க் நகரின் சேரிகளில் வாழும் பகுதிகளுக்கு விருந்தினர்களை இட்டுச் செல்வதில் அக்கறை காட்டுவதில்லை.

எத்தகைய பிரசார தந்திரங்களும் முதலாளித்துவத்தின் உள்ளார்ந்த சீர்கேடுகளை ஒழித்துவிட முடியாது. காரணம், அது மனிதர்கள் சுரண்டப்படும் ஓர் அமைப்பாக, தேசங்கள் ஒடுக்கப்படும் ஓர் அமைப்பாக, சமத்துவமின்மை நிலவும் ஓர் அமைப்பாக இருந்தது, தொடர்ந்து இருந்து வரும்.

நீண்ட காலமாகவே வரலாறு ஏகாதிபத்தியத்தை கண்டனம் செய்து விட்டது. சமுதாய வளர்ச்சியை ஆளுமை செய்யும் புறநிலை விதிகள் இருபதாவது நூற்றாண்டில் சோஷலிசத்திற்கான புரட்சிகர மாற்றத்தை வற்புறுத்துவதால், அது கண்டிப்பாக ஒழிந்தே தீரும்.



மூன்ரும் அத்தியாயம்

# முதலாளித்துவத்திலிருந்து சோஷலிசத்திற்கான மாற்றம்

ரஷ்யாவில் 1917ல் நடைபெற்ற மாபெரும் அக்டோபர் சோஷலிசப் புரட்சியானது உலகெங்கணும் முதலாளித்துவத்திலிருந்து சோஷலிசத்திற்கான புரட்சிகர மாற்றத்திற்கான ஒரு யுகத்தைத் துவக்கி வைத்தது; வர்க்கப் போராட்டத்தின் விளைவாக இம்மாற்றம் நிகழ்ந்து வருகிறது. உலக அரங்கில், சோஷலிச சக்திகளுக்கும் ஏகாதிபத்திய சக்திகளுக்கும் இடையே, முற்போக்கு சக்திகளுக்கும் பிற்போக்கு சக்திகளுக்கும் இடையே மோதல் நடைபெறும் காலமாகும் இது.

இக்கடைசிச் சுரண்டல் அமைப்பு போராட்டமின்றி சரணடைந்து விடாது. ஏகாதிபத்தியவாதிகள் தம் வசமுள்ள சகல பொருளாதார, ராணுவ ஆதாரங்களையும் போராட்டத்தில் ஈடுபடுத்தி வருகின்றனர். மேலும் முதலாளித்துவ அமைப்பை உயிர் வாழும்படி செய்வதற்காக அரசியல் அதிகார இயந்திரத்தையும், சகல வெகுஜன தகவல் சாதனங்களையும் பயன்படுத்தி வருகின்றனர். புரட்சிகர இயக்கத்தில் காணப்படும் ஒவ்வொரு பலவீனத்தையும் பயன்படுத்த முயன்று புரட்சிகர இயக்கத்தைப் பின்னுக்குத் தள்ளுவதற்காக எதிர்தாக்குதல்களை நடத்த அவர்கள் முயன்று வருகின்றனர்.

எனினும், இம்முயற்சிகள் அனைத்தும் நிச்சயமாகத் தோல்வியுறும். புரட்சிகர சக்திகள் வெற்றிகாண வேண்டிய தற்காலிக இடர்கள் எவ்வளவுதான் இருந்த போதிலும், நம்பிக்கையுடன் முன்னேறி வருகின்றன, மென்மேலும் அதிக வெற்றிகளை ஈட்டி வருகின்றன, எல்லா இடங்களிலும் பிற்போக்கு சக்திகளை பின்னுக்குத்தள்ளி வருகின்றன. மார்க்சிய-லெனினியக் கருத்துக்கள் சரியானவை என்பதை உலக நிகழ்ச்சிகளின் போக்கு தெளிவாகக் காட்டுகிறது. இக்கருத்துக்கள்தான் இன்றைய காலத்தின் மிகமிகச் சக்திவாய்ந்த அரசியல் இயக்கமான கம்யூனிச இயக்கத்தின் பதாகையாக அமைந்துள்ளன.

மார்க்சிய-லெனினிய புரட்சிகரப் போதனையின் வெற்றியானது இந்த சகாப்தத்தின் மூன்று பிரதான புரட்சிகர சக்திகளின்—உலக

சோஷலிச அமைப்பு, தொழிலாளி வர்க்க இயக்கம், தேச விடுதலை இயக்கம் ஆகியவற்றின்—நடவடிக்கைகளிலும் ஒற்றுமையிலும் அடங்கியிருக்கிறது.

## 10 உலக சோஷலிச அமைப்பு

ரஷ்யாவில் 1917ல் நடைபெற்ற சோஷலிசப் புரட்சியைத் தொடர்ந்து, இரண்டாவது உலகப் போருக்குப் பின்னர், பல ஐரோப்பிய, ஆசிய நாடுகளில் சோஷலிசப் புரட்சி வெற்றிவாகை சூடியதானது, இந்நூற்றுண்டின் இரண்டாவது மைல்கல்லாகும். சோஷலிசம் ஓர் உலக அமைப்பாக மாறிற்று. லெனினுடைய போதனை சகல நாடுகளுக்கும் பொருந்தும் என்பதை அதன் வளர்ச்சி பற்றிய வரலாறு எடுத்துரைக்கிறது. சோஷலிசத்தை நிர்மாணிப்பதற்கான சரியான பாதையை அது சகல தேசங்களுக்கும் எடுத்துக் காட்டுகிறது.

உலக சோஷலிச அமைப்பு கால் நூற்றுண்டு பிராயம் அடைந்துள்ளது. வரலாற்றில் இதை ஒரு நீண்ட காலம் என்று கூறமுடியாது; ஆனுல் சமுதாய வளர்ச்சியின் பிரதான போக்குகள் ஏற்கெனவே உருப் பெற்று விட்டன. மனிதகுலம் ஏகாதிபத்தியத்தை ஒழித்துக் கட்ட முடியும் என்பதை சோஷலிசம் அதற்கு எடுத்துக்காட்டி விட்டது. இப்புதிய சமூக அமைப்பு உற்பத்தி சாதனங்களில் பொதுவுடைமையையும், உழைப்பாளி மக்களின் சர்க்காரையும் அடிப்படையாகக் கொண்டுள்ளது. மக்களின் நலன்களை முன்னிட்டு, திட்டமிட்ட, நெருக்கடிகளிலிருந்து விடுதலை பெற்ற பொருளாதார அமைப்பை உத்தரவாதம் செய்யவல்லது அது. மேலும் அது, உழைப்பாளி மக்களின் சமூக, அரசியல் உரிமைகளை உத்தரவாதம் செய்து, மெய்யான ஜனநாயகத்திற்காகவும், தேசிய விவகாரங்களை நடத்திச் செல்வதில் பொதுவாக மக்கள் அனைவரும் உண்மையில் பங்கு பெறச் செய்வதற்காகவும், தேசங்களிடையே சமத்துவ, நட்புரீதி உறவுகளை நிலைநாட்டுவதற்காகவும் அவசியமான நிலைமைகளை உருவாக்குகிறது. மேலும், மனித ஆளுமையின் சர்வாம்ச வளர்ச்சி சாத்தியமடைவதற்கான ஒரு சூழ்நிலைமையை அது படைத்துள்ளது. மனிதகுலத்தை எதிர் நோக்கும் அடிப்படைப் பிரச்சினைகளைத் தீர்க்கவல்லது சோஷலிசமே என்பதை வரலாறு ஏற்கெனவே எடுத்துக் காட்டி விட்டது.

புதிய அமைப்பை நிர்மாணிப்பதற்கான வழிகள் பற்றிய மார்க்சியம் - லெனினியத்தின் இரு கேந்திரமான கருத்துக்களின் சரியான தன்மையை அனுபவம் முற்றிலும் ஊர்ஜிதம் செய்து விட்டது. இவற்றில் முதலாவது, சோஷலிச மாற்றத்திற்கான பொது விதிகளின் நானுவித வடிவங்களும் ஒன்றுபடுவது பற்றிய கருத்தமைப்பு ஆகும். இரண்டாவது கருத்தமைப்பு, சர்வ தேசியத்தையும் சுதந்திர தேசங்களின் சோதர நட்புறவையும் அடிப்படையாகக் கொண்ட ஒரு

புதுவகை சர்வதேசிய உறவுகளுக்கு சோஷலிசத்தின் வெற்றி இட்டுச் செல்கிறது என்பதாகும்.

## வடிவங்களின் நானாவிதத் தன்மையும் பொது விதிகளின் ஒரு சீரான தன்மையும்

சோஷலிசத்தின் கீழ் நாடுகள் சமசீராக வளர்ச்சியடையாததன் காரணமாக, அவை, தமது வளர்ச்சியின் வெவ்வேறு கட்டங்களில் சோஷலிசப் புரட்சியை வந்தடைகின்றன. சில சுதந்திர நாடுகள்; பிற ஏகாதிபத்திய வல்லரசுகளின் காலனிகள். சிலவற்றில் பெரும்பாலான உழைப்பாளி மக்கள் விவசாயிகளாக உள்ளனர்; பிறவற்றில் தொழிலாளி வர்க்கம் பெரும்பான்மையாக உள்ளது. முதலாளி வர்க்கத்தின் நிலைமையும் நாட்டுக்கு நாடு மாறுபடுகிறது. எல்லாவற்றுக்கும் முக்கியமாக, உலக அரங்கில் நாடுகள் வெவ்வேறு நிலைகளை வகிக்கின்றன.

சோஷலிசத்தை நிர்மாணிப்பதற்கான பூர்வாங்க நிலைமைகள் வெவ்வேறாக இருப்பதால் சோஷலிச மாற்றங்களுக்கான வடிவங்கள், முறைகள், வேகம் ஆகியவையும் ஒரு சீராக இல்லாதிருப்பது இயல்பே. அவ்வாறு இருக்கவும் கூடாது.

வெற்றி பெற்ற தொழிலாளி வர்க்கத்திற்கும் அதன் கட்சிக்கும் இந்நிலைமை ஒரு சிக்கலான கடமையை முன்வைக்கிறது. அவை செய்ய வேண்டுவது என்னவென்றால் மார்க்சியம் - லெனினியத்தின் பொதுவான கோட்பாடுகளைத் தமது நாட்டின் விசேஷ நிலைமைகளுக்கு ஏற்ப பயன்படுத்தி, ஒரு புதிய சமுதாயத்தை நிர்மாணிப்பதற்கான வழிமுறைகளைக் காண வேண்டும். இது, அவை தமது லட்சியங்களை மிகப் பெரும் அளவில் வெற்றி பெறச் செய்வதற்கு உதவி புரிகின்றது. புரட்சிகரவாதிகளின் முன்னால் சோஷலிசத்தைக் கட்டி வளர்த்த சோதர நாடுகளின் பரந்த அனுபவம் உள்ளது; ஆனால் அவற்றை வறட்டுத்தனமாக காப்பி அடிக்க முடியாது. ஒரு நாட்டுக்குப் பொருத்தமான ஒன்று மற்றொரு நாட்டில் விரும்பும் பலனை எப்போதும் அளிப்பதில்லை. எனவே, தத்தமது நாடுகளின் விசேஷ அம்சங்களையும், உலகில் தமது நாட்டின் நிலையையும் கணக்கில் எடுத்துக் கொள்ளும் வகையில், பிறருடைய அனுபவங்களில் உரியதைத் தேர்ந்து ஆக்க பூர்வமாகப் பயன்படுத்த வேண்டுவது ஜீவாதாரமானது.

சோஷலிச மாற்றத்திற்கான வெகு பல வடிவங்களை வரலாறு தவிர்க்க முடியாத வகையில் அளிக்கும் என்று லெனின் கருத்துத் தெரிவித்தார். ரஷ்யாவில் சோஷலிசம் வெற்றி வாகை சூடுவதற்கு வெகுகாலத்திற்கு முன்பே அவர் இக்கருத்தைத் தெரிவித்தார். இரண்டாவது உலகப் போருக்குப் பின்னர், சோஷலிசம் ஓர் உலக அமைப்பாக மாறிய பின்னர், இந்த தீர்க்க தரிசனம் முற்றிலும் ஊர்ஜிதம்

செய்யப்பட்டது. சோஷலிசப் புரட்சி வெற்றி வாகை சூடிய நாடுகளில் முன்னேற்றமடைந்த தொழில் வளர்ச்சி பெற்ற நாடுகளும், விவசாய நாடுகளும், முன்னாள் காலனிகளும், அரைக் காலனிகளும் இருந்தன. இதிலிருந்துதான் சோஷலிச நிர்மாணத்தின் பற்பல வடிவங்களும், முறைகளும் தோன்றின.

மிகப் பெரும்பாலான இந்நாடுகளில் சக்தி வாய்ந்த பாசிச-எதிர்ப்பு இயக்கம் உச்சக் கட்டத்தில் இருந்த ஒரு காலத்தில் புரட்சிகள் வெற்றி பெற்றன. சோஷலிசத்தை நோக்கிய அவற்றின் மாற்றத்தின் வழிகள் மீது இது முக்கியமான செல்வாக்குச் செலுத்திற்று.

மக்கட் தொகையின் பல்வேறு பகுதிகளை—விவசாயிகள், நகர்ப்புற குட்டி-பூர்ஷுவாக்கள், அறிவுத் துறையினர், மத்தியதர வர்க்கத்தில் தேசபக்த-மனப்பான்மை கொண்டவர்கள்—கொண்ட ஓர் ஒன்றுபட்ட மக்கள் ஜனநாயக முன்னணி உருவாக்கப்பட்டது. தொழிலாளி வர்க்கம் அதற்குத் தலைமை வகித்தது; கம்யூனிஸ்டுக் கட்சி அதன் திண்மைமிகு முன்னணிப் படையாக விளங்கிற்று.

இதன் விளைவாக, பல நாடுகளில் தொழிலாளி வர்க்கம், உள்நாட்டுப் போர் உருவில் ஓர் ஆயுதம் தாங்கிய புரட்சியின்றி சமாதான பூர்வமாக அதிகாரத்தைக் கைப்பற்ற முடிந்தது. 1948 பிப்ரவரியில் செக்கோஸ்லோவாகியாவின் நிலைமை இவ்வாறுதான் இருந்தது. அப்போது, பிராகில் தொழிலாளி வர்க்கத்தின் மாபெரும் ஆர்ப்பாட்டமும், நாட்டின் உழைப்பாளி மக்களின் புரட்சிகர உறுதியும் பிற்போக்கு சக்திகளைப் பின்வாங்கும்படி வற்புறுத்தின. இது கம்யூனிஸ்டுகள் தலைமை தாங்கும் சர்க்காரை அதிகாரத்திற்குக் கொண்டு வந்தது.

சோஷலிச மாற்றங்களைக் கொண்டு வருவதற்கு எதிர்ப் புரட்சியாளர்களை எதிர்த்து நிச்சயமாகவே கடுமையான போராட்டம் நடத்த வேண்டியதிருந்தது. அவர்கள் மக்கள் சர்க்கார் வலுப்படுவதைத் தடுக்க முயன்றனர். ஆனால் இது உள்நாட்டுப் போருக்கு இட்டுச் செல்லவில்லை; காரணம் சோவியத் யூனியன் இளம் சோஷலிச நாடுகள் மீதான ஏகாதிபத்தியத் தாக்குதலைத் தடுத்தது. அந்தந்த நாடுகளிலுள்ள முதலாளிகள் வெளிநாடுகளின் பகிரங்கமான ஆதரவின்றி உழைப்பாளி மக்களின் சர்க்காரை எதிர்க்கும் சக்தியை பெற்றிருக்கவில்லை.

எனவே, ஏற்கெனவே நிறைவேற்றப்பட்ட சோஷலிச மாற்றங்களின் வடிவங்கள், காலநிர்ணயம் ஆகியவற்றில் விசேஷ அம்சங்கள் காணப்பட்டன. ஆட்சி பீடத்திலிருந்து ஒழிக்கப் பட்ட சுரண்டல் வர்க்கங்களின் உறுப்பினர்களின் அரசியல்

உரிமைகள் ஓரளவுதான் கட்டுப்படுத்தப்பட்டிருந்தன; சில நாடுகளில் இவ்வுரிமைகள் கட்டுப்படுத்தப்படவே இல்லை. முதலாளித்துவ அரசாங்க இயந்திரம் படிப்படியாக கலைக்கப் பட்டது; ஒரே அடியாக அல்ல.

பழைய அரசாங்கத்தின் பல அலுவலகங்களும் அமைப்பு களும் அழித்து ஒழிக்கப்படவேயில்லை. அவை புதிய வர்க்க சாரம் பெறும் வகையில் மாற்றப்பட்டு புதிய அரசாங்கத்தில்—மக்கள் ஜனநாயகத்தில்—இணைக்கப்பட்டு விட்டன. பழைய அமைப்பின் தகுதி பெற்ற சிப்பந்திகள் பரவலாக தேசியப் பொருளாதாரத்தில் வேலைக்கு வைத்துக் கொள்ளப்பட்டதால் பெரும் சீரழிவைத் தடுப்பதற்கு இது உதவியது. பல சோஷலிச நாடுகளில் கம்யூனிஸ்டுகளின் தலைமையில் இயங்கும் அரசுகளில் விவசாயிகள், அறிவுத் துறையினர் இத்தியாதிகளடங்கிய இதர கட்சிகளின் உறுப்பினர்களும் இருந்தனர். பெரும் நிலப் பிரபுத்துவ பண்ணைகள் ஒழிக்கப்பட்டுவிட்டாலும் ஆரம்பத்தில் விவசாயிகளின் தனியார் நிலவுடமை பாதுகாக்கப்பட்டது. விவசாயிகள் தாமாகவே முன்வந்து கூட்டுறவுகளை அமைக்கத் தொடங்கிய பிறகு அது படிப்படியாக பொதுவுடமையாக மாற்றப்பட்டது. பல நாடுகளில் உற்பத்தி சாதனங்களை தேசிய உடைமை ஆக்கியதற்கு ஈடாக முதலாளிகளுக்கு ஓரளவு ஈட்டுத்தொகை அளிக்கப்பட்டது. சில நிலைமைகளில் முதலாளி களை ''விலைகொடுத்து வாங்குவது'' தொழிலாளி வர்க்கத்திற்கு அதிக லாபகரமாக விளங்கக்கூடிய சாத்தியப்பாட்டை மார்க்ஸ் எதிர்பார்த்தார்.

முன்னாள் காலனிகளிலும், சார்பு நாடுகளிலும் புரட்சியின் சில சிறப்பான வடிவங்கள் காணப்பட்டன. சீனா, கொரியா, வியத்நாம், பின்னர் கியூபாவில் சுதந்திரத்திற்கான மக்களின் போராட்டங்களின் மூலம் சோஷலிசப் புரட்சிகள் வெற்றி பெற்றன.

எனினும், ஒவ்வொரு நாடோ அல்லது குழு நாடுகளோ தனது சொந்தப் பாதையில் சோஷலிசத்திற்குச் செல்கிறது என்பதால், அவை ஏதோ ஒருவகையான சொந்த ''தேசிய'' சோஷலிசத்தைக் கட்டு கின்றன என்று நினைப்பது தவறாகும். ரஷ்ய, சீன, ஆப்பிரிக்க, அல்லது ஆசிய வகை சோஷலிசம் என்று ஒன்றுமே கிடையாது. அவ் வாறு இருக்கவும் முடியாது. ஆப்பிரிக்க சோஷலிசம் என்று சொல்லப் படுவதன் ஆதரவாளர்களை விமர்சனம் செய்கையில் கினியாவின் ஜனாதிபதி செகு டூரே 1962இல் கூறியதாவது: '''சீன சோஷலிசம்,' 'அமெரிக்க சோஷலிசம்,' 'யூகோஸ்லாவிய சோஷலிசம்,' 'பல்கேரிய சோஷலிசம்' இத்தியாதி போன்று, வகை வகையான சோஷலிசம் இருந்ததாகக் கூறப்பட்டது போன்று, ஆப்பிரிக்காவில் 'ஆப்பிரிக்க

சோஷலிசம்' பற்றி நிறையக் கேள்வி படுகிறோம். ஓர் அரசியல் சித்தாந்தத்திற்கு இத்தகைய ஒரு ஸ்தூலமற்ற வரையறுப்பு நாம் அளிப்போமாகில் எதிர்காலத்தில் ஆப்பிரிக்க சோஷலிசத்திற்கான நைஜீரியப் பாதை அல்லது டோகோலீஸ் பாதை பற்றிக் குறிப்பிடுவதையோ, அல்லது செனகலீஸ் இரசாயனம், மொரோக்கோ கணிதம் என்று பேசுவதையோ பற்றி யாரும் தடை செய்ய முடியாது "[1]

சோஷலிசத்தின் பிரதான அம்சங்கள் சமுதாய வளர்ச்சியின் "புறநிலைத் தேவைகளை வெளிப்படுத்துவதால், அவை சகல நாடுகளுக்கும், மக்களுக்கும் பொதுவானவை.

வடிவங்கள், முறைகளில் எவ்வளவோ மாற்றங்கள் ஏற்பட்டிருந்த போதிலும் அதே காரணத்திற்காக, சோஷலிச மாற்றங்கள், முதலாளித்துவத்திலிருந்து சோஷலிசத்திற்குச் செல்வதற்கான மாற்றத்தின் பொது விதிகள் தவிர்க்க முடியாத வகையில் ஆளுமை செய்யப் படுகின்றன.

நஷ்ட ஈடு கொடுத்தோ அல்லது கொடுக்காமலோ உழைப்பாளி மக்கள் உற்பத்தி சாதனங்களை கைப்பற்றிக் கொள்ள முடியும். அவர்கள், உடனடியாகவோ அல்லது படிப்படியாகவோ, முதலாளி வர்க்கத்தின் சொத்துக்களை பறிமுதல் செய்ய முடியும். ஆனால் எப்படியாயினும், உற்பத்தி சாதனங்கள் பொதுவுடைமை ஆக வேண்டும். இது சமுதாயத்தை ஆளுமை செய்யும் ஒரு விதியாகும்; இது விருப்பத்தைப் பொருத்ததல்ல.

பாட்டாளி வர்க்க சர்வாதிகாரம் ஒரு கட்சி சர்க்காராகவோ, அல்லது பல கட்சி சர்க்காராகவோ விளங்க முடியும். பல கட்சிகள் இருக்குமேயானால், மார்க்சிய-லெனிய வாதிகளால் தலைமைத் தாங்கப் படும் பல கட்சிகளின் கூட்டணி சர்க்காராக விளங்கும். இது உதாரணமாக, ஜெர்மன் ஜனநாயகக் குடியரசு சோஷலிசத்தை நிர்மாணிக்கத் துவங்கிய போது அதில் ஐந்து கட்சிகள் இணைந்திருந்தன. அந்நாட்டில், தொழிலாளி வர்க்கம் தலைமைதாங்கி சின்னஞ்சிறு, நடுத்தர நிறுவனங்களின் உடமையாளர்களை ஈர்ப்பது சாத்தியமாயிற்று. இப்பகுதியினர் சோஷலிச சமுதாயத்தின் தொழிலாளிகளாக படிப்படியாக மாறி விட்டனர். எண்ணிக்கையில் எத்தனை கட்சிகள் இருந்த போதிலும், அரசாங்கத்தின் தலைமை தொழிலாளி வர்க்கத்திடமும், அதன் அரசியல் முன்னணிப் படையிடமும் இருக்க வேண்டும் என்பது ஜீவாதார முக்கியத்துவம் வாய்ந்ததாகும். எப்படியிருந்த போதிலும், வெகு பரந்த மக்கள் பகுதியினரை அரசாங்க விவகாரங்களை நிர்வகிக்கும் பணியில் சோஷலிச அரசியல் அமைப்புகள் ஈர்க்க வேண்டும்; மேலும் அவர்களின் முயற்சி நடவடிக்கைகளையும், படைப்பாற்றல் முயற்சிகளையும் வளர்க்க வேண்டும், வேறு சொற்களில் கூறுவதானால், அது

1. ஆப்பிரிக்க அறிக்கை, மே, 1973.

ஒரு சோஷலிச ஜனநாயகமாக விளங்க வேண்டும்; இதுவும் நமது விருப்பத்தைப் பொருத்த விஷயமல்ல. சமுதாயத்தின் வளர்ச்சிக்கு இது கண்டிப்பான அவசியம். இப் பொது விதியிலிருந்து விலகிச் செல்வ தானது சோஷலிசத்தின் லட்சியங்களையே சிதைக்கின்றது; புதிய சமூகத்தை நிர்ணயிப்பதை மேலும் கடினமாக்குகின்றது.

பாட்டாளி வர்க்கப் புரட்சி அல்லது ஏதாவது ஒரு வடிவிலான பாட்டாளி வர்க்க சர்வாதிகாரம் இன்றியோ, அல்லது தொழிலாளி வர்க்கத்திற்கும் மிகப் பெரும்பான்மையான விவசாயிகள், மற்றும் இதர உழைப்பாளி மக்கட் பகுதியினருக்கும் இடையே நேச அணி இன்றியோ, சோஷலிசத்தை அடைவது சாத்தியமல்ல. ஸ்தல அரங்கில் பாட்டாளி வர்க்கம் அப்போதுதான் தோன்றிக் கொண்டிருக்கிற முன்னாள் காலனிகள் அல்லது சார்பு நாடுகளும் கூட வெகுஜனக் கட்சி களின் தலைமையின் கீழ் பொருளாதாரத்திலும், சமுதாயத்திலும் தீவிர மான சோஷலிசத் திசை வழி கொண்ட மாற்றங்களை நிறைவேற்ற முடியும். இக்கட்சிகளுக்குத் தலைமை தாங்கிச் செல்லும் புரட்சிகர ஜனநாயக சக்திகள் விஞ்ஞான சோஷலிசத்தை நோக்கித் திரும்பு கின்றன. இதற்கிடையில் வெகுஜனக் கட்சிகளின் சமூகப் பகுப்பு மாறி வருகிறது. அவை, தொழிலாளிகள், விவசாயிகள், அறிவுத்துறையினர், உழைப்பாளி மக்களின் பாட்டாளி வர்க்கமல்லாத இதர பகுதியினர் ஆகியோரின் கட்சிகளாக மாறி வருகின்றன. அல்ஜீரியா, எகிப்து பர்மா, கினியா, காங்கோ, (பிராசா வில்லா) சிரியா, சோமாலியா, டான்சானியா போன்ற சோஷலிசத் திசை வழி கொண்ட நாடுகளின் அனுபவம் இதற்கோர் உதாரணமாகும்.

பொருளாதாரத் துறையில், அடிப்படை உற்பத்தி சாதனங்களில் பொதுவுடைமையை நிலை நாட்டுவதோடு மட்டுமின்றி, விவசாயத் தையும் சோஷலிசத் திசை வழியில் படிப்படியாக மாற்றுவது அவசியம். இதன் கருத்து என்னவென்றால், சோஷலிசத்தின் பொருளாயத தொழில் நுட்ப அடித்தளங்களை நிறுவி, உழைப்பாளி மக்களின் வாழ்க்கைத் தரத்தை மேம்படுத்துவதாகும்.

கலாசார, சித்தாந்தத் துறைகளில் சோஷலிச சீர்திருத்தங்களை நிறைவேற்றுவதும், தொழிலாளி வர்க்கத்திற்கும், உழைப்பாளி மக்கள் நலன்களுக்கும், சோஷலிசத்திற்கும் விசுவாசமாயிருக்கும் நன்கு கல்வி கற்றவர்களை ஏராளமான எண்ணிக்கையில் பயிற்றுவிப்பதும் கூட ஜீவா தார முக்கியத்துவம் வாய்ந்ததாகும். தேசிய மைனாரிடிகளின் ஒடுக்கு முறைக்கு முற்றுப்புள்ளி வைப்பதும், அவர்களிடையே சமத்துவ, சோதர நட்புறவு பந்தங்களை நிலைநாட்டிக் கொள்வதும் கூட அவசிய மாகும். எல்லாவற்றுக்கும் மேலாக வெளிநாட்டு, உள்நாட்டு எதிரி களின் அத்து மீறல்களிலிருந்து சோஷலிச வெற்றிகளை பாதுகாப்பதும், பாட்டாளி வர்க்க சர்வதேசிய கோட்பாடுகளுக்கு ஏற்ப உழைப்பாளி

மக்களுடன், இதர நாடுகளின் ஒடுக்கப்பட்ட தேசிய இனங்களுடனும் ஒருமைப்பாட்டை வலுப்படுத்திக் கொள்வதும் அவசியமாகும்.

சோஷலிசத்தை நோக்கி முன்னேறுவதற்கு இவைதான் பிரதான பொதுத் தேவைகள். சோஷலிசப்பாதையில் அடியெடுத்து வைத்துள்ள தேசங்கள் இப்பொதுக் கோட்பாடுகளைக் கடைப்பிடித்து, தமது சொந்த விசேஷ நிலைமைகளுக்கு ஏற்ப வெகு பல வகைப்பட்ட பொருளாதார, அரசியல் வடிவங்களைப் பயன்படுத்தியுள்ளன. அவை தமது நாடுகளில் சமுதாய அமைப்பு முழுவதையும் தீவிரமாக மாற்றி ஓர் உலக சோஷலிச அமைப்பை உருவாக்கி விட்டன. உற்பத்தி சாதனங்களில் பொது வுடமை வலியுறுத்தப் பட்டுள்ளது. பெரும்பாலானவற்றில் சோஷலிச முறையிலான விவசாய பற்று சீரமைப்பு நிறைவேற்றப்பட்டுவிட்டது. அவற்றில் சில சோஷலிசத்திற்கான அடித்தளங்களை நிறுவியுள்ளன. இதர நாடுகள் முன்னேற்றமடைந்த சோஷலிச சமுதாயத்தை நிர்மாணிடபதை முற்றுப்பெறச் செய்து வருகின்றன.

சோஷலிசத்தை நிர்மாணிக்கும் முயற்சியில் வெற்றி ஈட்டுவது புறநிலை, அகநிலை ஆகிய இரு நிலைமைகளையும் பொருத்து இருடபது இயல்பே, எவ்வளவு முரணற்ற வகையில் மார்க்சிய-லெனினியக் கருத்துக்கள் செயல்படுத்தப்படுகின்றன, அந்த அளவிற்கு எதார்த்த தன்மைபற்றி விஞ்ஞான கோட்பாடுகள் சமுதாய வளர்ச்சிக்குத் தலைமை தாங்குவதில் கடைப்பிடிக்கப்படுகின்றன என்பதை அது பொருத்து இருக்கிறது சோஷலிசத்தை நிர்மாணிப்பதில் கொள்கை ரீதியில் ஆதாரப்படுத்தப்பட்ட காலத்தின சோதனையை வென்ற வழிமுறைகளை மீறுவது அல்லது புறழ்ந்து செல்வது புதிய சமுதாயத்தை நிர்மாணிப்பதற்கான முயற்சிக்கு பெரும் பாதகத்தை உண்டு பண்ணலாம் அல்லது இப்போது சீனவில் நடைபெறுவது போல பின்னுக்குத் தள்ளவும் செய்யலாம்.

## புதுவகையான சர்வதேச உறவுகள்

சோஷலிசம் ஒரு நாட்டின் எல்லைக்கு அப்பாலும் விரிந்து பரவி ஓர் உலக அமைப்பாக மாறியபோது, ஆதிபத்திய உரிமைபடைத்த சோஷலிச நாடுகளிடையே எத்தகைய உறவுகள் நிலவ வேண்டும் என்பதை நிர்ணயிக்கும் பிரச்சினை கம்யூனிச இயக்கத்தின் முன் தோன்றிற்று.

இப்பிரச்சினையின் தீர்வுக்கான முன் தேவைகள் தெளிவானவை. சோஷலிசம், கம்யூனிசத்தின் ஒரு பிரதான நோக்கம், எக்காலத்திற்குமாக மக்களிடையே அவநம்பிக்கையையும், பகைமையையும் போக்குவதாகும், சுதந்திர நாடுகளிடையே நிலையான சமாதானத்தையும் சோதர பந்தங்களையும் நிலை நாட்டுவதாகும். எனவே, சோஷலிச நாடுகளிடையே உறவுகளை வலுப்படுத்தும் முயற்சி முழுவதும் இந்நோக்கங்களுக்குப் பாடுபட வேண்டும் என்பது தெளிவு.

இம்மாற்றம் கம்யூனிச லட்சியங்களுக்கும், எது நல்லது எது கெட்டது என்னும் கருத்துக்களுக்கும் ஏற்ப உள்ளது என்பது மட்டு மல்ல, சோஷலிசப் பாதையைக் கடைப்பிடிக்கும் நாடுகளுக்கு நீடித்து நிற்கக்கூடிய நேச அணி ஒரு புறநிலை அவசியமாகும். இது, கொள்கை, நடைமுறை ஆகிய இரண்டிலும் நிரூபணமாகியுள்ளது. ஆரம்ப முதற் கொண்டே சோஷலிச நாடுகள் ஏகாதிபத்திய ஆக்கிரமிப்பின் அபாயத்தை எதிர் நோக்குவதால், அவை புரட்சிகர லட்சியத்தைப் பாது காப்பதற்கும் சோஷலிசத்தை வெற்றிகரமாக நிர்மாணிப்பதற்கும் தமது முயற்சிகளை ஒன்றிணைப்பது ஜீவாதாரமானது. பொருளாதார முற்றுகையை பயனற்றதாக்குவதற்கும் முதலாளித்துவச் சந்தையில் நிலவும் சூறையாடல் தன்மை வாய்ந்த வர்த்தக நிபந்தனைகளைத் தவிர்ப்பதற்கும் வேகமான பொருளாதார வளர்ச்சியை அடைவதற் கான தமது முயற்சிகளுக்கு பரஸ்பரம் நம்பகமான உதவியும் ஆதரவும் பெறுவதற்கும் கூட அவை ஒன்று சேர்ந்து நிற்க வேண்டும். இவற்றை சாதிப்பதற்கான ஒரே வழி சோதர சோஷலிச நாடுகளுடன் சகல வழிகளிலும் பொருளாதார பந்தங்களை வலுப்படுத்துவதுதான். எல்லா வற்றுக்கும் மேலாக, அவை தமது அயல்துறைக் கொள்கைகளை ஒன் றிணைத்துக் கொண்டு உலக அரங்கில் ஓர் ஐக்கிய முன்னணி அமைக்கும் போது சோஷலிச நாடுகள் தமது மதிப்பும் உலக சம்பவங்கள் மீது செல்வாக்குச் செலுத்துவதற்கான அவற்றின் ஆற்றலும் பெருமளவு அதிகரிக்கின்றன.

பொதுவான சமுதாய, பொருளாதார அமைப்பு, ஒரே மார்க்சிய-லெனினிய சித்தாந்தம், உடனடி அரசியல் நலன்களின் ஒருமித்த போக்கு—இவ்வம்சங்கள் அனைத்தும் சோஷலிச நாடுகளின் ஒற்றுமைக் கான அவசியத்தை வலியுறுத்துகின்றன. பல நாடுகளின் கூட்டணியை விட இந்த ஒற்றுமைக்கு அதிகப் பொருள் இருக்கின்றது. அடிப்படை யில் புதிய வகையான சர்வதேச உறவுகள் தோன்றுவதையும், வளர்ச்சி அடைவதையும் இது அர்த்தப்படுத்துகின்றது.

அரசுரிமை படைத்த நாடுகளிடையேயான உறவுகளில் சோஷலிசம் அறிமுகம் செய்துள்ள புதிய அம்சங்களை நன்கு புரிந்து கொள்வதற்கு உலக வரலாற்றைப் பின்நோக்கிப் பார்ப்பது பயனுடையதாயிருக்கும். உலகில் முதன் முதலில் அரசாங்கங்கள் தோன்றிய காலந்தொட்டே, ஆளும், சுரண்டும் வர்க்கங்கள் தமது பிரதேசத்தை விஸ்தரித்து எவ்வகையிலாயி னும் இதர மக்களை அடிமைப்படுத்த வேண்டி அவை ஒன்றுடன் மற்றொன்று மிருகத்தனமாக சண்டை போட்டுக் கொள்ளத் தொடங்கின. இதைத் தொடர்ந்த போர்கள் சொல்லொணாத் துன்பத்தை விளைத்தன; அதே சமயத்தில், போர்களுக்கு இடையான குறுகிய இடைவெளிகள் புதிய படையெடுப்பு களுக்குத் தயாரிப்புகள் செய்வதற்குப் பயன்பட்டன.

ஏமாற்று, துரோகம், வன்முறை-இவை அனைத்தும் தனது அண்டை நாடுகளைத் தோற்கடிக்கவும், இதர நாடுகளை அடிமைப்படுத்தவும் ஒரு சாம்ராஜ்யத்தை நிர்மாணிப்பதற்கு அல்லது காலனி நாடுகளைக் கைப்பற்றப் பயன்படுத்தப்பட்டன. நோக்கம் சரி, முறைகள் எதுவானால் என்ன என்பதை நியாயப் படுத்தும் போக்கு நிலவியது.

ஏகாதிபத்திய சகாப்தத்தில் சூறையாடல் உலகு தழுவிய அளவில் அதன் உச்சக்கட்டத்தை அடைந்தது. சர்வதேச உறவுகளில், குறிப்பாக பலவீனமான நாடுகளுடனான ஏகாதி பத்திய வல்லரசுகளின் நடவடிக்கைகளில் பொருளாதார சக்தி யும், ராணுவ வல்லமையும் பிரதான வாதமாயிற்று. பல்வேறு சமயங்களில் அமெரிக்க அரசியல்வாதிகள் அமெரிக்க அயல் துறைக் கொள்கை நடவடிக்கைகளைத் ''தடியெடுத்தவன் தண்டல்காரன்'' கொள்கை என்றும், ''டாலர் ராஜ தந்திரம்'' ''அணு ஆயுத அச்சுறுத்தல்'' என்றும், ''பல நிலை''க் கொள்கை என்றும் குறிப்பிட்டுள்ளனர்.

இரண்டாவது உலகப் போருக்குப் பின்னர், ஏகாதிபத்திய வல்லரசுகள் சோஷலிச நாடுகளுக்கும், புரட்சிகரத் தொழி லாளி வர்க்கத்திற்கும், தேச விடுதலை இயக்கங்களுக்கும் எதிரான ஆக்கிரமிப்பு ராணுவ, அரசியல் கூட்டணிகளை நிறுவின. ஆனால் இத்தகைய கூட்டணிகள் கூட முதலாளித்துவ நாடுகளிடையே நிலவும் ஆழமான பகைமைகளை அகற்ற முடிய வில்லை. சந்தைகளுக்கும், முதலீட்டு மண்டலங்களுக்கும் ஆன போராட்டம் உக்கிரம் குன்றாமல் தொடர்ந்து நடைபெறு கிறது.

முதலாளித்துவ அமைப்பிற்குள் ஒரு நாட்டின் லாபம் மற்றொரு நாட்டின் நஷ்டமாக விளங்கிற்று என்று மார்க்ஸ் கருத்துத் தெரி வித்தார். மறுபுறம், சோஷலிச அமைப்பினுள் ஒரு நாட்டின் அனுகூலம் சகல நாடுகளின் அனுகூலமாக விளங்குகிறது—இது நடை முறையிலும் கொள்கை அளவிலும் ஊர்ஜிதம் செய்யப்பட்டுள்ளது.

புதிய வகையான சர்வதேச உறவுகள் தாமாக ''நிகழ்ந்து'' விடுவ தில்லை என்பது உண்மையே. சோஷலிச நாடுகளிடையே பொருளா தார, அரசியல், கலாசார பந்தங்களின் விரிவான அமைப்பை உருவாக்குவது அவசியம். கொஞ்ச காலமாகவே புதிய உலக உறவுகள் உருப்பெற்று வந்துள்ளன; இந்த மாற்றம் இன்னும் முற்றுப் பெற வில்லை.

இவ்வகை உலக உறவுகளை உருவாக்குவதில் சோவியத் யூனியன் பெரும் பங்காற்றி வருகிறது என்பது பொதுவாக ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளது. சோவியத் யூனியன் ஏகாதி

பத்தியப் பிற்போக்கினுடைய சக்திகளைத் தடுத்து நிறுத்திய காரணத்தால், இரண்டாவது உலகப் போர் வெற்றியைத் தொடர்ந்து பல நாடுகளில் சோஷலிசப் புரட்சியின் வெற்றி மிகவும் சுலபப்படுத்தப்பட்டது. அது, அன்னியத் தலையீட்டைத் தடுத்தது, இளம் சோஷலிச நாடுகளை முற்றுகையிடுவதற்கான திட்டங்களைத் தவிடு பொடியாக்கிற்று; மேலும் அவை தமக்கெனச் சொந்தமாகத் தொழில்களை நிர்மாணிப்பதற்கு உதவியது.

போர்ப் பிற்கால முதல் ஆண்டுகளில் சோவியத் யூனியனும், சோஷலிசப் புரட்சி வெற்றிவாகை சூடிய இதர நாடுகளும் பொருளாதார ஒப்பந்தங்களையும், நேச உறவு உடன்படிக்கைகளையும், ஆக்கிரமிக்கப்பட்டால் பரஸ்பரம் உதவி செய்து கொள்வதற்கான உடன்படிக்கைகளையும் செய்து கொண்டன. ஜெர்மன் ராணுவ வெறியைப் புதுப்பிப்பதற்கும், சமஷ்டி ஜெர்மனியை நேட்டோ கூட்டணிக்குள் கொண்டு வருவதற்குமான ஒப்பந்தங்களில் ஏகாதிபத்திய வல்லரசுகள் கையெழுத்திட்ட போது, ஐரோப்பிய சோஷலிச நாடுகள் வார்சா ஒப்பந்த அமைப்பை (மே, 1955இல்) உருவாக்கின. இத்தற்காப்பு அமைப்புக்குக் கூட்டு ராணுவப் படைகளும், கூட்டுத் தலைமையும் உள்ளன. சோஷலிச நாடுகளின் ஒன்றிணைக்கப்பட்ட தற்காப்பு நடவடிக்கைகளும், குறிப்பாக சோவியத் யூனியனின் அணு ஆயுத ஏவுகணை வல்லமையும் தான் சோஷலிசத்தை உறுதியாகப் பாதுகாக்கின்றது; ஏகாதிபத்திய நாடுகளின் போர் வெறி வட்டாரங்களுக்குத் தளையிடுகின்றது.

எனினும், உலக சோஷலிச அமைப்பைச் சேர்ந்த நாடுகளின் ஒற்றுமையும், இணைவும் தானாகவே ஏற்பட்டு விடுவதில்லை என்பதை நாம் நினைவு கூரவேண்டும். பல நூற்றாண்டுகளாக வளர்க்கப்படுத்தப்பட்ட பகைமை, அவநம்பிக்கை, தேசியவாதத் தப்பெண்ணம் ஆகியவை நிலவும் சூழ்நிலைமைகளில் சோஷலிச நாடுகள் தமது புதிய உறவுகளை நிர்மாணித்து வருகின்றன. முதலாளித்துவம் ஒழிந்த பிறகும கூட அது நாடுகளிடையே தகராறுகளைப் பிதுரார்ஜிதமாக விட்டுச் செல்லக் கூடும். சில வேளைகளில் பல்வேறு நாடுகளின் உடனடித் தேசிய நலன்கள் ஒன்றாக இருப்பதில்லை. இந்நாடுகளிடையேயான சோதர ஒத்துழைப்பின் செல்வாக்குடன் இந்த இடர்களின் வீச்சை ஒப்பிட முடியாவிட்டாலும், இவ்விடர்கள் சோஷலிசத்தின் லட்சியத்திற்குப் பெருங்கேட்டை விளைவிக்கக் கூடும்; இவ்விடர்களைச் சமாளிப்பதற்குக் கணிசமான, இடையறாத முயற்சி தேவை.

எனவே, தற்போதைய சூழ்நிலைமைகளில், கம்யூனிஸ்டுத் தொழிலாளர் கட்சிகள் சரியான மார்க்சிய-லெனினியக் கொள்கையைப் பின்

பற்றுவதும் அந்நாடுகளின் தேசிய நலன்களை சோஷலிச அமைப்பு முழுமையின் நலன்களுடன் இணைப்பதைச் சாத்தியமாக்குவதும் ஜீவாதார முக்கியத்துவம் வாய்ந்ததாகும்.

சகல மக்களும் ஒரே முறையில் சிந்திப்பதில்லை; அவர்கள் ஒரே கருத்துக்களைக் கொண்டிருந்த போதிலும் கூட, சோஷலிசத்தை நிர்மாணிப்பது நாடுகளிடையேயான உறவுகள் தொடர்பான பல்வேறு பிரச்சினைகள் பற்றிய கண்ணோட்டம் எப்போதுமே முற்றிலும் ஒன்றுக இருப்பதில்லை. ஆனுல் கருத்தொற்றுமையும், பொது லட்சியமும் சுதந்திரமான விவாதத்தின் அடிப்படையில் கூட்டு முடிவுகளை எடுப்பதற்கு உதவுகின்றன. இந்நோக்கத்திற்காகக் கம்யூனிஸ்டு, தொழிலாளர் கட்சிகள் கலந்தாலோசனைகள், பேச்சு வார்த்தைகளும், தூதுக் குழுக்கள் பரிமாற்றமும், நடத்துகின்றன; அவை, அக்கறையுடைய சகல விஷயங்களையும் மனப்பூர்வமான, தோழமை சூழ்நிலையில் விவாதம் செய்கின்றன.

சோஷலிச நாடுகளிடையேயான சகஜமான நேச உறவுகளை நிலைநாட்டுவதற்குக் கம்யூனிச இயக்கத்தின் கொள்கை தஸ்தவேஜுக்களில் பதிவு செய்யப்பட்டுள்ள காலத்தின் சோதனையை வென்றுள்ள கோட்பாடுகளைக் கடைப்பிடிப்பது விசேஷ முக்கியத்துவம் வாய்ந்ததாகும். இவை சமத்துவம், ஒருவர் மற்றவர் சுதந்திரத்தையும், தேசிய அரசுரிமையையும் மதிப்பது, ஒன்று மற்றொரு நாட்டின் உள்நாட்டு விவகாரங்களில் தலையிடாதிருப்பதுமாகும். அதே சமயத்தில், சோஷலிச நாடுகளிடையேயான உறவுகள் இந்தக் கோட்பாடுகளோடு மட்டும் அடங்கியதாக இருக்கவில்லை. அவை சோஷலிச சர்வதேசியத்தை அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன. இந்த சர்வதேசியக் கோட்பாடு சோஷலிச நாடுகளின் பலத்தைப் பெருக்கும் பிரம்மாண்டமான, பன்முக பரஸ்பர உதவி முழுவதையும் உள்ளடக்கியதாகும். சர்வதேசியத்திற்கு விசுவாசமாயிருப்பதுதான் உலக சோஷலிச அமைப்டையும், உலகப் புரட்சிகர இயக்கத்தின் வெற்றிகரமான வளர்ச்சியையும் பெருகி வரும் வல்லமையையும் உத்தரவாதப் செய்கிறது,

ஆனுல், அதைவிட முக்கியமான ஒன்றும் இதில் காணக் கிடக்கிறது. சர்வதேசியம் என்றுல் பாட்டாளி வர்க்கத்திற்குப் பாதகமான சகல கருத்துக்கள் கொள்கைகள் ஆகியவற்றுக்கு எதிரான கடுமையான போராட்டம் என்று பொருள்.

சோஷலிசத்தை நோக்கிய முன்னேற்றம், தொழிலாளி வர்க்கத்தை மட்டுமின்றி விவசாயிகள், நகர்ப்புற குட்டி பூர்ஷுவாக்களையும், மற்றும் சமுதாயத்தின் தொழிலாளி வர்க்கமல்லாத பகுதிகளையும் சேர்த்த ஒன்றுகும். முதலாளித்துவத்தின் கீழ் அவர்களின் வாழ்க்கை முறை அவர்களுடைய நடத்தையில் ஓரளவு இருமனப்போக்கையும், அவர்களுடைய சிந்தனையில் முரண்பாடுகளையும் வளர்க்கிறது. சிறு

உடமையாளர்களின் தற்பெருமை தேசிய அளவில் தேசியவாத தற்பெருமையாக மாறுகிறது. இது, ஒருபுறம், ஒரு நாட்டை வெளி உலகத்திலிருந்து வேலியிட்டு பிரித்து வைக்கவும், மறுபுறத்தில், ஒரு நாட்டை இதர நாடுகள் அனைத்தையும்விட உயர்வாக வைப்பதையும், ஒரு நாட்டின் ஆட்சியையும், எண்ணப் பாங்கையும், செயல்களையும் இதர நாடுகள்மீது திணிப்பதையும் நோக்கமாகக் கொண்ட விருப்பத்திற்கு இட்டுச் செல்கிறது.

இந்நிலைமையில் பாட்டாளி வர்க்கத்தின் முக்கியமான கடமைகளில் ஒன்று உழைப்பாளி மக்கள் அனைவரையும் பாட்டாளி வர்க்க சித்தாந்தத்தை ஏற்றுக் கொள்ளும்படி செய்வதும், தேசியவாதக் கண்ணோட்டத்திற்குப் பதிலாக சர்வதேசியக் கண்ணோட்டத்தை அவர்களுக்கு அளிப்பதும், விஞ்ஞான கம்யூனிசப் பாதையில் அவர்களை அழைத்துச் செல்வதும் ஆகும். விசேஷமாக, பெரும்பாலான அளவில் விவசாயிகள் வாழும் நாடுகளில் இச்கடமையின் முக்கியத்துவத்தை லெனின் பல தடவைகள் வலியுறுத்தியுள்ளார். இதற்கிடையில், தேசியவாதம் எனும் சொல்லை ஏதாவது ஒரு வகையில் ஒரு நாட்டின் மெய்யான நலன்களைக் குறிப்பிடும் தேசியம் என்னும் சொல்லுடன் போட்டுக் குழப்பக் கூடாது. சோஷலிசப் புரட்சியை நிறைவேற்றிவிட்டு அதிகாரத்திற்கு வந்துவிட்ட ஒரு கட்சியில் தேசியவாதக் கருத்துக்கள் பிரதிபலிக்குமானால் அவை வெகு அபாயகரமானவை என்பது தெளிவு. இந்நிலைமையில், அவற்றின் எதிர்மறையான விளைவுகள், சம்பந்தப்பட்ட நாட்டிற்கு உள்ளே விஞ்ஞான சோஷலிசத்தின் லட்சியங்களையும் தேவைகளையும் சிதைப்பதோடு மட்டுமின்றி உலக அரங்கில் சோஷலிச சர்வதேசியத்தின் கோட்பாட்டையும் உடைக்கின்றன. தேசியவாத தப்பெண்ணங்கள் சோஷலிச விரோத மனப்பான்மைகளை வளர்க்கின்றன; இவை சோஷலிச லட்சியத்திற்குப் பெருங்கேட்டை உண்டாக்க முடியும்.

உழைப்பாளி மக்களுக்கு விரோதமான பல்வேறு சித்தாந்த வெளிப்பாடுகளை எதிர்த்துப் போராடும் மார்க்சிய-லெனினியக் கட்சிகள், சோஷலிச நாடுகளின் ஒற்றுமையைக் கட்டி வளர்ப்பதற்குப் பாடுபடுகின்றன. இம்முயற்சியில் அவை சில வேளைகளில் வரலாற்றின் திடீர் திருப்பங்களை எதிர்கொள்ள வேண்டியுள்ளது. ஆனால், புதுவகையான உலக உறவுகளை நிர்மாணிக்கும் மாபெரும் பணி எவ்வளவு இடர்மிக்கதாயும் சிக்கல் நிறைந்ததாயும் இருந்த போதிலும், உலக சோஷலிச அமைப்பின் வளர்ச்சிக்கான பறநிலைத் தேவைகளுக்கும், சகல உறுப்பினர் நாடுகளின் நலன்களுக்கும் இசைவாயிருப்பதால் அது நிறைவேற்றப்படும்.

## உலக சோஷலிசப் பொருளாதார அமைப்பு

சோஷலிசத்தினால் வலியுறுத்தப்படும் புதுவகை உலக உறவுகளின் அனுகூலங்கள், சோஷலிச நாடுகளின் பொருளாதார ஒத்துழைப்பில் தெளிவாக நிரூபிக்கப்பட்டு வருகின்றன. சோதர நாடுகளின் மக்கள்

தொழில் துறையிலும், விவசாயத்திலும் வேகமான முன்னேற்றம் அடைந்து வாழ்க்கைத் தரங்களை உயர்த்திக் கொள்ள வேண்டுமென்று இந்த ஒவ்வொரு நாட்டு மக்களும் விரும்புகின்றனர். அவர்கள் அனைவரின் வெற்றியும் அவர்களிடையேயான பரஸ்பர பொருளாதார உதவியைப் பெருமளவு சார்ந்துள்ளது. இவ்வுதவி பரஸ்பர அனுகூல மான வர்த்தகம், கடன்கள், கடனுதவிகள், தொழிற்சாலைகளைக் கட்டுவதற்கு உதவுவது, விஞ்ஞான தொழில்நுட்ப அறிவைப் பரிமாற்றம் செய்து கொள்வது போன்ற இன்ன பிற வடிவங்களை எடுக்கிறது.

எவரும் எதிர்பார்ப்பது போல, முதல் முதலாக, இத்தகைய உதவி மிக மிக முன்னேற்றமடைந்த நாடுகளிலிருந்து கிடைக்கிறது. உதாரண மாக, இதர சோதர சோஷலிச நாடுகளின் தொழிற்துறை நிறுவனங் களை நிர்மாணிப்பதற்கு சோவியத் யூனியன் அவற்றுக்கு உதவி புரிந் துள்ளது. அது, கடனுதவிகளையும், திட்டவரைவுகளையும், இதர தொழில்நுட்ப உதவியையும் அளித்து ஒரு குறுகிய காலவரம்புக்குள் உற்பத்தியைத் தொடங்குவதற்கு உதவுகிறது. விசேஷ பயிற்சித் துறையிலும் அது தொடர்ந்து உதவி அளித்து வருகிறது. இதில் முக்கியமானது என்னவென்றால் சோஷலிசக் கூட்டமைப்பின் அதிக முன்னேற்றமடைந்த உறுப்பினர்கள் இதர சோதர நாடுகளுக்கு உதவி அளிக்கும்போது தமக்கென தனி அனுகூலங்களைக் கோருவதில்லை என்பதே.

ஒவ்வொரு நாடும் முதன் முதலில் புதிய சமுதாயத்தை நிர்மாணிப்ப தற்காக தனது உள்நாட்டுச் செலவாதாரங்களையே ஒன்று திரட்டுகிறது. ஆனால் அது இதர சோஷலிச நாடுகளுடன் ஒத்துழைக்கவும் செய்கிறது; அது, ஏதாவது ஒரு விஷயத்தில் வெற்றி பெற்றால், தனது சாதனைகளை இரகசியமாக வைத்துக் கொள்வதில்லை. மாறாக, அது அவற்றை இதரர்களுடன் பகிர்ந்து கொள்கிறது. இதுதான் சோஷலிசக் கூட்டமைப்பில் வளர்ந்துவரும் தோழமை பூர்வமான பரஸ்பர உதவி யின் பன்முக உறவுகளுக்கு முன்மாதிரி.

உதாரணமாக, செக்கோஸ்லாவாகியா, இதர கூட்டமைப்பு உறுப்பு நாடுகள் தமது இயந்திரக் கருவிகள் தொழில்களை வளர்ப்பதற்கு உதவி வருகிறது. வெகு உயர்தரமான கண்பார்வை சம்பந்தமான கருவிகளை செய்வதில் தனக்குக் கிடைத்துள்ள விரிவான அனுபவத்தை ஜெர்மன் ஜனநாயகக் குடியரசு பகிர்ந்து கொள்கிறது; அதே சமயத் தில் போலந்து சுரங்க சாதனங்கள் உற்பத்தியில் தனது தேர்ச்சியைப் பகிர்ந்து கொள்கிறது. சோஷலிச நாடுகள், பயனீட்டாளர் பண்டங்கள் உட்பட செய்பொருட் பண்டங்களைத் தமக்குள் பரிமாற்றம் செய்து கொள்கின்றன.

பொருளாதார ஒத்துழைப்பு அளிக்கும் வாய்ப்புக்களை அவை மென்மேலும் முழுமையாகப் பயன்படுத்தி வருகின்றன. அவற்றில்

சிலவற்றின் வசம் செழுமையான நிலக்கரி, எண்ணெய் செல்வா தாரங்கள் அல்லது ஒரு குறிப்பிட்ட துறையில் மாபெரும் அனுபவம் இருப்பதால், அவை தமது சொந்தத் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ள மட்டுமின்றி இதர சோதர நாடுகளுக்குத் தமது பண்டங்களை ஏற்றுமதி செய்யவும் இத்தொழில்களை அபிவிருத்தி செய்கின்றன. இவை இதர நாடுகளுக்கும் தமது சொந்த விசேஷப் பண்டங்களைச் சப்ளை செய்கின்றன. இந்த பரிமாற்றம் பல அனுகூலங்களைக் கொண்டு வரமுடியும். ஒவ்வொரு சோஷலிச நாடும் அனைத்தையும் உற்பத்தி செய்ய வேண்டிய அவசியமில்லை. அவை அனைத்தும் தமது இயற்கைச் சூழ்நிலைமைகளுக்கு வெகுபொருத்தமாயுள்ளதும், தாம் மிகுந்த அனுபவத்தைப் பெற்றுள்ளதும் ஆன தொழிற்துறை, விவசாயத் துறைகளை வளர்க்க முடியும்.

வரலாற்று ரீதியில் நாடுகளிடையே ஒரு பிரதேச ரீதி சர்வதேச உழைப்புப் பிரிவினை தோன்றியுள்ளது. இதன் பொருள் ஒவ்வொரு நாடும் சில பண்டங்களை உற்பத்தி செய்வதில் தனித்தேர்ச்சி பெறுகின்றன, அவற்றை உலகச் சந்தையில் விற்கின்றன, தன்னிடம் இல்லாத பண்டங்களை வாங்கிக் கொள்கின்றன என்பதே.

சர்வதேச உழைப்புப் பிரிவினை தொழிலாளர் உற்பத்தி ஆற்றலைப் பெருக்குவதால், அது முற்போக்கானது என்பது தெளிவு. எனினும், முதலாளித்துவத்தின்கீழ் இந்த சர்வதேச உழைப்புப் பிரிவினை சிதைந்த தோற்றத்தில் காணப்படுகிறது. இதற்குக் காரணம் முதலாளிகள் இதை ஒரு லாபம் சம்பாதிப்பதற்கான ஆதாரமாகவும், வளர்முக நாடுகளைச் சுரண்டுவதற்கான ஒரு சாதனமாகவும் மாற்றுகின்றனர்.

ஏற்கெனவே குறிப்பிட்டது போல, ஏகாதிபத்தியவாதிகள் ஓரிரு வகைப் பண்டங்களை உற்பத்தி செய்வதில் தேர்ச்சி பெறும்படிக் காலனி நாடுகளையும், சார்பு நாடுகளையும் கட்டாயப்படுத்தினர். இதன் விளைவாக, இந்நாடுகள் ஏகாதிபத்திய வல்லரசுகளை முற்றிலும் சார்ந்திருக்கும் நிலைமையை எய்தி அவற்றின் மூலப் பொருட் தொங்குசதைகளாக மாற்றப்பட்டன. அவை ஈவுஇரக்கமின்றி ஏமாற்றப்பட்டன. உதாரணமாக, வெனிசுலா நாடு ஆண்டுதோறும் 20 கோடி டன் எண்ணெயை உற்பத்தி செய்கிறது. அது எண்ணெயை விற்க முடியாத நிலைமை ஏற்பட்டால், அதற்குப் பெருத்த நஷ்டம் ஏற்படும், அதன் மக்கள் பட்டினி கிடக்கும் நிலைமை ஏற்படும். ஆப்பிரிக்காவில், கானாவானது உலகச் சந்தையில் கொககோ விதைகளை விற்பனை செய்வதை முற்றிலும் சார்ந்து இருக்கிறது. செனிகல் பட்டாணிக் கடலையின் விற்பனையைச் சார்ந்து நிற்கிறது. இந்த நிலைமையை ஏகாதிபத்தியவாதிகள் தமது சொந்த நலன்களுக்காகப் பயன்படுத்திக் கொண்டனர்.

சோஷலிசத்தின் கீழ் நிலைமை முற்றிலும் மாறாக உள்ளது. ஒரு நாடு மற்றொன்றைச் சுரண்டுவதற்கு சோஷலிசம் முற்றுப்புள்ளி வைத்து சாவதேச விவகாரங்களில் சமத்துவத்தை நிலைநாட்டியுள்ளதால், இந்த சர்வதேச உழைப்புப் பிரிவினையில் முதலாளித்துவச் சிதைவுகளுக்கு இடம் கிடையாது. நாடுகளுடையேயான பகைமைகள் அகற்றப்படு கின்றன; உலக சோஷலிச அமைப்பிற்குள் சகல நாடுகளின் இசைவான பொருளாதார வளர்ச்சிக்கான நிலைமைகள் படிப்படியாக உண்டுபண்ணப் படுகின்றன. இதன் விளைவாக, உலக சோஷசப் பொருளாதாரம் ஒரு புது வகையான சர்வதேச உழைப்புப் பிரிவினையை வளர்த்து வருகிறது. இது சுயவிருப்ப ஒற்றுமை, சமத்துவம் என்ற அடிப்படையில் இந்த அமைப்பிலுள்ள சகல நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்திற்குப் பாடுபடுகிறது.

சர்வதேச சோஷலிச உழைப்புப் பிரிவினை அண்மையில் தான் உருவாகத் தொடங்கிற்று. அது இன்னும் பூரண வளர்ச்சி பெறவில்லை; காரணம், உலக சோஷலிச அமைப்புத் தோன்றி 25 ஆண்டுகளே ஆகின்றன; மேலும் பல்வேறு நாடுகளிடையே தனித் தேர்ச்சியையும், ஒத்துழைப்பையும் நிலை நாட்டுவதற்கு மேலும் காலம் பிடிக்கும். எனவே, எவ்வளவோ ஏற்கெனவே சாதிக்கபட்டுள்ள போதிலும், சர்வதேச சோஷலிச உழைப்புப் பிரிவினையின் சகல வாய்ப்புக்கள், அனுகூலங்களை யும் பயன்படுத்துவதற்கு இன்னும் எவ்வளவோ செய்ய வேண்டியுள்ளது. ஐரோப்பிய சோஷலிச நாடுகள் பரஸ்பர பொருளாதார உதவிக் கவுன்சில் (சீஎம்இஏ) மூலமாக பன்முக பொருளாதார ஒத்துழைப்புப் பிரச்சினைகளுக்குத் தீர்வு கண்டு வருகின்றன.

சீஎம்இஏ நாடுகளின் கூட்டு முயற்சிகளின் விளைவாக பல பெரிய பொருளாதாரத் திட்ட நிலையங்கள் நிறைவேற்றப் பட்டு விட்டன அல்லது நிறைவேற்றப்பட்டு வருகின்றன. உதாரணமாக, நட்புறவுக் குழாய்ப்பாதை என்று அழைக்கப் படும் 5,000 கிலோ மீட்டர் எண்ணெய்க் குழாய்பாதை 1963 முதற்கொண்டு இயங்கி வருகின்றது. இது பல சோவியத் நகரங்களை செக்கோஸ்லாவாகியா, போலந்து, ஜெர்மன் ஜன நாயகக் குடியரசு, ஹங்கேரி ஆகிய நாடுகளுடன் இணைக்கிறது. முதலாளித்துவ ஏகபோகங்களால் நிறுவப்பட்ட அதற்கு இணை யான இரு பெரும் பாதைகளையும் விட—அமெரிக்காவில பெரும் இஞ்ச், மத்திய கிழக்கில் டிரான்ஸ்-அராபியன் குழாய்பாதை ஆகியவற்றை விட—இது நீளமானது. 1964ல் இந்த நட்புறவுக் குழாய்ப்பாதை சோஷலிச நாடுகளுக்கு 83 லட்சம் டன் எண் ணெயை சப்ளை செய்தது. 1975க்குள் இது 5 கோடி டன் எண்ணெயை சப்ளை செய்யும். செக்கோஸ்லோவாகியா, ஜெர்மன் ஜனநாயகக் குடியரசு, போலந்து, பல்கேரியா, ஹங் கேரி ஆகிய நாடுகளுக்கு இயற்கை எரிவாயுவை சோவியத்

யூனியனிலிருந்து சப்ளை செய்வதற்காக மற்ெருரு பெரும் குழ ய்ப்பாதை நிறுவப்பட்டு வருகிறது. ஐரோப்பிய சோஷலிச நாடுகளின் ஓர் ஒன்றிணைந்த மின்விசை கோப்பும் உள்ளது. மீர் (சமாதான) அமைப்பு என்று அழைக்கப்படுகிறது. அது 10 கோடி மக்கள் வாழும் ஒரு பிரதேசததிற்கு மின்சாரத்தைக் கொண்டு செல்கிறது.

1971ல் பரஸ்பர பொருளாதார உதவிக் கவுன்சில் புகாரெஸ்டில் தனது 25ஆவது கூட்டத்தை நடத்திய போது, அடுத்த 15 முதல் 20 ஆண்டுகளுக்கான ஒத்துழைப்பு, சோஷலிசப் பொருளாதார இணைப்பு வளர்ச்சிக்கான ஒரு சர்வாம்சத் திட்டத்தை ஏற்றது. இது மாபெரும் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த சம்பவமாகும். சர்வதேச சோஷலிச உழைப்புப் பிரிவினை வெற்றிகரமாக வளர்ந்து வருகிறது என்பதை இது காட்டிற்று.

ஒரு பொதுவான திட்டத்திற்கு ஏற்ப சகல நாடுகளின் பாட்டாளி வர்க்கமும் மேற்பார்வை செய்யும் தனியொரு முழுமையாக உலகப் பொருளாதாரம் வளர்ச்சி பெறும் போக்கு இருப்பதை லெனின் சுட்டினார். இப்போக்கு இப்போது மென்மேலும் முனைப்பாகி வருகிறது. சோஷலிசப் பொருளாதார ஒருங்கிணைப்பு இதற்கோர் தெளிவான உதாரணமாகும்.

ஒத்துழைப்பின் மிக உயர்ந்த கட்டம் ஒருங்கிணைப்பு. இது சிஎம்இஏ நாடுகளின் பொருளாதாரங்களை, உதாரணமாக, பல தொழில்களில் கச்சாப் பொருட்கள், எரிபொருள், சிலவகை இயந்திரங்கள், இத்தியாதிகள் உற்பத்தி) கூட்டாக முதலீடுகள் செய்வதன் மூலமும், அதிகமான தனித்தேர்ச்சி ஆழமான ஒத்துழைப்பு மூலமும், பொருளாதாரத் திட்டங்களை நெருக்கமாக ஒன்றிணைப்பதன் மூலமும் இன்னும் நெருக்கமாகக் கொண்டுவருவதைக் குறிப்பிடுகிறது. ஒருங்கிணைப்பு ஒவ்வொரு நாட்டின் பொருளாதார வளர்ச்சியையும், சோஷலிசக் கூட்டமைப்பின் வலுவையும் ஊக்குவிக்கின்றது.

எனினும், உலக சோஷலிசப் பொருளாதார அமைப்பின் முன்னேற்றம், சோஷலிச நாடுகள் தம்மைத்தாமே உலகின் இதர பகுதிகளிலிருந்து பிரித்துக் கொண்டு தனியாக இயங்கி வரவிரும்புகின்றன என்பதை எவ்வகையிலும் குறிப்பிடவில்லை, மாருக, அவை, சகல நாடுகளுடனும்—அவற்றின் சமூக, பொருளாதார அமைப்புகள் எவ்வாறு இருந்த போதிலும்—பரஸ்பர அனுகூலமான ஒத்துழைப்பையும் வர்த்தகத்தையும் விரும்புகின்றன.

## பிரதான புரட்சிகர சக்தி

இன்று உலக சோஷலிச அமைப்புத்தான் பிரதானப் புரட்சிகர சக்தி ஆகும். முதலாவதாக இது சோஷலிச உதாரணத்தின் செல்வாக்கினுல்

நிரூபணமாகிறது. மனிதர்களும் தேசங்களும் சுரண்டப்படுவதை ஒழிக்கும் புதிய சமுதாயத்தை நிர்மாணிப்பதில் சோஷலிச நாடுகள், சோஷலிச அமைப்பின் பாபெரும் அனுகூலங்களை எடுத்துக் காட்டி வருகின்றன. அவை ஓர் உயர் பொருளாதார வளர்ச்சி விகிதத்தைச் சாதனையாக்கி விட்டன; வேலையில்லாத் திண்டாட்டம், சுரண்டல், சமத்துவமின்மை, மற்றும் முதலாளித்துவ உற்பத்தி முறையின் இதர சமுதாயக் கேடுகளை ஒழித்து விட்டன. ஒவ்வொரு சோஷலிச நாடும் விரிவான சமூகப் பாதுகாப்பு அமைப்பை நிறுவி வெகு உயர்தரமான கல்வி முறையையும் நிலைநாட்டியுள்ளது. சோஷலிச விஞ்ஞானமும் கலையும் செழுமையடைந்துள்ளன. சோஷலிசத்தின் இச்சாதனைகள் எல்லாம் மார்க்சிய - லெனினியக் கருத்துக்கள் பரவுவதை வேகப்படுத்த உதவுகின்றன; மேலும் இவை தான் சோஷலிச முறையில் சமுதாயத்தை மீண்டும் உருவாக்குவதை ஊக்குவிப்பதற்கான சிறந்த பாதையாகும்.

சோவியத் யூனியனின் தலைசிறந்த சாதனைகள் சோவியத் - எதிர்ப்புப் பிரசாரத்தின் முற்றிலும் அபத்தமான தன்மையை காட்டு கின்றன என்று தான்சானியாவின் ஜனாதிபதி ஜூலியஸ் நிபராரே ஒரு சமயம் வெகு பொருத்தமாகக் கூறியது முக்கியத்துவம் வாய்ந்ததாகும். ''சோஷலிச சமுதாயத்தை நிர்மாணிப்பதற்கான முதல் முயற்சிகளில் ஈடுபட்டுள்ள தான்சானியர்கள் சோவியத் அனுபவத்தில் அக்கறை கொண்டிருப்பது இயல்பே; காரணம் இது மனித குலம் முழுமைக்கும் முக்கியத்துவம் வாய்ந்தது. ஆப்பிரிக்காவிலுள்ள யாரும் இம்மறுக்க முடியாத உண்மையை புறக்கணிக்க முடியாது,'' என்று அவர் கருத்துத் தெரிவித்தார்.

மேலும் உலக சோஷலிச அமைப்பு ஏகாதிபத்திய சக்திகளைக் கட்டுப் படுத்தி வருகின்றது. இது. உலகப் புரட்சிகர வளர்ச்சியில் இது ஆற்றும் மற்றொரு பாத்திரம். இதன் விளைவாக, புரட்சிகர இயக்கத்தின் முன் னேற்றத்திற்கு சாதகமான நிலைமைகள் உருவாகி வருகின்றன. அதிகரித்து வரும் தமது பொருளாதார வல்லமையையும் அரசியல் செல்வாக்கையும் ஆதாரமாக்கிய சோஷலிச நாடுகள், எதிர்ப்புரட்சியை ஏற்றுமதி செய்யும் ஏகாதிபத்தியக் கொள்கையை தடுத்து நிறுத்தி, ஒரு அணு ஆயுதப் போரைக் கட்டவிழ்த்து விடுவதற்கு விரும்பும் மிகமிகப் பிற்போக்கான, ஆக்கிரமிப்பு ஏகாதிபத்திய வட்டாரங்களின் சூழ்ச்சி களைத் தவிடுபொடியாக்கி வருகின்றன. சோவியத் யூனியனின் அணு ஆயுத ஏவுகணை வல்லமை ஏகாதிபத்திய ஆக்கிரமிப்பாளர்களுக்குக் கடிவாளமிட்டு உலக சமாதானத்தைப் பாதுகாப்பதற்கு பாடுபட்டு வருகிறது.

மேலும் சோஷலிச நாடுகள் புரட்சிகர இயக்கத்துக்கு சர் வாம்ச தார்மிக, பொருளாயத ஆதரவு அளித்து வருகின்றன. இதில் தேவைப் படும்போது அளிக்கப்பெறும் ராணுவ உதவியும் அடங்கும்.

உதாரணமாக, போர்த்துக்கீசிய காலனிகளின் மக்கள் தமது சுதந்திரத்திற்கான போராட்டத்தில் இப்போது இதை உணர்ந்து வருகின்றனர்.

காலனி ஒழிப்பு செயல்பாடு மாற்றவொண்ணாதது என்பதை உத்தரவாதம் செய்வதன் மூலமாக, தேச விடுதலை இயக்கங்களின் முன்னேற்றத்தை உலக அரங்கிலான உலக சோஷலிச அமைப்பின் தாக்கம் ஊக்குவித்து வருகிறது.

## 11. பாட்டாளி வர்க்கத்தின் புரட்சிகர இயக்கம்

### கம்யூனிஸ்டுக் கட்சிகளின் அதிகரித்து வரும் செல்வாக்கு

முதலாளித்துவத்தின் முரண்பாடுகள் தொடர்ந்து கடுமையுறும் போது, இது, தொழிலாளி வர்க்கத்தின் முனைப்பான வர்க்கப் போராட்டத்திற்கு இட்டுச் செல்கிறது.

பயங்கரமான வேலை நிறுத்த அலை முதலாளித்துவ உலகில் வேகமாக வீசி வருகிறது. மாறி மாறி ஒவ்வொரு நாட்டிலும் இது உச்சக் கட்டத்தை அடைந்து வருகிறது. வேலை நிறுத்தங்கள், ஆர்ப்பாட்டங்கள், கண்டனக் கூட்டங்கள், அணி வகுப்புகள், மற்றும் தொழிலாளி வர்க்கத்தின திட்டமிட்ட நடவடிக்கைகள் யாவும் தனது நலன்கள் உரிமைகளுக்காகப் போராடுவதற்கான அதன் அதிகரித்த உறுதியை காட்டுகின்றன.

விசேஷ முக்கியத்துவம் வாய்ந்தது என்னவென்றால், பெரும்பாலான வேலைநிறுத்தங்களில் தொழிலாளிகள் அரசியல், மற்றும் பொருளாதாரக் கோரிக்கைகளை முன்வைத்து வருகின்றனர். ஜப்பானல் தொழிலாளி வர்க்கமும், விவசாயிகளும் தமது நாட்டை ஓர் அமெரிக்க அணு ஆயுத சோதனைத் தளமாக மாற்றுவதற்கான திட்டங்களை எதிர்த்துப் போராடி வருகின்றனர். அமெரிக்காவில் பிரஜா உரிமைகள் கோரியும் பாரபட்சம், அடக்குமுறை ஆகியவற்றைக் கண்டித்தும் அணி வகுப்புகள் நடைபெறுகின்றன; தென்கிழக்கு ஆசிய நாடுகளின் உள்நாட்டு விவகாரங்களில் அமெரிக்க ஏகாதிபத்திய தலையீட்டை ஆட்சேபித்து எதிர்ப்பு அதிகரித்து வருகிறது. 1968 வசந்த காலத்தில் பிரான்சில் பெரும் தொழிற்துறை நடவடிக்கை ஒன்று எடுக்கப்பட்டது. அப்போது 1 கோடி பேருக்குமேல் கலந்து கொண்ட பொதுவேலை நிறுத்தம் நடைபெற்றது. அடுத்த ஆண்டில் இத்தாலியில் வேலை நிறுத்த அலை வீசிற்று; இதில் 2 கோடி தொழிலாளிகள் பங்கு கொண்டனர்.

லத்தீன் அமெரிக்காவில் பாட்டாளிகளும், உழைப்பாளி மக்களின் இதர பகுதியினரும் அதிக செயலூக்கமுடன் இயங்கி வருகின்றனர். தொழிலாளி வர்க்க இயக்கத்தின் ஒரு பிரதான கோரிக்கை என்னவென்றால் வட அமெரிக்க ஏக போகங்கள் தம் நாடுகள் மீது செலுத்தி வரும் ஆதிக்கத்திற்கு முற்றுப்புள்ளி வைக்கவேண்டும் என்பதாகும்.

ஆப்பிரிக்காவில் தொழிலாளி வர்க்கம் அண்மையில் தான் தோன்றிற்று. தொழிலாளி வர்க்கம் இன்னும் சிறிய தொகையினதாயும், பல விஷயங்களில் இன்னமும் கிராமத்துடன் பிணைக்கப்பட்டதாயுமே உள்ளது. ஆப்பிரிக்கத் தொழிலாளிகளின் கலாசார வளர்ச்சி மட்டம் ஒப்பிட்டுப் பார்க்கும்போது குறைவாகவே உள்ளது; குலமரபுத் தப்பெண்ணங்கள் இன்னும் வலுவாக உள்ளன. ஏகாதிபத்திய எதிர்ப்புப் போராட்டத்தின் தலைமைச் சக்தியாக தொழிலாளி வர்க்கம் மாற்றமடைவதை இந்த அம்சங்கள் அதிகக் கடினமாக்குகின்றன. எனினும், ஜைரே, ஜாம்பியா, எகிப்து, நைஜீரியா, கானா, மொராக்கோ போன்ற பல நாடுகளில் தொழிற்சாலை, விவசாயத்துறை பாட்டாளிகள் ஒரு பெரும் சமூக சக்தியாக மாறி விடுதலை இயக்கத்தில் முக்கியமான இடம் வகிக்கின்றனர்.

உழைப்பாளி மக்களின், தொழிற்சாலை தொழிலாளிகள் இதர பகுதியினர் மென்மேலும் அதிகமான அளவில் ஸ்தாபன ரீதியாக ஒன்று திரண்டும், அரசியல் ரீதியில் போதம் பெற்றும் வருகின்றனர் என்பதை அவர்களின் பொருளாதார, அரசியல் போராட்டங்கள் காட்டுகின்றன. தொழிலாளி வர்க்க இயக்கம் அடிப்படையில் புதிய கட்டத்தை அடைந்து வருகின்றது, அதன் கோரிக்கைகளின் மட்டம் உயர்ந்து வருகிறது. இன்னும் அதிக சம்பளம், மேலும் குறைந்த வேலை நேரத்தினை வலியுறுத்துவதோடு மட்டுமின்றி மேலும் சிறந்த சமூகப் பாதுகாப்பு, ஓய்வு ஊதியத் திட்டத்திற்காகவும் மட்டுமின்றி, தொழிலாளி வர்க்கமானது உற்பத்தியின் நிர்வாகத்தில் பங்கு பெறுவதற்கான உரிமைக்காகவும், மேலும் சிறந்த கலாசார வசதிகளுக்காகவும், கல்வி அபிவிருத்திக்காகவும், மனித கௌரவத்திற்கு மதிப்பு ஏற்பட வேண்டும் என்பதற்காகவும் போராடி வருகிறது. தொழிலாளிகள் விரிவான பிரஜா உரிமைகளையும், ஜனநாயக சுதந்திரங்களையும் கோரி வருகின்றனர். இந்தப் போராட்டங்கள் ஏகபோக ஆட்சிக்கு எதிரானவை என்பதில் சந்தேகமில்லை. அவை அதன் அடித்தளங்களை ஆட்டங் காணச் செய்து, முதலாளித்துவ அமைப்பை மென்மேலும் அதிக ஸ்திரமற்றதாக்கி வருகின்றன. ஒன்றில் பிறகு மற்றொன்றில் என்று ஏதாவது ஒரு முதலாளித்துவ நாட்டில் பெரும் சமூக - அரசியல் நெருக்கடி நிலாமல் ஒரு ஆண்டு கூடக் கழிவதில்லை. இந்நிகழ்ச்சிகள் வர்க்கப் போராட்டத்தின் ஒரு புதிய கட்டத்தை முன்னறிவித்து, அதன் வாழ்விற்கே

சவால் விட்டு, அதன் கோட்டைகளிலேயே முதலாளித்துவத்தைத் தாக்கி வருகின்றன.

கம்யூனிஸ்டுக் கட்சிகள் தொழிலாளி வர்க்கப் போராட்டத்திற்குத் தலைமை தாங்குகின்றன. அவை ஏகாதபத்திய ஆளும் வட்டாரங்களின் பிற்போக்குக் கொள்கைகளை ஓய்வொழிச்சலின்றி அம்பலப்படுத்துகின்றன, சமாதானம், ஜனநாயகம், சோஷலிசத்திற்காகப் போராட சகல முற்போக்கு சக்திகளையும் ஒன்றுபடுத்துகின்றன.

எனவே தான், கம்யூனிஸ்டு இயக்கம் முன்னெப்போதும் கண்டிராத அளவில் வளர்ச்சி பெற்றது. ஏறத்தாழ 90 நாடுகளில் கம்யூனிஸ்டுக் கட்சிகள் உள்ளன. அவற்றின் மொத்த உறுப்பினர் எண்ணிக்கை 5 கோடியாகும்.

> பல முதலாளித்துவ நாடுகளில் கம்யூனிஸ்டுக் கட்சிகள் அடக்கு முறைக்கு உள்ளாக்கப்பட்டு, கம்யூனிச - எதிர்ப்புப் பிரச்சாரம் முனைப்பாக்கப்படுவதால், அவற்றின் நடவடிக்கைகளுக்கு இடர்கள் ஏற்படுகின்றன; மேலும் இவை அவற்றின் வளர்ச்சியை மந்தப்படுத்துகின்றன. பல கம்யூனிஸ்டுக் கட்சிகள் ஓரளவு மட்டுமே சட்ட பூர்வமாக அல்லது முற்றிலும் சட்ட விரோதமாக இயங்க வேண்டிய நிலைமையிலுள்ளன. எனினும், பல முதலாளித்துவ நாடுகளிலுள்ள கம்யூனிஸ்டுக் கட்சிகள் அடுத்த பல ஆண்டுகளில் வெகுஜன அமைப்புகளாக மாறுவதை நோக்கமாகக் கொண்டுள்ளன. பிரான்ஸ் (4,50 000க்கு மேற்பட்ட உறுப்பினர்கள்), இத்தாலி (15 லட்சம்), பின்லாந்து (ஏறத்தாழ 40 ஆயிரம் பேர்) ஆகியவற்றில் வெகுஜனக் கம்யூனிஸ்டுக் கட்சிகள் உள்ளன. இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சியில் ஏறத்தாழ 2·5 லட்சம் உறுப்பினர்கள் உள்ளனர். அர்ஜென்டைன கம்யூனிஸ்டுக் கட்சியில் சுமார் 1 லட்சம் உறுப்பினர்கள் இருக்கின்றனர். உருகுவே கம்யூனிஸ்டுக் கட்சியும் வேகமாக வளர்ந்து வருகிறது. ஏற்கெனவே, அதில் 40 ஆயிரத்திற்கு மேற்பட்ட உறுப்பினர்கள் உள்ளனர்.

ஆப்பிரிக்காவில் முதல் கம்யூனிஸ்டுக் கட்சி தென்னாப்பிரிக்கக் கம்யூனிஸ்டுக் கட்சியாக இருந்தது; இது 1921இல் துவக்கப்பட்டது. தென்னாப்பிரிக்க நிறவெறி ஆட்சி காரணமாக அது இப்போது தலைமறைவாகப் பணி புரிந்து வருகின்றது. தற்போது மொராக்கோ, டியூனிஷியா, அல்ஜீரியா, லெசாதோ, சூடான், ரீயூனியன் தீவு ஆகியவற்றிலும் கம்யூனிஸ்டுக் கட்சிகள் உள்ளன. இன்னும் பல நாடுகளில் மார்க்சிய அடிப்படை அமைப்புகளும், குழுக்களும் உள்ளன. கடந்த பல ஆண்டுகளில் ஆப்பிரிக்கக் கம்யூனிஸ்டுகளின் எண்ணிக்கைக் கணிசமாக அதிகரித்து விட்டது. 1939இல் ஐயாயிரம் ஆப்பிரிக்கக் கம்யூனிஸ்டுகளும், 1957இல் ஏறத்தாழ 20 ஆயிரம் பேரும், 1961 சுமார் 40 ஆயிரம் பேரும், 1969இல் 60 ஆயிரம் பேருக்கு மேலும் இருந்தனர்.

கம்யூனிஸ்டு இயக்கத்தின் வெற்றி அதிகரித்து வரும் கட்சி உறுப்பினர் எண்ணிக்கையினுல் மட்டும் அளவிடப் படவில்லை; உழைப்பாளி மக்களிடையே அதன் உறுப்பினர்களுக்கு அதிகரித்து வரும் செல்வாக்கினுலும் அளவிடப்படுகிறது. பல நாடுகளில், கம்யூனிஸ்டுகளுக்கு பல பெரும் தொழிற்சங்க சம்மேளனங்களில் கணிசமான செல்வாக்கு உள்ளது. தேர்தல்களில், மென்மேலும் அதிகமான மக்கள் கம்யூனிஸ்டுகளுக்கு வாக்களிக்கின்றனர்; இது கம்யூனிஸ்டுக் கட்சிகளின் பெருகிவரும் அரசியல் செல்வாக்கையும் காட்டுகிறது.

இப்போது, முதலாளித்துவ நாடுகளின் கம்யூனிஸ்டுக் கட்சிகள் தம் முன் வைத்துள்ள நோக்கங்களைப் பரிசீலனை செய்வோம்.

## சமாதானம், ஜனநாயகத்திற்கான போராட்டத்திற்குத் தொழிலாளி வர்க்கம் தலைமை தாங்குகிறது

கம்யூனிஸ்டுக் கட்சிகளின் இறுதி லட்சியம் முதலாளித்துவ சமுதாயத்தை மாற்றி சோஷலிச சமுதாயத்தை நிறுவி அதன் பின்னர் கம்யூனிசத்தை நிர்மாணிப்பதாகவும் தான் எப்போதும் இருந்து வந்தது, இருந்து வருகிறது. இந்நோக்கம் இன்றைய கம்யூனிச இயக்கத்தின் போர்த் தந்திரம், நடைமுறை உத்திகளை நிர்ணயிக்கிறது.

எனினும், சோஷலிசப் புரட்சியை உத்தரவு போட்டு நிறைவேற்ற முடியாது அல்லது ஏற்றுமதி செய்ய முடியாது. அவசரப்பட்டு காரியங்களைச் செய்வதும், சம்பவங்கள் எதிர்காலத்தில் நிகழும் என்று முன் கூட்டியே செயலில் இறங்குவதும் கம்யூனிஸ்டுக் கட்சிக்கும் தொழிலாளி வர்க்கத்திற்கும் இடையேயும், திண்மை மிக்க முன்னணிப் படைக்கும் புரட்சிகர ராணுவத்திற்கும் இடையே பயங்கரமான பிளவை உண்டு பண்ணக் கூடும். அரசியலில் இத்தகைய முரட்டுத் துணிச்சல் வாதம் மார்க்சிய - லெனினிய சித்தாந்தத்திற்கு முரணுனதாகும்.

ஆனுல், இதற்காக, உழைப்பாளி மக்களின் புரட்சிகர முன்னணிப் படை காத்திருந்து பார்க்கும் ஒரு போக்கைக் கடைப்பிடிக்க வேண்டும் என்பது பொருளல்ல. மாருக, அதன் ஜீவாதார நோக்கங்கள் உழைப்பாளி மக்களை ஒன்றுபடுத்துவதும், அவர்களுடைய அரசியல் உணர்வை ஊக்குவிப்பதும், அவர்களுடைய அரசியல் அமைப்பை அபிவிருத்தி அடையச் செய்வதும், சோஷலிசக் கருத்துக்களை பரப்புவதும் ஆகும். மிக மிக மோசமான சூழ்நிலைமைகளில் கூட ஒரு மார்க்சிய-லெனினியக் கட்சிக்கு எதிர்காலத்தில் முக்கியத்துவம் வாய்ந்த போராட்டங்களை நடத்துவதற்காக சக்திகளை தயார்நிலை எய்தும்படி செய்வதற்காக ஒன்று திரட்டும் ஆற்றல் படைத்ததாயிருக்கவேண்டும் என்பதை அவர்களுக்குத் தலைமை தாங்கி புரட்சிக்கு வழிகாட்டிச் செல்வதற்கான போர்த் தந்திரமும், நடைமுறை உத்திகளும் கோருகின்றன. தேசிய சுதந்திரத்திற்கான, பிரஜா உரிமைகள், சுதந்திரங்களுக்கான போராட்டத்

திலும், பாசிசம், போருக்கு எதிரான போராட்டத்திலும் இந் நோக்கத்தை வெற்றிகரமாக நிறைவேற்ற முடியும். லெனின் சுட்டிக் காட்டியதுபோல, மெய்யான ஜனநாயகத்தை நோக்கிய அரசியல் மாற்றங்கள் ஒரு சோஷலிசப் புரட்சிக்கு இட்டுச் செல்கின்றன. ''அவை அதை நெருக்கமடையச் செய்கின்றன, அதன் அடித்தளத்தை விரிவு படுத்துகின்றன, சோஷலிசத்திற்கான போராட்டத்தில் புதிய புதிய குட்டி - பூர்ஷுவா, அரை-பாட்டாளி வெகுஜனங்களை ஈர்க்கின்றன.'' எனவே, ஜனநாயகத்திற்கான போராட்டம் சோஷலிசத்திற்கான போராட்டத்தின் பிரிக்கமுடியாத பகுதியாகும்.

தற்கால முதலாளித்துவ சமுதாயத்தில், ஜனநாயகத்தின் பிரதான எதிரிகள் பெரும் ஏகபோகங்களே; இவை தம்மை மிகப் பெரும்பாலான மக்களுக்கு எதிராக முன்வைக்கின்றன. அவற்றின் ஆதிக்கத்திற்கு எதிராகக் கண்டனம் நாளும் பொழுதும் அதிகரித்து வருகிறது; மென் மேலும் அதிகமான சமுதாயக் குழுவினர் இந்த இயக்கத்தில் சேர்ந்து வருகின்றனர். பெரு முதலாளிகள் சின்னஞ்சிறு விவசாயிகளுக்கு பாதகம் விளைவிக்கின்றனர்; அவர்கள் நகர்ப்புற மத்திய தர வர்க்கத்தின் நலன்களுக்கு விரோதமாய் உள்ளனர். இக்குழுக்களின் உறுப்பினர்கள்- சிறு முதலாளிகள், வர்த்தகர்கள், கைவினைஞர்கள் சில அலுவலக ஊழியர்கள் ஆகியோர் - ஒட்டாண்டியாயினர் அல்லது ஏகபோகங்களை யும் பாங்கிகளையும் வெகுவாகச் சார்ந்திருந்தனர். இயல்பாகவே, அவர்கள் தமது நலன்களை மென்மேலும் அதிக செயலூக்கமுடன் பாது காத்து வருகின்றனர்.

தற்காலத்தில், விஞ்ஞான கலாசார வளர்ச்சியின் வேகமடைந்ததன் கல்வி, சுகாதாரப் பாதுகாப்பு ஆகியவை விஸ்தரிக்கப்பட்டதன் விளை வாக உயர் தகுதிபெற்ற தனித் தேர்ச்சி தொழிலாளர்களின் (அறிவுத் துறையினர்) எண்ணிக்கையும், செல்வாக்கும் அதிகரித்து வருகின்றன. முன்பு, முதலாளித்துவ சமுதாயத்தில் இத்தகைய தொழிலாளிகளுக்குத் தனி அந்தஸ்துக்கான பெரும் வாய்ப்புக்கள் இருந்தன. இந்த உயர் தகுதி பெற்ற சிப்பந்திகளில் பெரும்பாலோர் சமுதாயத்தில் அவர்களுக் கிருந்த அந்தஸ்து காரணமாகவும், அவர்களின் கண்ணோட்டம் காரண மாகவும் முதலாளிகளுக்கு நெருக்கமாயிருந்தனர், அவர்களின் நலன் களுக்காகப் பாடுபட்டனர். எனினும், தற்போது மென்மேலும் அதிக மான உயர் தகுதி பெற்ற தனித் தேர்ச்சியாளர்கள் கூலி சம்பாதிப்பவர் களாகவும், சம்பளம் வாங்குபவர்களாகவும் மாறி வருகிறார்கள். தொழிலாளிகளைச் சுரண்டுவதைப் போன்றே பெரு முதலாளித்துவம் அவர்களையும் ஈவிரக்கமற்ற முறையில் சுரண்டி வருகிறது; அவர்களின் நலன்கள் தொழிலாளி வர்க்கத்தின் நலன்களுடன் நெருக்கமாக இணைந்து வருகின்றன. அதிக பட்ச லாபங்களுக்கான பெரு முதலாளித்துவத்தின் முயற்சிகள் விஞ்ஞானிகள், அறிஞர்கள், கலைஞர்கள், கலாசார ஊழியர்கள், ஆசிரியர்கள் ஆகியோரின் படைப்பாற்றல் முயற்சிகளுக்கும்

உயர் அபிலாஷைகளுக்கும் தளையிட்டு வருகின்றன. முதலாளித்துவ சமுதாயத்தின் ஆன்மீக நெருக்கடி ஆழமடைய ஆழமடைய, சோஷலிசக் கருத்துக்கள் மென்மேலும் கவர்ச்சியுடையதாய் ஆக ஆக, முற்போக்கு அறிவுத்துறையினருக்கும் ஏகபோகங்களுக்கும் இடையேயான மோதல் மேலும் கடுமையாகி வருகிறது. அறிவுத் துறையினர் ஏகாதிபத்திய - எதிர்ப்புப் போராட்டத்தில் தொழிலாளிகளுடன் இணைந்து வருகின்றனர்; இம்மாற்றம் இவ்விரண்டின் நேச அணிக்குப் போதுமான வாய்ப்புக்களை அளிக்கின்றது.

மேலும், கடந்த சில ஆண்டுகளாக, முதலாளித்துவ உலகம் இளைஞர் புரட்சி என்று சொல்லப்படும் ஓர் இயல் நிகழ்வை எதிர் நோக்கி வருகிறது. ஆழமான நெருக்கடி நிறைந்த ஏகபோக - ஆட்சி சமுதாயத்தில் தமது எதிர் காலத்திற்கான வாய்ப்புக்களை இளம் தொழிலாளிகள், கல்லூரி மாணவர்கள், பள்ளி மாணவர்களால் காண முடியவில்லை எனவே அவர் மாறுதலைக் கோருகின்றனர். பற்பல சந்தர்ப்பங்களில் அவர்களுடைய எதிர்ப்பு தாமாகவே எழுகின்றன; சில சந்தர்ப்பங்களில் அவர்கள் அதி தீவிர இடதுசாரி கருத்துக்களும் உணர்வுகளும் கொண்ட போலி புரட்சியாளர்களின் செல்வாக்கின் கீழ் திரளுகின்றனர். எனினும், அவர்கள் மூச்சைத் திணறடிக்கும் நவீன முதலாளித்துவத்தின் சூழ்நிலைக்குள் வாழ விரும்பவில்லை. இவ்வாறு, இந்த இளவயதினர்கள் தொழிலாளி வர்க்க இயக்கத்திற்கும், அதன் கம்யூனிஸ்டுத் தலைமைக்குப் நெருக்கமாகக் கொணடு வருவதற்கான பொது அடிப்படை இருக்கவே செய்கிறது. இவை அவர்களுக்கு, ஏகபோகங்களின் ஆட்சிககு எதிராக எவ்வாறு வெற்றிகரமாகப் போராடுவது என்பதைக் காண்பிக்க முடியும்.

மென்மேலும் அதிகமான குழுக்கள் ஏகபோக - எதிர்ப்புப் போராட்டத்தில் சேரச் சேர, பெரு முதலாளித்துவத்தின் சமூக அடித்தளம் குறுகிக் கொண்டே வருகிறது. பிற்போக்கான உள்நாட்டு கொள்கைகளுக்கும் ஏகாதிபத்திய வாதிகளின் ஆக்கிரமிப்புத் தன்மை வாய்ந்த அயல்துறைக் கொள்கைக்கும் எதிராக ஓர் அரசியல் கூட்டணியை உருவாக்குவதற்கான முயற்சிகளை சமுதாயத்தின் சகல ஜனநாயக சக்திகளும், பகுதிகளும் ஒன்றிணைப்பதற்குச் சாதகமான நிலைமைகள் உருவாகி வருகின்றன. கம்யூனிஸ்டுக் கட்சிகள் இம்முறையில் முற்போக்கு சக்திகளை ஒன்றுபடுத்துவதற்காகவும், அவற்றை ஓர் ஏகபோக - எதிர்ப்புக் கூட்டணியாக கெட்டிப்படுத்துவதற்காகவும் பாடுபடுவதில் செயலூக்கம் காட்டுகின்றன.

ஜனநாயக இயக்கத்தில் தொழிலாளி வர்க்கம் தலைமைப் பாத்திரம் வகிக்கின்றது. அது பாசிச அபாயத்தைத் தடுத்து நிறுத்தி, முதலாளித்துவ சமுதாயம் அனுமதித்துள்ள வழக்கமான ஜனநாயக சீர்த்தருத்தங்களின் கட்டமைப்புக்கு, அப்பால் செல்லும் மாறுதல்களைச் சாத்தியமாக்க முடியும்; இது, சோஷலிசப் புரட்சியின் வெற்றிக்காக போராடு

வதை சுலபப்படுத்துகிறது. தனது லட்சியங்களுக்கு ஆதரவாக மிகப் பெரும்பாலான மக்களை ஈர்ப்பதன் மூலமாக சமாதான பூர்வமான சோஷலிச மாற்றத்திற்கான வாய்ப்புக் குறித்த தமது முடிவுக்கு இந்த அம்சத்தைத்தான் கம்யூனிஸ்டு, தொழிலாளர் கட்சிகள் அடிப்படையாகக் கொண்டுள்ளன. இது சாதனையாகும் போது, ஏகபோக முதலாளிகள் அரசியல் ரீதியில் தனிமைப்படுத்தப்படுகின்றனர்; மேலும் அடிப்படை ஜனநாயக மாறுதல்கள், சோஷலிசத் திசையில் சமூகத்தின் உறவுகள் அமைப்பு முழுவதும் மரு உருவாக்கப்படுவதற்கான அவசியத்திற்கு இட்டுச் செல்லும் முறையில் நிறைவேற்றப்படுகின்றன.

எனினும், மக்களுக்கு எதிராகச் சுரண்டும் வர்க்கங்கள் வன்முறையில் இறங்கும்போது ஆயுதந்தாங்கிய போராட்டத்தின் மூலமான சோஷலிசத்திற்கான மாற்றம் தவிர்க்க முடியாததாகும்.

மார்க்சிய - லெனினியக் கட்சிகள் மார்க்சிய - லெனினியச் சித்தாந்தத்தை படைப்பாற்றல் ரீதியில் வளர்த்து வருகின்றன. அவை, ஒவ்வொரு கட்டத்திலும் உலகக் கம்யூனிஸ்டு இயக்கத்தின் போர்த் தந்திரம், நடைமுறை உத்திகளை வகுத்து வருகின்றன; மேலும் அவை திருத்தல் வாதிகள், வரட்டுத் தத்துவ வாதிகள் மற்றும் வலது சாரி, ''இடது'' சாரி சந்தர்ப்ப வாதிகளையும் மூர்த்தண்யமாக எதிர்க்கின்றன. வலது சாரி சந்தர்ப்பவாதம் என்பது கம்யூனிச இயக்கத்தில் ஒரு போக்கு ஆகும். பல காரணங்களால் அதன் ஆதரவாளர்கள் எதார்த்தமாயும் முதலாளித்துவத்திற்குப் புகழ்பாடுபவர்களாகவும் பல சந்தர்ப்பங்களில் வக்காலத்து வாங்குபவர்களாக மாறுகின்றனர்; அதாவது தொழிலாளி வர்க்கம் இதர உழைப்பாளி மக்களின் வர்க்க விரோதிகளுடன் சமரசம் செய்து கொள்கின்றனர், ''இடது'' சாரி சந்தர்ப்பவாதம் சம்பந்தப்பட்டமட்டிலும், அது புரட்சிகர அதி தீவிர வாதத்தில் பிரதிபலிக்கின்றது; மேலும் அது சோஷலிசப் புரட்சிக்கான எவ்விதத் தயாரிப்பின் அவசியத்தையும் முற்றிலும் புறக்கணிக்கிறது. ''இடது'' சாரி சந்தர்ப்ப வாதிகள் ஆயுதந்தாங்கிய நடவடிக்கை, வன்முறை மீது முழு நம்பிக்கையையும் வைத்திருக்கின்றனர். முதன் முதலில் பார்க்கும்போது இந்த இரு போக்குகளும் இரு துருவங்களைப் போலத் தோன்றினாலும், உண்மையில் அவை இரண்டும் மார்க்சியத்தை எதிர்ப்பதில் ஒன்றுபடுகின்றன. அவற்றுக்கு அதே குட்டி - பூர்ஷுவா பூர்வீகமே உள்ளது.

சகல வகைப்பட்ட சந்தர்ப்பவாதத்திற்கு எதிரான ஒரு முரணற்ற போராட்டம் கம்யூனிஸ்டுக் கட்சிகளின் பணியின் ஒரு முக்கியமான பகுதியாகும்.

கம்யூனிஸ்டுக் கட்சிகள் தமது வேலைத் திட்டங்களில், வெளி நிலைமைகள், தமது சொந்த நாடுகளின் குறிப்பிட்ட நிலைமை ஆகிய இரண்டையும் முழுமையாக பகுப்பாய்வு செய்வதன் அடிப்படையில் குறுகிய - காலம், நீண்ட - காலம் ஆகிய இரண்டுக்குமான நோக்கங்களை வகுத்தளிக்கின்றன. இயல்பாகவே, நிலைமைகள் நாட்டுக்கு நாடு மாறுவதால், அவற்றின் நடவடிக்கைக்கான வேலைத் திட்டங்களும் முழுவதும் ஒன்றிணைவதில்லை, எனினும், சகல கம்யூனிஸ்டுக் கட்சிகளும் தொழிலாளி வர்க்க ஒற்றுமையை முதற்கடமையாக முன்வைத்து பாடுபடுவதில் ஒன்று பட்டுள்ளன.

## தொழிலாளி வர்க்கத்தின் ஒற்றுமை அதன் வெற்றிக்கு உத்தரவாதம் அளிக்கிறது

சோஷலிசக் கட்சிகளும், சமூக - ஜனநாயகக் கட்சிகளும் முதலாளித்துவ நாடுகளில் தொழிலாளி வர்க்கத்தின் ஒரு குறிப்பிட்ட பகுதியினரிடையேயும், இதர பல குழுவினரிடையேயும் வலுவான செல்வாக்கைப் பெற்றுள்ளது. அவை, தேர்தல்களில் ஏராளமான வாக்குகளைப் பெறுகின்றன, பாராளுமன்றத்தில் கணிசமான எண்ணிக்கையுள்ள இடங்களைப் பெறுகின்றன; மேலும், பல நாடுகளில் அவற்றின் பிரதிநிதிகள் அரசாங்கத்திற்குத் தலைமை தாங்குகின்றனர்.

வலது சாரி சமூக - ஜனநாயக வாதத் தலைவர்கள் பல்வேறு சீர்த்திருத்தவாதக் கொள்கைகளை முன்வைத்து மார்க்சியத்தை எதிர்க்கின்றனர். இந்தக் கொள்கைகள் சில சீர்த்திருத்தங்களைக் கோரும் அதே வேளையில், அவை, தனியார் சொத்துடமை ஒழிக்கப்படுவதையும், சுரண்டலுக்கு முற்றுப்புள்ளி வைக்கப்படுவதையும் — இவைதான் முதலாளித்துவத்தின் அடிப்படை — கோரத் தவறுகின்றன.

வலது-சாரி சோஷலிஸ்டுகள் அதிகாரத்திற்கு வந்தபோது, முதலாளித்துவத்திலிருந்து படிப்படியாக சோஷலிசத்திற்கு மாறுவதற்கான அவர்களது திட்டங்களை நிறைவேற்றுவதற்கான சகல வாய்ப்புக்களும் இருப்பதாகத் தோன்றக் கூடும். ஆனால், சீர்திருத்தவாதம் ஒரு தோல்வி என்பதற்கு அவர்களுடைய நடவடிக்கைகள் மேலும் ஒரு சான்றாகும். வலதுசாரி சோஷலிஸ்டுகள் (சமூக-ஜனநாயக வாதிகள் இத்தியாதி) எந்த ஒரு நாட்டிலும் கூட சோஷலிசத்தை ஒரு போதும் கட்டவில்லை.

தொழிலாளிகள் இரு வழிகளை—சீர்திருத்தவாதப் பாதையையும் புரட்சிகரப் பாதையையும் ஒப்பிட்டுப் பார்க்கும் போது, கம்யூனிஸ்டுகள் சரியாகவே இருக்கின்றனர் என்பதை அவர்கள் தெளிவாகக் காண்கின்றனர். தொழிலாளி வர்க்க இயக்கத்தின் அனுபவமும், சந்தர்ப்பவாதப் போக்குகள் பற்றிய கம்யூனிஸ்டுகளின் உறுதி மிக்க விமர்சனமும் சீர்திருத்தவாத முகாமினுள் நெருக்கடியை முனைப்பாக்குகின்றன.

இதன் விளைவாக, சமூக ஜனநாயகக் கட்சிகளினுள் பல முக்கிய போக்குகள் வளர்ந்து வருகின்றன. இம்மாற்றம் அவற்றின் தலைவர்களின் நிலையையும் பாதிக்கின்றன. அவர்களில் பெரும்பாலோர் சீர்திருத்தவாதத்தை உடும்புப் பிடியாகப் பிடித்துக் கொண்டு முதலாளித்துவ வர்க்கத்தின் நலன்களுக்கு விசுவாசமாய் இருக்கின்றனர். ஆனால். சிலர் சமாதானம், முன்னேற்றத்திற்கான போராட்டத்தில் தொழிலாளிகளின் பொருளாதார, சமுதாயக் கோரிக்கைகளைக் கணக்கில் எடுத்துக் கொள்ளும் மனப்பான்மை கொண்டவர்களாயிருக்கின்றனர். சமூக-ஜனநாயகக் கட்சிகளினுள் உள்ள இடதுசாரி சக்திகள், ஏகாதிபத்திய-எதிர்ப்புப் போராட்டத்தின் பொது முன்னணியில் சோஷலிஸ்டுகளும், சமூக-ஜனநாயக வாதிகளும் தமது இடத்தை பெறுவதற்கு வழி வகுப்பதற்காக முயன்று வருகின்றன. தொழிலாளி வர்க்கத்தின் நலன்களைப் பாதுகாப்பதில் சகல கட்சிகளிலும் மிக மிக முன்பின் முரணற்று விளங்குகின்ற கம்யூனிஸ்டுக் கட்சிகளுக்கு நெருக்கமாக வருவது தான் இவ்வாறு செய்வதற்கான ஒரே வழியென்பதை மேலும் அதிக தொலைநோக்குடைய சமூக-ஜனநாயகவாதத் தலைவர்கள் உணர்ந்து வருகின்றனர்.

தொழிலாளி வர்க்க இயக்கத்தின் ஒற்றுமைக்குக் கம்யூனிஸ்டுகள் பாடுபட்டு வருவதால், அவர்கள், ஒரு குறுகிய காலவாய்ப்பு என்ற வகையில் முற்போக்கு ஜனநாயக ஆட்சிகளை நிலைநாட்டுவதற்காகவும், பின்னர் ஒரு சோஷலிச அரசை நிர்மாணிப்பதற்காகவும் சோஷலிஸ்டுகளுடனும், சமூக-ஜனநாயக வாதிகளுடனும் ஒத்துழைப்பை வலியுறுத்துகின்றனர். இந்த ஒத்துழைப்பை ஏற்படுத்துவதற்குக் கம்யூனிஸ்டுகள் தப்மால் இயன்றதனைத்தையும் செய்து வருகின்றனர். எனினும், இவ்வழியில் ஏதாவது முன்னேற்றம் ஏற்பட வேண்டுமானால், அதற்கு சமூக-ஜனநாயகவாதிகள் முதலாளிகளுடனான தமது வர்க்க ஒத்துழைப்புக் கொள்கையை முடிவுக்குக் கொண்டு வந்து, சமாதானம், ஜனநாயகம், சோஷலிசத்திற்கான போராட்டத்தில் ஓர் உறுதியான நிலையைக் கடைப்பிடிக்க வேண்டும். தெளிவற்ற போக்கு, தயக்கங்கள், முரண்பாடுகள், ஆகியவை எப்போதுமே சமூக ஜனநாயக வாதிகளின் குணாம்சமாக இருந்து வந்திருப்பதால், தொழிலாளி வர்க்க இயக்கத்தின் ஒற்றுமைக்கான பாதை சுலபமாக இருக்கும் என்று எதிர்பார்க்க முடியாது. பல இடர்களை வென்றாக வேண்டும்; இதில் பல ஏமாற்றங்கள் ஏற்படக் கூடும். எனவே இத்திசையில் கம்யூனிஸ்டுகள் கடுமையாக உழைத்தாக வேண்டும். ஆனால் இவ்வேலை அவசியமாகும்.

முதலாளித்துவம் தொழிலாளி வர்க்கத்தினுள் பிளவு ஏற்படுவதின் காரணமாகவே பெரும்பாலும் உயிர் வாழ்கிறது என்று கூறுவது மிகைபாடல்ல. தொழிலாளி வர்க்க ஒற்றுமை அதிகரிக்க அதிகரிக்க அது சோஷலிசப் புரட்சி ஏற்படுவதைத் துரிதப்படுத்தி முதலாளித்துவம் வீழ்ச்சியை நெருங்குமாறு செய்கிறது.

# 12. தேச விடுதலை இயக்கங்கள்

## காலனியாதிக்கத்தின் வீழ்ச்சி

தேச விடுதலை இயக்கங்கள் முதலாளித்துவ ஒடுக்குமுறை அமைப்பின் அடித்தளங்கள் மீது கடும் தாக்குதல்களைத் தொடுத்து வருகின்றன.

முதலாளித்துவ அமைப்பபே முற்றிலும் பழியேற்க வேண்டிய காலனி யாதிக்கமானது மனித குலத்திற்கு ஓர் அவமானமாகும். இந்த அமைப்புத்தான் விரல் விட்டு எண்ணத்தக்க ஒரு சில ஏகாதிபத்திய வல்லரசுகள் உலக மக்களின் மிகப் பெரும் பகுதியை அடிமைப்படுத்து வதற்கு வகை செய்தது.

ரஷ்யாவில் 1917ல் நடைபெற்ற சோஷலிசப் புரட்சிதான் கிழக்குலக மக்களை விழிப்புறச் செய்து, தம்மை ஒடுக்குபவர்களை எதிர்த்துப் போராடுவதற்கு உத்வேகமூட்டியது. இரண்டாவது உலகப் போரில் நாஜி ஜெர்மனியும் ராணுவாதிக்க ஜப்பானும் தோற்கடிக்கப்பட்டதற்குப் பின்னர், இந்தப் போராட்டம் மிகவும் தீவிர மடைந்தது. சீனமக்களும், கொரிய மக்களும் வியத்நாம் மக்களும் தம்மை ஒடுக்கி வந்தவர்களை வெளியேற்றி, சோஷலிசத்தைக் கட்டத் தொடங்கிய போது அவர்களின் வெற்றி காலனி அமைப்புக்கு ஒரு பேரிடியாய் அமைந்தது. இந்தியா, இந்தோனேஷியா, பர்மா, மற்றும் பல ஆசிய நாடுகளும் தமது சுதந்திரத்தை வென்றன. கோல்டு கோஸ்ட் (கானு) 1957 மார்ச் மாதத்தில் தனது சுதந்திரத்தைப் பிரகடனம் செய்தது. வெப்ப மண்டல ஆப்பிரிக்காவில் இவ்வாறு சுதந்திரப் பிரகடனம் செய்த முதல் காலனி இதுவேயாகும். ஆப்பிரிக்க நாடு களின் வாழ்வில் 1960 ஆம் ஆண்டு ஒரு சிறப்பிடத்தை வகிக்கிறது. வரலாற்றில் ''ஆப்பிரிக்க ஆண்டு'' என்று இது பெயர் பெற்றுள்ளது, இந்த ஆண்டில் அக்கண்டத்தில் ஏறத்தாழ 8 கோடி 50 லட்சம் மக்களைக் கொண்ட 17 நாடுகள் காலனியாதிக்கத் தளைகளை முறித் தெறிந்தன.

தற்போது ஆப்பிரிக்கக் கண்டத்தில் 41 சுதந்திர நாடுகள் உள்ளன. சுமார் 30 கோடி ஆப்பிரிக்க மக்கள் பிரிட்டிஷ், பிரெஞ்சு, பெல்ஜிய, ஸ்பானிய காலனியாதிக்க வாதிகளிடமிருந்து தங்களை விடுவித்துக் கொண்டுள்ளனர். 1917ஆம் வருட சோஷலிசப் புரட்சியானது ஏகாதி பத்திய அணியை உடைத்துக் கொண்டு சகல நாடுகளுக்கும் விடுதலைக் கான பாதையைத் திறந்து விட்டதிலிருந்து உலகப் படம் எவ்வாறு மாற்றமடைந்துள்ளது என்பதைக் கீழ்வரும் அட்டவணை காட்டுகிறது.

அடிமையாக்கப்பட்டிருந்த காலனிகள்,

| அரைக் காலனிகள், 1919 ல் | டொமினியன்கள்: 1968 ல் |
| --- | --- |
| 9·78 கோடி சதுர கிலோ மீட்டர் (உலக நிலப்பரப்பின் 72·/.) | ·53 லட்ச சதுர கிலோ மீட்டர் (உலக நிலப்பரப்பில் 3·9 ·/.) |
| மக்கட் தொகை: 123·5 கோடி (மொத்த உலக மக்கட் தொகையில் 69·4 ·/.) | (மக்கட் தொகை: 3·78 கோடி (மொத்த உலக மக்கட் தொகையில் 1·1 ·/.) |

காலனியாதிக்கத்தின் வீழ்ச்சியானது வரலாற்றில் ஒரு மைல் கல்லாகும். இது. உலக சோஷலிச அமைப்பு தோன்றியதற்கு அடுத்த முக்கியத்துவமுள்ளதாகும், முதலாளித்துவத்தின் பொது நெருக்கடியை தீவிரமாக உக்ரப்படுத்தும் பிரதான அம்சங்களில் ஒன்ருகும் இது.

## தேச விடுதலைப் புரட்சிகள்

காலனிகளில் உள்ள ஒடுக்கப்பட்ட மக்கள் தமது பலம் முழுவதையுங் கொண்டு நெடுகிலும் ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப் போராடி வந்துள்ளனர். எனினும், கடந்த காலத்தில், காலனியாதிக்க வாதிகள் அதிக பலமுள்ளவர்களாயிருந்தனர், சகல எழுச்சிகளையும் ஈவிரக்கமின்றி அடக்கி ஒடுக்கினர். உலக சோஷலிச அமைப்புத் தோன்றிய பிறகே, ஏகாதிபத்தியவாதிகள் உலகில் தமது ஆதிக்க நிலையை என்றென்றைக்குமாக இழந்தனர், ஒடுக்கப்பட்டவர்களின் வெற்றி சாத்தியமாயிற்று. இக்காலத்தில் தேச விடுதலைப் புரட்சிகள் ஒரே உலகப் புரட்சிகர நிகழ்ச்சிப் போக்கின் பகுதியே யாகும். முன்னுள் ஒடுக்கப்பட்ட மக்களின் விடுதலைப் போராட்டமானது இன்றைய பிற இரு பிரதான புரட்சிகர சக்திகளாகிய உலக சோஷலிச அமைப்பு, முதலாளித்துவ நாடுகளிலுள்ள தொழிலாளி வர்க்க இயக்கம் ஆகியவற்றின் நடவடிக்கைகளுடன் நெருக்கமாகத் தொடர்புடையதாகும்.

தேசிய-விடுதலைப் புரட்சிகள் வளர்ச்சியுற்று வருகின்ற புதிய சூழ்நிலைமைகள் அவற்றின் தன்மை, உந்து சக்திகள், வருங்கால வாய்ப்புகள் ஆகியவற்றின் மீது செல்வாக்குச் செலுத்துகின்றன. பொதுவாக முன்னுள் காலனிகளும் அரைக்காலனிகளும் உடனடியாக சோஷலிசத்திற்கு மாறிச் செல்வதற்குத் தேவையான பொருளாயத அல்லது சமூக நிலைமைகளைப் பெற்றிருக்கவில்லை. எனவே, தேச விடுதலைப் புரட்சிகளெல்லாம் சோஷலிசப் புரட்சிகளல்ல. ஆனுல் அவை பூர்ஷுவாப் புரட்சிகளுமல்ல. அவை ஏகாதிபத்திய - எதிர்ப்பு, தேசிய ஜனநாயகப் புரட்சிகளாகும்; அவற்றின் முதலாவது கோரிக்கை சுதந்திரம், இரண்டாவது, உழைப்பாளி மக்களின் நலன்களுக்கான ஜனநாயக சீர்திருத்தங்கள். அவற்றின் முன்னேற்றம் தேச விடுதலை இயக்கத்தில் வர்க்க சக்திகளின் சமநிலையையும், போராட்டத்தையும் பொறுத்ததாகும்.

ஒரு தேச விடுதலைப் போராட்டம் வழக்கமாக சமூக சக்திகளின்- சாதாரண குடிமக்களையும் ராணுவத்தினரையும் சேர்ந்த அறிவாளிகள், புதிய தொழிலாளி வர்க்கம், விவசாயிகள், நகர்ப்புற குட்டி-பூர்ஷுவாக்கள், பொதுவாக தேசிய பூர்ஷுவா வர்க்கத்தின் தேச பக்தி மனோபாவமுள்ள பகுதிகள் ஆகியவற்றின் ஒரு பரந்த கூட்டணியைக் கொண்டதாக இருக்கிறது. இந்தக் கூட்டணியின் அரசியல் தலைமை தான் முக்கியமானது.

குறிப்பிடத்தக்க முறையில், ஒரு தேச விடுதலைப் புரட்சியானது, போர்க்குண மிக்க தொழிலாளி வர்க்க சக்திகளையும் மக்களின் போராட்டத்திற்குத் தலைமை தாங்க வல்ல கம்யூனிஸ்டுக் கட்சிகளையும் கொண்ட நாடுகளில் ஒரு சோஷலிசப் புரட்சியாக வளர்ச்சியுறலாம். ஆனல் தொழிலாளி வர்க்கம் இல்லாத, அல்லது, அது பலவீனமாயிருக்கும் நாடுகளில் புரட்சிகர ஜனநாயகக் கட்சிகள், சோஷலிச உதாரணத்தின் செல்வாக்கின் கீழ் தேச விடுதலைப் புரட்சியை வெற்றிகரமாக வழி நடத்த முடியும். இந்தக் கட்சிகள் ஸ்தல முற்போக்கு அறிவாளிகள், அலுவலக ஊழியர்கள், ராணுவ வட்டாரங்கள் ஆகியோரால் அமைக்கப் படுகின்றன. இந்த நாடுகளில் புரட்சியானது, அதிக சிக்கலான வழி யில் வளர்ச்சியுற்றாலும் கூட, ஒரு சோஷலிசத் திசைவழியையும் கொண் டுள்ளன. ஆனல் எங்கெங்கு முதலாளித்துவ நபர்கள் தலைமையில் இருக்கிறார்களோ, அங்கெல்லாம் தேச விடுதலைப் பிரச்சினைகளும், நிலப் பிரபுத்துவத்தை வீழ்த்துவதைப் பூர்த்தி செய்வதும் அரை-குறை நடவடிக்கைகள் மூலமாகவும், முன்னுக்குப் பின் மாறுபட்ட முறை யிலுமே சமாளிக்கப்படுகின்றன. இத்தகைய நாடுகள் புரட்சியை முதலாளித்துவக் கட்டமைப்போடு மட்டுப்படுத்திக் கொள்ளும் ஒரு போக்கைக் காண்பிக்கின்றன.

எனவே, இதன் விளைவாக, விடுதலை இயக்கத்தின் தலைமைப் பிரச்சினை அரசியல் சுதந்திரத்தை வென்றதற்குப் பின்னர் மிகவும் முக்கியமானதாகிறது.

## போராட்டம் தொடர்ந்து நடைபெறுகிறது

காலனி அமைப்பு வீழ்ச்சியடைந்திருப்பதானது காலனியாதிக்கம் பூரணமாக மறைந்து விட்டதைக் குறிக்காது. ஏகாதிபத்தியவாதிகள் காலனிகள் மீது தங்களுக்கு உள்ள பிடிப்பை விட்டுக் கொடுப்பதற்கு மறுக்கின்றனர், புதிதாக-விடுதலை அடைந்த நாடுகளில் தங்களது கொள்ளையைத் தொடர்ந்து நடத்திச் செல்வதற்கு புதிய, முன்னிலும் நாசூக்கான வழிமுறைகளைக் கையாளுகின்றனர்.

ஒரு முதல் நடவடிக்கையாக ஏகாதிபத்திய வல்லரசுகள், இளம் நாடுகளில், காலனியாதிக்கக் கொள்கை வழியை அட்டியின்றிக் கடைப் பிடிப்பார்கள் என்று நம்பத்தக்க, தமக்குத் தலைவணங்கும் சேவகர்களை அதிகாரத்தில் அமர்த்துவதற்கு முயல்கின்றனர். இவ்வாறு செய்வதில்

அவர்கள் வெற்றியடையும் இடங்களில், சுதந்திரப் பிரகடனமானது மக்களின் வாழ்க்கையில் எத்தகைய மாற்றத்தையும் கொண்டு வருவதில்லை.

இரண்டாவது உலகப் போர் முதற்கொண்டு ஏகாதிபத்தியவாதிகள், முன்னுள் காலனிகளில் ஏகாதிபத்திய ஆதிக்கத்தை அப்படியே நிலைநிறுத்தும் நோக்கத்துடன் அவற்றை ஆக்கிரமிப்புக் கூட்டணிகளில் ஈர்ப்பதற்கு முயற்சி செய்து வருகின்றனர். உதாரணமாக, அமெரிக்கா, ''கம்யூனிசத்திற்கெதிரான தற்காப்பு'' என்ற சாக்குப் போக்கின்கீழ், புதிதாக விடுதலை அடைந்த பல, நாடுகளில் பரவலான ராணுவ தளங்களைக் கட்டியுள்ளது, தனது படைகளையும், ஆலோசகர்கள் என்று கூறப்படுபவர்களையும் அங்கு அனுப்பியுள்ளது, நடைமுறையில் அவற்றின் மீது தனது ஆட்சியை நடத்தி வருகிறது.

ஆனால், முன்னுள் காலனிகள்மீது ஏகாதிபத்தியவாதிகள் தமது அரசியல் பிடிப்பை நீடித்து வைத்துக் கொள்வதில் தோல்வியுறும்போது கூட, அவர்கள், அந்நாடுகளின்மீது தொடர்ந்து ஒரு பலமான பொருளாதாரப் பிடிப்பை வைத்துக் கொண்டு வருகின்றனர், மக்களைச் சுரண்டுவதன் மூலம் பெரும் லாபங்களைத் தொடர்ந்து அடைந்து வருகின்றனர். வளர்முக நாடுகளைச் சுரண்டுவதன் மூலமாக மேலைய ஏகபோக முதலாளிகள் ஆண்டுதோறும் அடையும் லாபம் பல நூறு கோடி டாலர்களாகிறது. புறவடிவில் அரசுரிமை படைத்தவையாயுள்ள வளர்முக நாடுகளின்மீது இவ்வாறு புதிய வடிவத்தில் அரசியல், பொருளாதார ஆதிக்கம் செலுத்துவதற்கு நவீன-காலனியாதிக்கம் என்று பெயரிடப்பட்டுள்ளது. வரலாற்று ரீதியில் பார்க்கும்போது, தேச விடுதலை இயக்கத்தின் தாக்குதல்களின் முன்னே பின்வாங்கும்படி நிர்ப்பந்தத்திற்குள்ளாகியுள்ள ஏகாதிபத்தியமே நவீன-காலனியாதிக்கமாகும்.

எனவே, பழைய மற்றும் புதிய வடிவங்களிலான காலனியாதிக்கத்திற்கு எதிரான போராட்டமானது இன்னும் முடிவடையவில்லை. ஏகாதிபத்தியவாதிகளின் பொருளாதார ஆதிக்கப் பிடியிலிருந்து தப்பித்துக் கொள்வதற்கும், தமது தேசிய செல்வம் கொள்ளையடிக்கப்படுவதற்கு முற்றுப்புள்ளி வைப்பதற்கும் இளம் நாடுகளுக்கு உள்ள ஒரே வழி தமது சொந்தத் தொழில்களைக் கட்டியமைத்துக் கொள்வதும், தமது சொந்த நிபுணர்களைப் பயிற்றுவிப்பதும், முதலாளித்துவ ஏகபோகங்களை வெளியேற்றுவதும்தான். இந்த நாடுகளை எதிரிடும் மிகப்பெரிய பிரச்சினை, அவர்களின் பொருளாதாரப் பின்தங்கிய நிலைமையைப் போக்குவதும், தமது சொந்த சுதந்திரமான பொருளாதாரங்களைக் கட்டியமைப்பதுமாகும்.

நவீன காலனியாதிக்கமானது ஆப்பிரிக்க, ஆசிய, லத்தீன் அமெரிக்க நாடுகளில் பொருளாதார ஊடுருவல் நடத்தப்படுவதோடும், அவற்றின்

மீது ஆதிக்கம் செலுத்துவதோடும் முடிந்து விடுவதில்லை. ஏகாதிபத்திய வல்லரசுகளின் இந்தக் கொள்கையில் இந்தோ—சீனுவிலும், ஜய்ரேவிலும் ராணுவத் தலையீடு, ஆட்சியிலுள்ள அரசுகளை பிற்போக்குச் சக்திகளின் மூலம் கவிழ்ப்பது, நைஜீரியாவைத் துண்டு போடுவதற்கான சூழ்ச்சித் திட்டங்கள், தென் ஆப்பிரிக்காவிலும், ரொடீசியாவிலும் உள்ள பிற்போக்கு ஆட்சிகளுக்கு ஆதரவு, நாடுகளுக்கு இடையே தகராறுகளைத் தூண்டி விடுவது, பூர்வ குடிகளுக்கு இடையே பகைமைக்கு தூபம் போடுவது, சித்தாந்த ரீதியில் குழிபறிப்புகள் ஆகியவையும் உள்ளிட்டதாகும்.

முன்னாள் காலனிகளின் மக்கள் தமது சுதந்திரத்தை பலப்படுத்திக் கொள்வதற்குப் போராடும்போது, அவர்களுக்கு சோவியத் யூனியனும் பிற சோஷலிச நாடுகளும் உறுதியாக ஆதரவளிக்கின்றன. உதாரணமாக, எகிப்தில் அஸ்வான் உயர் அணையையும், இந்தியாவில் பிலாயில் ஒரு பெரிய உருக்காலையைக் கட்டுவதற்கும் சோவியத் யூனியன் உதவியுள்ளது. இந்தியா, பர்மா, ஆப்கானிஸ்தானிலும், சில ஆப்பிரிக்க நாடுகளிலும், வேறு பல நாடுகளிலும் ஆலைகள், சாலைகள், மருத்துவமனைகள், கல்லூரிகள் கட்டுவதற்கும் சோவியத் யூனியன் உதவி வருகிறது. மாஸ்கோவிலுள்ள பாட்ரிஸ் லுமும்பா மக்கள் நட்புறவுப் பல்கலைக் கழகத்திலும் மற்றும் பல சோவியத் பல்கலைக் கழகங்களிலும், கல்லூரிகளிலும் பல இளம் இந்தியர்களும், கினியா தேசத்தவரும், அரபுகளும், சோமாலிய நாட்டவரும், மற்றும் உலகெங்குமிருந்து வந்துள்ள மாணவர்களும் பயில்கின்றனர். அவர்கள் தமது படிப்பை முடித்து, அவரவர்கள் தேர்ந்தெடுத்துள்ள துறைகளில் நிபுணர்களாகும்போது, அவர்கள் தமது சொந்த நாடுகளுக்கு நன்மை கிட்டும் முறையில் தமது அறிவைப் பயன்படுத்துவார்கள்.

விடுதலை பெற்ற நாடுகள் இன்னும் பல இடர்ப்பாடுகளை சமாளித்து, பல சிக்கலான பிரச்சினைகளுக்குப் பரிகாரம் காண வேண்டியுள்ளது. இதற்கிடையில், சுதந்திரத்திற்கான போராட்டம் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டேயிருக்கும்போது, பொதுவான விரோதியாகிய ஏகாதிபத்தியத்தை எதிர்த்து பல்வேறு வர்க்கங்களும், சமூகக் குழுக்களும் ஒன்றுபட்டு வேலை செய்து வருகின்றன, எனினும், சுதந்திரம் வென்றெடுக்கப்பட்டவுடனே, எதிரெதிரான வர்க்க நலன்கள் முன்னணிக்கு வருகின்றன. ஒருபுறத்தில் தொழிலாளி வர்க்கம், விவசாயிகள், பிற ஜனநாயகப் பகுதிகளுக்கும் மறுபுறத்தில் ஸ்தலப் பிற்போக்கு சக்திகளுக்கும் இடையேயான மோதல் மென்மேலும் கடுமையாகிறது. மக்கள் வென்றுள்ள சுதந்திரத்தை ஸ்தல முதலாளிகள் தமது சொந்த நோக்கங்களுக்காகப் பயன்படுத்திக் கொள்ள முனைகின்றனர். தங்களது அதிகாரத்தை நிலைநாட்டுவதற்கான முயற்சிகளில் அவர்கள் மக்களுக்கு பாதகமான முறையில் ஏகாதிபத்தியவாதிகளுடனும் நிலப்பிரபுக்களுடனும் பேரம் பேசுவதற்குத் தயங்குவதில்லை.

இதற்கிடையில், முதலாளித்துவப் பாதையைக் கடைப்பிடிக்கும் நாடுகளது அனுபவமானது, விடுதலை அடைந்த நாடுகளின் பிரச்சினைகளை முதலாளித்துவத்தினுல் தீர்க்க முடியாது என்பதைக் காட்டுகிறது. அது மக்களுக்கு அதிகமான துன்ப துயரங்களையும், வறுமையையுமே ஏற்படுத்துகிறது, அவர்கள் தமது அதிருப்தியைத் தெரிவிக்கும்போது, ஸ்தலப் பிற்போக்காளர்கள் அடக்குமுறைகளைக் கையாளுகின்றனர், ஜனநாயக சுதந்திரத்தை ஒடுக்குகின்றனர். அவர்கள் பழங்குடி மற்றும் மதப்பூசல்களைக் கிளப்பி விடுகின்றனர், ஏகாதிபத்திய-எதிர்ப்புக் கூட்டணியை உடைப்பதற்குத் தங்களாலான எல்லா முயற்சியும் செய்கின்றனர்; இவ்வாறு தேசவிடுதலைப் புரட்சியின் ஆதாயங்களுக்கு அபாயமேற்படுத்துகின்றனர்.

லெனினுடைய நூல்கள் தான் விடுதலையடைந்த நாடுகளுக்கு முன்னேறுவதற்கான வழியைக் காட்டின. உதாரணமாக, அவர் தனது நூல்களில் ஒன்றில் இவ்வாறு எழுதினர்: "..தற்போது விடுதலைப் பாதையில் அடியெடுத்து வைத்துள்ள பின்தங்கிய நாடுகளுக்கும், யுத்தத்திற்குப் பின்னர் சுபீட்சத்தை நோக்கி ஓரளவு முன்னேற்றம் கண்டுள்ள நாடுகளுக்கும் முதலாளித்துவக் கட்ட பொருளாதார வளர்ச்சி தவிர்க்க முடியாதது என்று அறுதியிட்டுக் கூறுவதை சரியானது என்று நாம் கருதலாமா? சரியல்ல என்று நாம் பதிலளித்தோம்." [1]

சோஷலிச நாடுகளின் அனுபவமானது, முன்னுள் காலனிகளது, அரைக்காலனிகளது மக்களுக்கு தேசிய மறுமலர்ச்சிக்கும், சமூக முன்னேற்றத்துக்குமான நெடுஞ்சாலையைக் காட்டுகிறது. ஆனுல் அதில் காலெடுத்து வைத்து, அதைத் தொடர்ந்து கடைப்பிடித்துச் செல்வதற்குப் புரட்சிகர ஜனநாயக சக்திகள் ஒரு முரணற்ற போராட்டத்தை நடத்த வேண்டுவதும் உழைக்கும் மக்கள் அனைவரின் ஆதரவையும் சார்ந்து நிற்பதும் அவசியமாகும்.

புதிதாக விடுதலை அடைந்த நாடுகள் பல இடர்ப்பாடுகளை எதிரிடுகின்றன. பழைய முறைகளைப் பேணிக் காப்பதற்கும் இளம் நாடுகளை முதலாளித்துவ அமைப்பிலிருந்து முறித்துக் கொண்டு போகாமல் தடுப்பதற்கும் ஏகாதிபத்தியவாதிகளும், ஸ்தலப் பிற்போக்காளர்களும் தம்மாலான யாவற்றையும் செய்கின்றனர். புதிதாக விடுதலை அடைந்த சில நாடுகள் எதிர்ப்புரட்சியாளர்களின் நடவடிக்கைகளைத் தமது சொந்த அனுபவத்திலிருந்தே ஏற்கனவே நன்கு உணர்ந்திருக்கின்றனர். பிற்போக்கு சக்திகளின் முயற்சிகளை முறியடிப்பதற்கும், அவை காலச் சக்கரத்தை பின்னுக்குத் திருப்பாமல் தடுப்பதற்கும், ஏகாதிபத்திய - எதிர்ப்பு, நிலப்பிரபுத்துவ - எதிர்ப்பு, ஜனநாயகப் புரட்சியை வெற்றிகரமான முடிவுக்குக் கொண்டு வருவதற்கும் போராடிக் கொண்டிருக்கும் சகல முற்போக்கு சக்திகள், தேசபக்த

1. லெனின், தொகுப்பு நூல்கள், பாகம் 31, பக். 244

சக்திகளின் கூட்டணியைக் கட்டியமைக்க வேண்டியது ஜீவாதாரமானதாகும்.

கடந்த சில ஆண்டுகளில் பல நாடுகளில் தேசவிடுதலைக்கான போராட்டம் நடைமுறையில் சுரண்டல் உறவுகளுக்கு எதிரான போராட்டமாக வளர்ச்சியுறத் தொடங்கியுள்ளது. சுயேச்சையான வளர்ச்சிப் பாதையைப் பின்பற்றி வரும் பர்மா, ஈராக், சிரியா, அல்ஜீரியா, எகிப்து, கினி, காங்கோ (பிரசாவில்லி) சோமாலியா, தான்சானியா போன்ற பல நாடுகளில் ஆளுங் கட்சிகளும், அரசியல் தலைவர்களும் சோஷலிசத்தை நிர்மாணிப்பதே தமது குறிக்கோள் என்று அறிவித்துள்ளன.

இந்த நாடுகள் வெவ்வேறு அளவில் சமூக சீர்திருத்தங்களைச் செயலாக்கி வருகின்றன. ஏகாதிபத்திய ஏகபோகங்களின் உடைமையிலிருந்த உற்பத்தி சாதனங்களை அவை தேசவுடைமையாக்கி வருகின்றன, பொருளாதாரத்தில் ஒரு பொதுத் துறையை நிறுவி வருகின்றன; ஒரு நிலச் சீர்திருத்தத்தை அமுலாக்கியும், விவசாயிகளைக் கூட்டுறவுகளை அமைக்குமாறு ஊக்குவித்தும். இதுபோன்ற பல நடவடிக்கைகளை எடுத்துக் கொண்டும் வருகின்றன. இந்த சீர்திருத்தங்கள் சமூக வளர்ச்சித் திட்டங்களின் கீழ் செயலாக்கப்படுகின்றன. இவை எப்போதும் முன்பின் முரணின்றி இருப்பதில்லை; பல அம்சங்களில் பிழையற்ற, விஞ்ஞான சோஷலிசக் கருத்துக்களை கற்பனுவாதக் கருத்துக்களுடன் குழப்பிக் கொண்டு விடுகின்றன.

எனினும், இந்த நாடுகளின் தலைவர்கள், தாம், பல வழிகளில் சோஷலிச நாடுகளின் உதாரணத்தைப் பின்பற்றி வருவதாகவும், உலக சோஷலிச அமைப்பின் பரந்த அனுபவத்தைப் பயன்படுத்தி வருவதாகவும் வலியுறுத்துகின்றனர்.

சோஷலிசத்தை நோக்கிய மனித குலத்தின் முன்னேற்றம் தவிர்க்க முடியாதது என்பதை இந்த வளர்ச்சி புதிய பலத்துடன் காட்டுகிறது. சோஷலிச நாடுகள் தமது அனுபவத்தை இளம் நாடுகள் மீது என்றும் திணிப்பதில்லை. அவை, அவற்றுக்கு சகல துறை உதவி அளிக்கின்றன; ஆனல் அவற்றின் விவகாரங்களில் என்றும் தலையிடுவதில்லை. சோஷலிசத்தை அடைவதற்கான மிகவும் நம்பகமான, நிச்சயமான வழியை அனுபவம் நாடுகளுக்கு காட்டும்.

## 13. இன்றையப் பிரதான பிரச்சினை

தற்கால உலகை முழுமையாக எடுத்துக்கொண்டு பார்ப்போம். அது, எதிரெதிர் திசைகளில் வளர்ச்சியுற்று வரும் இரு சமூக அமைப்புக்களைக் கொண்டுள்ளது, உலக சோஷலிச அமைப்பு தனது அனுகூலங்களை மென்மேலும் பூரணமாக வெளிப்படுத்தி வருகிறது, அதே

பொழுதில் முதலாளித்துவ அமைப்பு வர்க்கப் போர்களாலும், அரசியல், பொருளாதார நெருக்கடிகளினாலும் உலுக்கப்பட்டுள்ளது. இந்த இருவகை வளர்ச்சியைக் கூர்மையாக கவனித்துப் பார்த்தால், இரு எதிரெதிரான அமைப்புகளுக்கும் இரு உலகங்களுக்கும் இடையேயான போட்டி தவிர்க்க முடியாமல் சோஷலிசத்தின் வெற்றியில்தான் போய் முடியும் என்று காட்டுகிறது.

எனினும் மக்களின் போராட்டமின்றி சமூக வளர்ச்சியின் எத்தகைய போக்குகளும் வெற்றி வாகை சூடமுடியாது. ஏகாதிபத்திய வல்லரசுகள் தமது படைக்கலங்களை விரைவாக அதிகரித்து வருகின்றன. அவை ராணுவ ஆத்திரமூட்டல்களைத் தூண்டி வருகின்றன, படை வலிமையையும், வன்முறையையும், பிரயோகப்படுத்தி பிற நாடுகளின் விவகாரங்களில் தலையிட்டு வருகின்றன. உலக சோஷலிச அமைப்பையும் தேச விடுதலை இயக்கங்களையும் எதிர்த்துப் போராடுவதற்கு அவை இந்தக் கொள்கையைத்தான் கடைப்பிடிக்கின்றன. எனவே தான் மற்றொரு உலகப்போர் அபாயம் ஏற்படுகிறது.

தற்போது சோஷலிசம் மென்மேலும் பலமடைந்து வருவதாலும் முதலாளித்துவம் பலவீனமடைந்து கொண்டும், அழிவை நோக்கிச் சென்று கொண்டுமிருப்பதாலும், செத்து வரும் அமைப்பானது அதனுடன் கூடவே கோடிக்கணக்கான மக்களை சாவுக் குழிக்குள் இழுத்துச் செல்வதாகவும், எண்ணற்ற தலைமுறைகளின் உழைப்பினால் உருவாக்கப்பட்டுள்ளதை அழித்து விடுவதாகவும் அச்சுறுத்தி வருகிறது.

எனவே, போரா, சமாதானமா என்ற பிரச்சினை உலகிற்கு மிக முக்கியமான பிரச்சினையாகும். மனித குலத்தின் வருங்காலத்திற்கான போராட்டம் எதற்கும் இரண்டாந்தர முக்கியத்துவமுள்ளதல்ல.

## முதலாளித்துவத்தின் மீது குற்றப் பத்திரம்

17ஆம் நூற்றாண்டின் போர்களில் 30 லட்சம் பேர் கொல்லப்பட்டனர். 18ஆம் நூற்றாண்டின் போர்கள் 55லட்சம் உயிர்களைக் காவு கொண்டன; 19ஆம் நூற்றாண்டின் போர்கள் 1 கோடியே 60 லட்சம் உயிர்களைக் கொள்ளை கொண்டன. இந்த நூற்றாண்டில் முதலாவது உலகப்போரில் 1 கோடிப் பேர் கொல்லப்பட்டனர், இரண்டாம் உலகப்போரில் கொல்லப்பட்டவர்களின் எண்ணிக்கை 5 கோடியாகும்.

17 ஆம் நூற்றாண்டின் பிரதான ஆயுதங்கள் துப்பாக்கிகளும் கைத்துப்பாக்கிகளுமே, ஆரம்பத்தில் ஒரு துணை ஆயுதமாக இருந்த கள பீரங்கி 18, 19 ஆம் நூற்றாண்டுகளில் தீர்மானகரமான ஆயுதமாயிற்று. இந்த நூற்றாண்டின் இரு உலகப் போர்களில் பிற அழிவுகர சாதனங்களும் தோன்றின, பீரங்கிகள். டாங்கிகள், விமானங்கள் ஆகியவற்றின் முக்கூட்டு அணி உருவாக்கப்பட்டது. பின்னர், வெகுஜன அளவில்

மக்களைக் கொன்று குவிக்கும் அணு ஆயுதங்களும் உற்பத்தி செய்யப் பட்டன. படைக்கலங்கள் தொடர்ந்து அபிவிருத்தி செய்யப்பட்டு வரு கின்றன. மூன்ருவது உலகப் போரில் எத்தகைய ஆயுதங்கள் உபயோகப் படுத்தப்படலாம் என்று ஆல்பர்ட் ஐன்ஸ்டீனைக் கேட்ட போது, மூன்ரு வது உலகப் போரைப் பற்றித் தனக்குத் தெரியாதென்றும், ஆனல் நான்காவது உலகப் போர் ஏற்படும்போது, அந்த சமயத்தில் வில்களும் அம்புகளும் மட்டுமேதான் எஞ்சியிருக்கும் என்று கூறினர்.

போரே ஏற்படலாகாது. புத்தி சுவாதீனமுள்ள, மற்றும் நவீனகால ஆயுதங்களின் அழிவு சக்தியை அறிந்துள்ள எவரும் இதை உணருகின் றனர். முதலாவது அணுகுண்டின் வெடிசக்தி 20 ஆயிரம் டன் 'டிரோடில்' (ஆற்றல் மிக்க வெடிமருந்து) சக்திக்கு சமமானது, தற் காலத்தில் 10 கோடி டன்களுக்கு அதிகமான வெடிசக்தி உடைய ஹைட்ரஜன் குண்டுகள் உள்ளன. இதற்கும் மேலாக, அழிவுகரமான கதிர்வீச்சு அபாயமும் இருக்கிறது. மனித குலத்திற்கு வரம்பற்ற மலி வான சக்தியை வழங்கக்கூடிய மிகப்பெரிய விஞ்ஞானக் கண்டு பிடிப்பு களில் ஒன்று, அதற்கு பதிலாக சாவையும், நாசத்தையும் ஏற்படுத்து வதாக உலகை பயமுறுத்துகிறது. இதற்கான பழி முழுமையும் மனிதத் தன்மையற்ற முதலாளித்துவ அமைப்பையே சாரும்.

ஜப்பான் சரணகதி அடைவதற்கு ஒரு சில நாட்களுக்கு முன்னதாக 1945 ஆகஸ்டில் ஹிரோஷிமாவிலும் நாகசாகியிலும் அணுகுண்டு வீசும் படியாக உத்தரவிட்டவர் அமெரிக்க ஜனதிபதி டரூமன்தான். ஹிரோ ஷிமாவில் வெடித்த அணு குண்டினல் 2 லட்சம் மக்கள் கொல்லப் பட்டனர். அல்லது, கதிர் வீச்சினல் ஏற்பட்ட நோயிக்கு இரையாகி மாண்டனர். நகரம் பிடி சாம்பலாயிற்று. உலக வரலாற்றில் மிகவும் சோகமயமான இந்த நாள் என்றுமே மறக்கமுடியாததாகும்.

ராணுவ அவசியம் ஏதும் இல்லாதபோது அமெரிக்கா அணுகுண்டை எதற்காக உபயோகப்படுத்தியது என்ற கேள்வி எழுகிறது. இதற்கான காரணத்தை அறிவது சிரமமானதல்ல. அமெரிகக ஆளும் வட்டா ரங்கள் சோவியத் யூனியனை அச்சுறுத்துவதற்கும், தன்னுடைய கொள்கை வழியைப் பின்பற்றும்படி உலகை நிர்ப்பந்தப்படுத்தவும் தனது ஆயுத பலத்தை காட்டுவதற்கு விரும்பியது. அமெரிக்க ஏகாதி பத்தியவாதிகள், வெகுஜன ரீதியில் மக்களைக் கொன்று குவிக்கும் ஆயுதங்களில் தமது ஏகபோகத்தைப் பயன்படுத்திக் கொண்டு, அணு ஆயுதங்களைக் காட்டி மிரட்டும் மாய்மாலத்தில் இறங்கியது. அதிகார– போதை ஏறிய பென்டகன் (அமெரிக்க ராணுவத்தலைமை) ஜெனரல் கள், சோவியத் யூனியனின் பிரதான தொழில்துறை மையங்களைக் கொண்டு முற்றுகத் தரைமட்டமாக்குவதற்கான திட்டங்களை வகுத் தனர். சோஷலிச அமைப்பை ஒழித்துக் கட்டுவதற்காக லட்சோப லட்சக் கணக்கான மக்களைக் கொன்று குவிப்பதற்கு அவர்கள் தயாரா யிருந்தனர்.

இந்த நிலைமைகளில், சோவியத் யூனியன், தனது மக்களின் சோஷலிச ஆதாயங்களைக் காப்பதற்கும், உலகின் முன்னோடி சோஷலிச நாட்டின் சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்கும் தனது சொந்த அணு ஆயுதங்களை உருவாக்கிக் கொள்வதைத் தவிர வேறு வழியில்லாது போயிற்று. சோவியத் விஞ்ஞானிகள் சிறந்து பணியாற்றினர்; அமெரிக்க அணு ஆயுத ஏகபோகம் முறிக்கப்பட்டது.

## சமாதானத்தின் நலன் மக்களின் கைகளில் உள்ளது

முதலாளித்துவ மேலை நாடுகளின் ''படை பல—நிலை''க் கொள்கை சோஷலிச நாடுகளின் இயல்பான தன்மைக்கே அந்நியமானதாகும். எனவே, சோவியத் யூனியன், தான்ராணுவ ரீதியில் வலுமிக்கதாக இருந்த போதிலும், ஆயுத உற்பத்திப் போட்டியை முடிவுக்கு கொண்டு வருவதற்கும் நிலையான சமாதானத்தை உத்தரவாதம் செய்வதற்கும் இடையறாது பணியாற்றி வருகிறது. ஆனால் ஏகாதிபத்திய சர்க்கார்கள் சமாதானத்திற்குப் பாடுபடுவதாக வாயளவில் கூறிக்கொள்ளும் அதே சமயத்தில், தமது ஆயுத உற்பத்தியைத் தொடர்ந்து பெருக்கி வருகின்றன. அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளின் கொலைகாரச் செயல்கள் பலமுறை மனிதகுலத்தைப் போரின் விளிம்புக்குக் கொண்டு வந்துள்ளன. இன்று,போரா, சமாதானமா என்ற பிரச்சினை உலகெங்குமுள்ள கோடிக் கணக்கான மக்களுக்கு ஜீவாதார அக்கறை உடைய ஒரு விஷயமாகியுள்ளது:

மற்றொரு உலகப்போரைத் தவிர்க்க முடியுமா? ஏகாதிபத்தியம் தனது இயல்பான தன்மையின் காரணமாகவே போர்களைத் தோற்றுவிக்கிறது வரலாற்றுப் போக்கு இதற்கு முனைப்பான சான்றை அளிக்கிறது. ஏகாதிபத்தியத்தின் தன்மை மாறவில்லையாதலால், அது இருக்கின்ற வரையிலும் போர் அபாயம் இருந்து கொண்டேயிருக்கும்.

எனினும், எதார்த்தமான நிலைமைகளையோ, அல்லது மாறியுள்ள வரலாற்று நிலைமையையோ கணக்கில் எடுத்துக் கொள்ளாமல் எந்தக் கொள்கையையும் பிரயோகப்படுத்த முடியாது. ஏகாதிபத்தியம் இன்னும் போர்களைத் தோற்றுவிக்கிறது என்பது உண்மையே; ஆனால் ஏகாதிபத்திய நாடுகள் எங்கோ விண்வெளியில் இல்லை. அவை, பிற சக்திகளும் உயிரோட்டத்துடன் செயல்பட்டு வருகின்ற இங்கே, இந்த மண்ணுலகில்தான் உள்ளன. இந்த சக்திகளால் ஏகாதிபத்தியத்திற்குக் கடிவாளமிட்டு அதனுடைய ஆக்கிரமிப்புத் திட்டங்களை முறியடிக்க முடியுமா என்பதை அறிந்து கொள்வதுதான் முக்கியமானதாகும். வேறு சொற்களில் கூறுவதெனில், தற்கால சகாப்தத்தில் போர் மற்றும் சமாதான சக்திகளின் சமநிலையைப் பகுப்பாய்வு செய்வது அவசியமாகும்.

சமாதான சக்திகள், முதலாவதாக சோவியத் யூனியனும் பிற சோஷலிச நாடுகளும் ஆகும்; இவை, ஏகாதிபத்திய ஆக்கிரமிப்பாளனை அடித்து நொறுக்குவதற்கு வல்லமை உடையவையாயிருக்கின்றன. சமாதானத்தின் தரப்பில் ஆசியா, ஆப்பிரிக்கா, லத்தீன் அமெரிக்காவிலும் பெரும் எண்ணிக்கையிலான நாடுகள் உள்ளன. அவையும் போரை விரும்பவில்லை. தமது தேசிய மறுமலர்ச்சியின் நோக்கங்களை அடைவதற்காக சமாதானமே அந்நாடுகளுக்குத் தேவைப்படுகின்றன. முதலாளித்துவ நாடுகளிலுள்ள தொழிலாளி வர்க்கமும் சமாதான ஆதரவாளனே. அது ஏகாதிபத்திய யுத்தத்திற்கு எதிராக உழைக்கும் மக்களின் வெகுஜனப் போராட்டத்தை உருவாக்கி வருகிறது.

1961ல் ஏற்கப்பட்ட தனது வேலைத் திட்டத்தில் சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சி இவ்வாறு கூறியது: ''சக்தி மிக்க சோஷலிச முகாம், சமாதான வேட்கையுள்ள சோஷலிஸ்டல்லாத நாடுகள், சர்வதேசத் தொழிலாளி வர்க்கம், சமாதானத்திற்காகப் பாடுபடும் பிற அனைத்துச் சக்திகள் ஆகியவற்றின் கூட்டு முயற்சிகளினால் ஓர் உலகப் போரைத் தடுத்து நிறுத்துவது சாத்தியமே. ஏகாதிபத்திய சக்திகளுக்கு எதிராக சமாதான சக்திகளின் மேலாண்மையும், போர் சக்திகளுக்கு எதிராக சோஷலிச சக்திகளின் மேலாண்மையும் வளர்ந்து வருவதானது உலகெங்கும் சோஷலிசம் பூரணமாக வெற்றியடைவதற்கு முன்பே கூட, சில இடங்களில் முதலாளித்துவம் இன்னும் உயிர் வாழும் நிலைமையிலும் சமுதாயத்தின் வாழ்விலிருந்து நடைமுறையில் உலகப் போரை விலக்குவதை சாத்தியமாக்கும். உலகெங்கும் சோஷலிசத்தின் வெற்றியானது சகல போர்களினதும் சமூக, தேசியக் காரணங்களைப் பூரணமாக அகற்றிவிடும். போரை ஒழிப்பதும் நிரந்தரமான சமாதானத்தை நிறுவுவதும் கம்யூனிசத்தின் வரலாற்று லட்சியப் பணியாகும்.''

சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சியின் இந்த முடிவுக்கு எதார்த்த உண்மைகள் முழு ஆதாரமாய் அமைந்துள்ளன. இது, சமாதான சக்திகள், போர் சக்திகளை முறியடிக்கும் என்ற நமது நம்பிக்கையைப் பெருக்குகிறது.

எனினும், உலக நிலைமை என்றுமே பூரணமாக நேர்பாதையில் செல்வதில்லை. சமாதானத்தைப் பாதுகாக்கும் சாத்தியப்பாடு, உலக அரங்கில் சக்திகளின் ஒட்டுமொத்த சமநிலையிலிருந்து தானாகவே ஏற்பட்டு விடுவதில்லை. போர் மற்றும் சமாதானப் பிரச்சினை ஏகாதிபத்தியவாதிகளுடனான ஆயுதமேந்திய போராட்டங்களிலும் மோதல்களிலும், நிர்ணயிக்கப்படுகிறது; அவர்கள் உலகின் வெவ்வேறு பகுதிகளில் அபாயகரமான நிலைமைகளைத் தொடர்ந்து உருவாக்கி வருகிறார்கள். தற்காலத்தில் சர்வதேச விவகாரங்கள் கடற்கரையில் அலைகள் பொங்கி எழுவதையும், தணிவதையும் போன்று இருக்கிறது. சமாதான சக்திகளின் முயற்சிகளின் மூலமாக அடையப் பெற்ற முடி

வமைதியும், ஏகாதிபத்திய ஆக்கிரமிப்புச் செயல்களின் விளைவாய் உலகப் பதற்றம் அதிகரிப்பதும் மாறி மாறி ஏற்படுகிறது.

வியத்நாமில் ஏற்பட்ட அமெரிக்க ஆக்கிரமிப்பு இதற்கோர் உதாரணமாகும். இது உலகில் சகல நாணயமான மக்களின் ஆத்திரத்தையும் கிளப்பியது. தமது சர்வதேசியக் கடமையைச் செய்து வரும் சோவியத் யூனியனும் பிற சோஷலிச நாடுகளும் வியத்நாமிய மக்களுக்குப் பரந்த பொருளாதார, ராணுவ உதவியை அளித்தனர். இந்த ஆதரவையும், உலகு தழுவிய ஒருமைப்பாட்டு இயக்கத்தையும் சார்ந்து நின்ற வீரம் செறிந்த வியத்நாமிய மக்கள் படையெடுப்பாளர்களைத் தோற்கடித்து, ஓர் அரசியல் தீர்வுக்கு இணங்கும்படி அவர்களை நிர்ப்பந்தப்படுத்தினார்கள்.

வியத்நாமிய மக்களின் வெற்றி விடுதலைக்கான போராட்டத்தில் வீராவேசத்தின் உத்வேகமூட்டும் உதாரணங்களைக் காட்டியுள்ளது.

மேலும், அது சோஷலிசம் தென்கிழக்கு ஆசியாவிலும் வேரூன்றுவதற்கு உதவி புரிந்து, சமாதானம், சோஷலிச சக்திகளின் வல்லமையை நிரூபித்துள்ளது. இறுதியாக சர்வதேசப் பதட்டநிலை மேலும் தளர்ச்சியடைவதற்கான வாய்ப்புக்களை அது திறந்து வைத்திருப்பது எவ்விதத்திலும் குறைந்த முக்கியத்துவம் வாய்ந்ததல்ல. இதில்தான் அதன் பிரம்மாண்டமான வரலாற்று முக்கியத்துவம் அடங்கியிருக்கிறது.

ஏகாதிபத்தியவாதிகளின் போர், ஆக்கிரமிப்புக் கொள்கைக்கு எதிரான போராட்டத்திற்கு கம்யூனிஸ்டுகள் தொடர்ந்து தலைமை தாங்குகின்றனர். அணு ஆயுத சோதனைகளுக்கு முற்றுப்புள்ளி வைப்பதற்கான அவர்களின் விடாப்பிடியான போராட்டத்தின் காரணமாக, இச்சோதனைகளை மூன்று இடங்களில்—தரை, ஆகாயம், தண்ணீருக்கடியில்—தடை செய்வது குறித்து ஒரு சாவதேச ஒப்பந்தம் 1963 இல் கையெழுத்திடப்பட்டது. அணு ஆயுதங்களைப் பரவலாக்குவதைத் தடை செய்யும் மற்றுமொரு ஒப்பந்தம் 1969 இல் கையெழுத்திடப்பட்டது. 1972 மேயில் மாஸ்கோவில் சோவியத் யூனியனும் அமெரிக்காவும் இரு முக்கிய ஒப்பந்தங்களில் கையெழுத்திட்டன. அவை ஏவுகணை-எதிர்ப்பு அமைப்புகளைக் கட்டுப்படுத்துவது குறித்த ஓர் ஒப்பந்தமும், கேந்திரத் தாக்குதல் ஆயுதங்களைக் கட்டுப்படுத்துவதற்கான சில நடவடிக்கைகள் குறித்த ஒரு தற்காலிக ஒப்பந்தமும் ஆகும். இவ்வொப்பந்தங்கள் கையெழுத்தானது அணு ஆயுதப் போர் அபாயத்தை குறைப்பதை நோக்கிய ஒரு மிக முக்கிய நடவடிக்கையைக் குறித்தது. சோவியத் யூனியனுக்கும் அமெரிக்காவுக்கும் இடையேயான உறவுகளின் அடிப்படைக் கோட்பாடுகள் குறித்த தஸ்தவேஜும் கூட அடிப்படை முக்கியத்துவம் வாய்ந்ததாகும். அது, பல்வேறு சமுதாய அமைப்புகளைச் சேர்ந்த நாடுகளிடையே சமாதான சகவாழ்வு கொள்வதற்கான கோட்பாட்டை—இந்தக் கோட்பாட்டை சோஷலிச நாடுகள் எப்போதும் ஆதரித்து வருகின்றன—ஊர்ஜிதம் செய்கிறது.

1973 ஜூனில் சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சி மத்தியக் கமிட்டியின் பொதுச் செயலாளர் லியோனித் பிரெஷ்னேவ் அமெரிக்காவுக்கு அரசு முறையில் விஜயம் செய்தபோது அணு ஆயுதப் போரை தடை செய்வது குறித்து கையெழுத்தான ஒப்பந்தம் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தது. தம்மிடையே அணு ஆயுதப் போர் வெடிப்பதை அனுமதிக்கக்கூடாது என்றும், அத்தகைய ஒரு போர் ஏற்படாமல் தடுப்பதற்காக தம்மால் இயன்றதனைத்தையும் செய்வது என்றும் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டுள்ள சோவியத் தரப்பும், அமெரிக்கத் தரப்பும் உறுதிமொழி எடுத்துக் கொண்டன. மனிதகுலம் முழுமைக்கும் சமாதானத்திற்கான வாய்ப்புக்களை அபிவிருத்தி செய்து கொள்வதற்கு இவ்வொப்பந்தம் பிரம்மாண்டமான முக்கியத்துவம் வாய்ந்ததாகும்.

## சோவியத் சமாதான வேலைத்திட்டம்

சமாதான நோக்கத்திற்காக லியோனித் பிரெஷ்னேவ், பிரான்ஸ், ஜெர்மன் சமஷ்டிக் குடியரசு, அமெரிக்காவுக்கு அண்மையில் அரசு முறை விஜயம் செய்ததானது போர்ப் பிற்கால வரலாற்றில் முக்கிய மைல்கற்களாகும். சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சி 24 ஆவது காங்கிரசினல் முன்வைக்கப்பட்ட சமாதானம், சர்வதேச ஒத்துழைப்புக்கான வேலைத் திட்டத்தில் எதிர்நோக்கப்பட்டுள்ள பெரும் நடவடிக்கைகளில் இது ஒரு பகுதியாகும். இவ்வேலைத் திட்டம் கீழே கொடுக்கப்பட்டுள்ள ஆறு விரிவான நோக்கங்களைக் கொண்டுள்ளது:

முதலாவது. தென்கிழக்கு ஆசியாவிலும், மத்திய கிழக்கிலும் ஏகாதிபத்தியத்தினுல் உண்டு பண்ணப்பட்ட போர்-வெங்களங்களை அகற்றுவது, சகல ஆக்கிரமிப்பு நடவடிக்கைகளேயும் முறியடிப்பது, வன்முறையைப் பயன்படுத்துவது அல்லது வன்முறையைப் பயன்படுத்துவதற்கான அச்சுறுத்தலே துறப்பது.

இரண்டாவது. ஐரோப்பாவில் முடிவமைதி, சமாதானத்தை நோக்கிய திசையில் தீவிரமான மாற்றத்தைக் கொண்டு வருதல், இரண்டாவது உலகப் போரின் விளைவாக இக்கண்டத்தில் ஏற்பட்ட பிரதேச மாற்றங்களை இறுதியாக ஒப்புக் கொள்ளச் செய்தல், ஐரோப்பிய கூட்டுப் பந்தோபஸ்தை உத்தரவாதம் செய்தல்.

மூன்ருவது. அணு ஆயுத, இரசாயன, விஷக் கிருமி ஆயுதங்களைத் தடை செய்தல், அணு ஆயுத சோதனைகளுக்கு முற்றுப்புள்ளி வைத்தல், அணு ஆயுதமற்ற மண்டலங்களை நிலைநாட்டுதல், அணு ஆயுதப் பரிகரணம்.

நாலாவது. ஆயுத உற்பத்திப் போட்டியை முடிவுக்குக் கொண்டு வருவது, அன்னிய ராணுவ தளங்களை கலைப்பது, தற்செயலாக யுத்தம்

நிகழ்வதற்கான வாய்ப்பையோ அல்லது திட்டமிட்ட ஆயுதந்தாங்கிய ஆத்திரமூட்டலையோ குறைப்பதற்கான நடவடிக்கைகளை வகுத்தல்.

ஐந்தாவது. மிஞ்சியுள்ள காலனி ஆட்சிகளை ஒழித்தல், இனவெறி இன ஒதுக்கலின் சகல வெளிப்பாடுகளையும் கண்டித்தல், நிறவெறிக் கொள்கைகளைக் கடைப்பிடிக்கும் நாடுகளைப் பகிஷ்கரித்தல்.

ஆறுவது. சுற்றுச் சூழலைப் பாதுகாப்பது, இயற்கைச் செல்வாதாரங்கள், போக்குவரத்து, தகவல் போக்குவரத்தை வளர்ப்பது, மிக மிக அபாயகரமான நோய்களை தடுப்பது ஒழிப்பது, புறவெளியையும் உலக மாகடல்களையும் ஆராய்ச்சி செய்வது பயன்படுத்துவது ஆகியவை சம்பந்தமான நடவடிக்கைகள் உட்பட நாடுகளிடையே பரஸ்பர அனுகூலமான ஒத்துழைப்பை விஸ்தரிப்பது.

இது முற்றிலும் காரியசாத்தியமான வேலைத் திட்டமாகும்; இது சகல மக்களின் அபிலாஷைகளையும் பிரதிபலிக்கின்றது. அதே சமயத்தில் இது, ஏகாதிபத்தியத்திற்கும் அதன் ஆக்கிரமிப்புக் கொள்கைகளுக்கும் எதிரான கடுமையான நடவடிக்கையை கோருகிறது. நாட்டின் பொருளாதார வல்லமைக்கு தொடர்ந்து ஆக்கம் சேர்த்து வருகிற சோவியத் மக்களின் ஈடுபாடுமிக்க உழைப்பு—இது அதன் பாதுகாப்பு ஆற்றலின் முக்கிய ஆதாரமாகும்—சமாதான வேலைத் திட்டத்திற்கான பிரதான ஆதாரமாக விளங்குகிறது. இறுதியாக, சமாதானத்தைப் பாதுகாப்பதற்கான சோவியத் மக்களின் உறுதிமிக்க முடிவும் எந்த விதத்திலும் குறைந்த மதிப்புடையது அல்ல.

சமாதானத்திற்காகப் பாடுபடும் போது, சோவியத் யூனியன், பல்வேறு சமுதாய அமைப்புகளைக் கொண்ட நாடுகளிடையே சமாதான சகவாழ்வுக் கொள்கையை முரணற்றுக் கடைப்பிடிக்கிறது. லெனினால் துவக்கி வைக்கப்பட்டுள்ள இக் கொள்கையின் கோட்பாடுகளில், தகராறுகளைத் தீர்ப்பதற்கான ஒரு சாதனம் என்ற வகையில் போரைத் துறப்பது, நாடுகளின் ஆதிபத்திய உரிமை, சமத்துவத்தை கறாராகக் கடைப்பிடிப்பது, இதர நாடுகளின் விவகாரங்களில் தலையிடாதிருப்பது ஆகியவை அடங்கும். நாடுகளின் சமூக-பொருளாதார, அரசியல் முறைகள் எவ்வாறு இருந்த போதிலும் அவை அனைத்துக்கும் இடையே பரஸ்பர அனுகூலமான பொருளாதார, கலாசார பந்தங்களையும் வளர்ப்பதை சமாதான சகவாழ்வுக் கொள்கை கோருகிறது. நாடுகளிடையேயான அரசியல் வேற்றுமைகளை சமாதான பூர்வ பேச்சு வார்த்தைகள் மூலமாகத் தீர்க்க முடியும் என்பதை அனுபவம் காட்டுகிறது.

எனினும், சமாதான சகவாழ்வு, என்றால் எந்த விதத்திலுமான கருத்துப்போராட்டங்களுக்கும், சோஷலிசம் முதலாளித்துவ சித்தாந்தங்களுக்கும் இடையேயான போராட்டத்துக்கும் முற்றுப்புள்ளி வைக்க

வேண்டும் என்று பொருளல்ல: மார்க்சிய-லெனினியக் கருத்துக்கள் உழைப்பாளி மக்களின் ஜீவாதாரமான அபிலாஷைகளைப் பிரதிபலிப்பதால் அவை உலக முழுவதும் பரவியுள்ளன. இது அவ்வாறு இருப்பதற்குக் காரணம் அவை சரியானவையாயும், நியாயமானவையாயும் இருப்பதாகும்; எனவே எந்த சக்தியினாலும் அவற்றை ஒடுக்கிவிட முடியாது.

சித்தாந்தப் போராட்டம் தானே ஆயுதந் தாங்கிய போராட்டங்களுக்கு இட்டுச் செல்வதில்லை. இது முதலாளித்துவ நாடுகள், சோஷலிச நாடுகளின் சமாதான சகவாழ்வுக்கு முற்றிலும் ஏற்புடையதே வன்முறையின் மூலமாகவோ அல்லது வன்முறையைப் பயன்படுத்துவதாக அச்சுறுத்துவதன் மூலமாகவோ—இந்த முறையைத்தான் ஏகாதிபத்தியவாதிகள் அடிக்கடி கடைப்பிடிக்கின்றனர்— நாடுகளின் மீது அன்னியக் கருத்துக்களைத் திணிக்க முயற்சி செய்வது தவறென்பதில் சந்தேகமில்லை.

மற்றும், சமாதான சகவாழ்வு என்பது ஒடுக்கப்பட்ட மக்களுக்கும் காலனி ஆதிக்க வாதிகளுக்கும் இடையேயும், சுரண்டப்படுபவர்களுக்கும் சுரண்டுபவர்களுக்கும் இடையேயான உறவுகளுக்குப் பொருந்தாது. வர்க்க முரண்பாடுகளைச் சமரசப்படுத்துவது என்பதும் இதன் பொருளல்ல. ஒவ்வொரு நாட்டிற்கும் எத்தகைய ஒடுக்கு முறையின் வடிவத்தையும் எதிர்ப்பதற்கான உரிமை உள்ளது; பிற்போக்கு சக்திகள் ஆயுதமேந்தினால் மக்களுக்கும் அவ்வாறு செய்வதற்கு உரிமை நிச்சயமாக உள்ளது.

சமாதான சகவாழ்வு என்பதற்கு இப்போதிருக்கும் இடங்களில் முதலாளித்துவ அமைப்பு தொடர்ந்து இருக்க வேண்டும் என்பது பொருள் அல்ல, முதலாளித்துவ நாடுகளிலுள்ள மக்கள் தமது சொந்த அனுபவத்தின் மூலமாக சோஷலிசத்தின் அனுகூலங்களை உணர்ந்து கொள்ளும் போது, அவர்கள் தாமே ஒரு மேலும் முற்போக்கான சமுதாய அமைப்பைத் தேர்ந்தெடுத்துக் கொள்வர்.

சமாதானம், சர்வதேச பந்தோபஸ்துக்கான, சோஷலிசத்தை நோக்கிய மனிதகுலத்தின் முன்னேற்றத்திற்கான போராட்டம் வெகு நீண்டதும் இடர்மிகுந்ததும் ஆகும். முற்போக்கு சக்திகள் ஏகாதிபத்தியம் எனும் ஒரு வஞ்சகமான எதிரியை எதிர்நோக்கி உள்ளன; ஏகாதிபத்தியம் இன்னமும் கணிசமான செல்வாதாரங்களை உடையதாய் விளங்குகின்றது. எனினும், புரட்சிவாதிகளும், சகல முற்போக்கு சக்திகளும் ஒன்றுபட்டுப் போர்க்குண மிக்கதாய் உள்ளனர். இது தான் அவர்களது சக்தி வாய்ந்த ஆயுதம்; இது அவர்களுக்கு இறுதி வெற்றியை உத்தரவாதம் செய்யும்.

# முடிவுரை

மனித குலமானது, காலகாலமாகவே ஆனந்த வாழ்வு பற்றியும், ஒரு லட்சிய சமுதாயம் குறித்தும் கனவு கண்டு வந்துள்ளது. முதலாவது இதிகாச பயணக் கதை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் கிரீஸ் நாட்டில் தோற்றமளித்தது. இது ஐம்புலின் கதை, இதை தத்துவ ஞானி தியோதரஸ் சிகுலஸ் திருப்பச் சொல்லியிருந்தார். அந்தக் கதை ஆப்பிரிக்காவுக்கும் மடகாஸ்கருக்கும் கிழக்கே ஒரு பரிபூரணத் தீவு இருப்பதாக வர்ணித்தது. அது வட்டமான தீவு: அதில் இயற்கை தந்த பரிசுகள் நிரம்பி வழிந்தன. இதன் குடிமக்கள் வலிமையுள்ளவர்கள்: எதையும் தாங்கும் சக்தியுள்ளவர்கள். அவர்கள் குலமரபு சமூகங்களாக வாழ்ந்தார்கள், கடமைகளைப் பகிர்ந்து கொண்டார்கள். நிலம், வீடுகள், உழைப்புக் கருவிகள், மனைவியர் குழந்தைகள் அனைத்தும் கூடப் பொதுவாக இருந்தன. அங்கு நிரந்தரமான சமாதானமும் சாந்தியும் ஆட்சி செய்தன.

வெகுகாலத்திற்குப் பின்னர் தாமஸ் மோரின் உடோப்பியா, தாமசோ கம்பனெல்லாவின் சூரியனின் நகரம், பிரான்சிஸ் பேகனின் புதிய அட்லாண்டிஸ் போன்ற நூல்கள் வெளிவந்தன. இவையே கற்பனைக் கருத்தின், எதிர்கால சமூகம் பற்றிய கனவுகளின் முதல் நவீனங்களாகும்.

இன்று எதிர்காலத்தில் எவ்வகையான சமுதாயம் நிலவும் என்பது பற்றி ஊகிக்க வேண்டுவதில்லை. எதிர்கால சமூகமான கம்யூனிஸ்டு சமூகம் கனவன்று. அதைக் குறித்து தெளிவான எதார்த்தமான சித்திரம் உள்ளது. அதன் விவரங்களைப் பற்றி எல்லாம் உத்தரவாதமாகச் சொல்ல முடியாது என்பது வாஸ்தவம். எழவிருக்கும் பல பிரச்சினைகளுக்கும் எவ்வாறு பரிகாரம் காண்பது என்பதை நிகழ்ச்சிகளின் போக்கு சுட்டிக்காட்டும். ஆனால் எதிர்காலத்தின் பிரதான அடிப்படை அம்சங்கள் தெளிவானவை.

கம்யூனிசம் இந்த உலகில் நிலையான சமாதானத்தை நிலைநாட்டும். இன்னல்களும் பேரிடர்களும் நிறைந்த தனது நீண்ட வரலாற்றில் மனிதன் முதல் தடவையாக நிம்மதியுடன் மூச்சுவிட முடியும். நாசத்திற்கான ஆயுதங்களைச் செய்து மனித முயற்சியை மடைமையாக வீணாக்கும் போக்குக்கு கம்யூனிசம் முற்றுப்புள்ளி வைக்கும். தற்போது படுகொலை ஆயுதங்களை உற்பத்தி செய்யும் அனைத்து நாடுகளிலுமுள்ள ஆயிரக்கணக்கான தொழிற்சாலைகள் மக்களின் அன்றாடத் தேவைகளை உற்பத்தி செய்யும் துறையில் மாறி இயங்கும். அவை ஜெட்போர் விமானங்களும், குண்டு வீசும் விமானங்களும் செய்வதற்குப் பதில் பயணிகள் சரக்குகளை ஏற்றிச் செல்லும் விமானங்களைச் செய்யும்,

கண்டம் விட்டுக் கண்டம் பாயும் ஏவுகணைகளைச் செய்வதற்குப் பதில் விண்வெளி ராக்கெட்டுகளைச் செய்யும் யுத்த டாங்கிகளுக்குப் பதில் டிராக்டர்களையும், துப்பாக்கிகள் வெடிகளுக்குப் பதில் குளிர்பதன பெட்டிகள், வாகுவம் கிளீனர்களையும் செய்யும்.

விஞ்ஞானத்திற்கு மிகவும் விரிந்த பரந்த வாய்ப்புகள் கிடைக்கும். தற்போது ஆராய்ச்சிகளில் ஈடுபட்டிருப்பவர்களில் மூன்றில் இரண்டு பங்கினர் புது மாதிரியான ஆயுதங்களைச் செய்வதிலும் அவற்றிலிருந்து தற்காத்துக் கொள்வதற்கான வழிகளைத் தேடுவதிலும் மும்முரமாக உள்ளனர். எதிர்காலத்தில் அனைத்து விஞ்ஞானிகளும் எல்லா ஆராய்ச்சி மையங்களும் புதுவகையான சக்திகளையும் பௌதீகப் பொருள்களையும் கண்டுபிடிக்கும் முயற்சியில் ஈடுபட்டிருப்பார்கள். மனிதனது வேலையை எளிதாக்கவும் அவன் வாழ்க்கையை மேலும் மகிழ்ச்சிகரமாக்கவும் உதவும் யந்திரங்களை வகுப்பார்கள். நோய்களை வென்று மனிதன் நீண்டகாலம் வாழ்வதற்கான மார்க்கங்கள் பற்றித் தமது ஆராய்ச்சிகளை ஒருமுகப்படுத்துவார்கள்.

நோய்கள் மீது போர், வறுமை மீது, வயோதிகத் துன்பம் மீதும் போர், வறட்சி மீதும், பயிர் சாவியாகப் போவது, இதர இயற்கைப் பேரழிவுகளை எதிர்த்துப் போர் என்று மனிதாபிமானச் செயல்பாடுகளைக் குறிப்பிடும் வகையில் மட்டுமே போர் பற்றிய கருத்து நீடிக்கும். சமாதானம் பற்றிய கருத்து, சர்வாம்ச அமைதி, சமூகத்தில் சாந்தி, உலக முழுதிற்கும் சமாதானம், சமாதான பூர்வமான புறவெளி ஆராய்ச்சி என்ற பொருளில் பரிணமிக்கும்.

வலுவான, வளமான மனிதகுலம் உலகிற்கு அப்பாற்பட்ட மண்டலங்களின் நாகரிகத்தோடு தொடர்பு கொள்வதற்கான தனது முயற்சிகளை ஒருமுகப்படுத்த இயலும். ஏனெனில் மண்ணக மனிதர்கள் தமது வானுலக அண்டையரை, அண்மையிலோ சேய்மையிலோ சந்தித்தல் நிச்சயம். இது நடைபெறும் போதில் இதர கோள்களிலுள்ள மக்கள் மீது நமது விருப்பத்தைத் திணிக்கும் பிரச்சினைக்கு இடமே இல்லை.

எச். ஜி. வெல்ஸ் எழுதியுள்ள உலகங்களின் போர் என்னும் நாவலில் செவ்வாய் கிரகத்தவர்கள் பூமியில் இறங்கி இந்தக் கோளை படையெடுத்துப் பிடிக்கும் உத்தேசத்தோடு உயிர் இனம் அனைத்தையும் அழிக்க முயன்றார்கள். அணுக்கிருமிகள் தலையிட்டதால் தான் மனித குலம் உயிர்தப்ப முடிந்தது. அமெரிக்க எழுத்தாளர்களின் விஞ்ஞான கற்பனைக் கதைகள் இதே போன்று வேறு உலகங்களுடனான மோதல்கள் பற்றிய சித்திரங்களை அளிக்கின்றன. அவற்றில் ஒரு கதை மண்ணக மனிதர் சுக்கிரனிலுள்ள வாசிகளை அடிமைப்படுத்தி அந்தக்கோளை ஒரு காலனியாக மாற்றியதை வருணிக்கிறது. இன்னொரு எழுத்தாளர் செல்வாக்கு மண்டலங்களுக்காக புறவெளியில்

மூர்க்கமான சண்டை நடப்பதைச் சித்தரிக்கிறார். இந்த எழுத்தாளர்கள் தாம் வாழும் முதலாளித்துவ எதார்த்தத்தை வைத்து சிந்தனையை ஓட்டுகிறார்கள்.

உலகங்களின் மோதல்கள் இதைப் போன்று இருக்கும் என்று நாங்கள் கருதவில்லை. சோவியத் விஞ்ஞானக் கற்பனைக் கதை ஆசிரியரான இவான் எப்ரமோவ் தனது நவீனங்கள் ஒன்றில் விஞ்ஞானத்தின் உயர் சிகரங்களை எய்தியுள்ள, மிக உயர்ந்த அறிவாற்றல் படைத்த ஜீவன்களே இதரக் கோள்களுக்குப் பறந்து செல்ல ஏற்பாடு செய்ய முடியும், தமது வானக நண்பர்களிடம் செல்ல முடியும் என்று குறிப்பிடுகிறார். விஞ்ஞானத்திலும் தொழில் நுட்பத்திலுமான இநத முன்னேற்றம், இந்த உயர் வளர்ச்சி எய்திய அறிவுத்தரம் நீதியும் நியாயமும் அடிப்படையாகக் கொண்ட சமூக அமைப்பில்தான் சாத்தியமாகும். இந்த ஆசிரியர் கருத்துப்படி மண்ணக மனிதர்களோ, இதர கோள்களின் வாசிகளோ கெட்ட குரூரமான நோக்கங்களைக் கொண்டிருக்க முடியாது, வன்முறையைப் பயன்படுத்தி சாவையும் அழிவையும் விதைக்க முடியாது. அவர்களுக்கு இயற்கையைக் கட்டுப்படுத்தும் முயற்சியில் அறிவாற்றலின், படைப்பாற்றல் முயற்சியின் மேன்மையை நிலைநாட்டுவது என்ற ஒரே ஒரு லட்சியம்தான் இருக்கவேண்டும். இந்த நோக்கத்தை நிறைவேற்ற அறிவுடைய ஜீவன்களின் கூட்டணி அவசியம்.

நமது கோளுக்கும் நமது நாளுக்கும் திரும்புவோமானால் செய்ய வேண்டிய பணிகள் இன்னும் மிகுதியாக உள்ளன. இதை உழைப்பு மூலம் மட்டுமே வெற்றிகரமாகச் செய்ய முடியும்; கம்யூனிசத்தின் கீழ் உழைப்பு சமுதாய வாழ்க்கையின் திறவு கோலாகவும், மனிதனது செயலபாடுகளின் அருப்பொருளாகவும் ஆகிவிட்டது.

சமூகத்தின் ஸ்தாபன ரீதியான முயற்சிகள், வாழ்க்கையின் அனைத்துத் தேவைகளும் அமோகமாகக் கிடைப்பதை உத்தரவாதம் செய்ய, உற்பத்தி சக்திகளின் வளர்ச்சியில் பிரமாண்டமான முன்னேற்றத்தை சாதனையாக்கும். கம்யூனிசத்தின் கீழ் செல்வப், சுபிட்சம என்ற பெருங் கலத்திலிருந்து வெள்ளமாகப் பெருகும் என்று மார்க்ஸ் கூறினார். விஞ்ஞானமும் உற்பத்தியும் இரண்டறக் கலக்கும்போது இந்த வெள்ளப் பெருக்கு அதிகரித்தபடி இருக்கும். விஞ்ஞானம் ஏறகெனவே ஒரு உற்பத்தி சக்தியாக மாறி வருகிறது, ஆனால் எதிர் காலத்தில் அது மனித குலத்திற்கு வழங்கப்போகும சாதனைகளுடன் ஒட்பிட்டுப் பார்த்தால் அது இன்று கொண்டுவரும் அனுகூலங்கள் அற்ப சொற்பமே. விஞ்ஞானம் பல பிரச்சினைகளுக்குத் தீர்வு காணும் தலைவ யிலில் நிற்கிறது. இந்தப் பரிகாரங்கள் நீண்ட எதிர்கால வாய்ப்புகள் ஒருபுறமிருக்க அண்மை எதிர் காலத்தில் அது உற்பத்தியில் புரட்சியை விளைக்கும்.

இன்றுள்ள கேந்திரமான பிரச்சினை அணு சக்தியின் எதிர்விளைவுகளைக் கட்டுப்படுத்துவதே. இது சாதனையாகுமானால், மனிதனுக்கு நடைமுறையில் குன்றாத வளமுடைய சக்தி ஆதாரம் கிடைக்கும். மனிதன் தாவரங்கள் இதர உயிரினங்களின் வளர்ச்சியை கட்டுப்படுத்தத் தெரிந்து கொள்ளும்போது, இது அளப்பரிய முக்கியத்துவமுடைய முன்னேற்றம் என்பது தெளிவு—பருவ நிலையைக் கட்டுப்படுத்தும் விஷயத்திலும் இதே நிலைதான். இது சாதனையானால் பயிர் சாவியாகப் போவதற்கு முற்றுப் புள்ளி வைக்கலாம், இயற்கையில் கிடைக்கப்பெறாத செயற்கை புரதம் போன்றவற்றை உற்பத்தி செய்யலாம்.

விஞ்ஞானம், எஞ்சினியரிங் ஆகியவற்றில் ஏற்பட்டுள்ள முன்னேற்றங்கள் மூலமும், உயர் விஞ்ஞான கலாசாரத் தரங்கள் மூலமும் சாதனையாகும் மிகவும் உயர் மட்டத்திலான தொழிலாளர் உற்பத்தி ஆற்றல் அடிப்படையில் உற்பத்தி சக்திகள் செழுமையடையும். கம்யூனிஸ்டு உற்பத்தி முறை என்றால் - வரைவுகளைத் தயாரிப்பது முதல் முழுமை செய்யப்பட்ட பண்டங்களை வெளிக்கொண்டு வருவது வரை - சகல வேலைகளையும் செய்வதற்குத் தானியங்கி யந்திர நுட்ப முறைகளைப் பயன்படுத்துவது என்று பொருளாகும். அவசியமாக உள்ளது என்னவென்றால் யந்திரங்கள் மீது கண்காணிப்பாக இருப்பது மட்டுமே.

நலவாழ்வுக்கும் மகிழ்ச்சிக்கும் ஆதாரம் என்ற முறையில் கம்யூனிசத்தின் கீழ் உழைப்பு சமூகத்திலுள்ள அனைத்து உறுப்பினர்களின் பிரதான ஜீவாதாரத் தேவையாகும்.

பல காரணங்களால் மனிதன் நன்றாக உழைக்க முடியும். உயர் ஊதியம் கிடைப்பதாலோ அல்லது சமூகத்திற்கு இது தன் கடமை என்று உணரும் காரணத்தாலோ அவர் அவ்வாறு செய்யலாம். அல்லது அவர் தனது வேலையில் அர்ப்பணிப்புடன் ஈடுபட்டு, தனது படைப்பாற்றல்களின் வெளிப்பாட்டுக்கான ஒரே மார்க்கம் இது என்று காணலாம். இறுதியில் உழைப்பு ஒரு வழக்கமாகி விட்டது, மூச்சு விடுதல் பிறருடன் பழகுதல் போன்ற இயல்பான மாமூல் தேவைகளில் ஒன்றாகி விட்டது என்று அவர் உணரலாம்.

பொருளாயத ஊக்குவிப்புத் தவிர மற்றவற்றில் இது சரியே என்று ஆட்சேபம் எழலாம். கம்யூனிஸ்ட் உழைப்பு பொது நலனுக்கான இலவச உழைப்பு என்று லெனின் வர்ணித்திருக்கும்போது ஊதியம் கிடைக்கும் வாய்ப்புப் பற்றி எவ்வாறு பேசுவது?

தனது ஆதர்சப் பணிக்கு மற்றவர்களுக்குக் கிட்டாத ஏதாவது பிரதிபலன் நேரடியாகக் கிடைக்க வேண்டும் என்று கம்யூனிஸ்ட் சமூகத்தில் வாழும் மனிதனுக்கு கேட்கத் தோன்றாது என்பது கண்கூடு.[1]

---

1. உதாரணமாக ஒரு வாத்தியக் குழு அல்லது இசைக் குழுவை எடுத்துக் கொள்வோம். இதன் உறுப்பினர்கள் உண்மையிலேயே கலைஞர்களாக இருந்து இசையில் ஆர்வம்

அவன் சுதந்திரமாக உழைக்கிறான்: அவன் தனது உழைப்பை பணத்தை வைத்தோ வேறு பொருளாயத அளவுகோலை வைத்தோ நிர்ணயிப்பதில்லை, பணம் இருக்காது என்பது தெரிந்ததே. ஆனால் சமூகத்தின் செல்வம் பெருகுவதில் அவன் அக்கறை காட்டுகிறான். அவனது அக்கறையில் தன்னலம் இல்லை. அவன் தனது நலவாழ்வு பற்றி மட்டும் சிந்திக்காமல் சமூகம் முழுவதையும் பற்றிச் சிந்திக்கிறான். கம்யூனிசத்தின் கீழ் சமூகத்தின் செல்வத்தை அதிகரிப்பதிலும் எல்லோரின் வாழ்க்கைத் தரங்களையும் தொடர்ச்சியாக மேம்படுத்தவும் கூட்டு பௌதிக அக்கறை இருக்கும் என்பதே இதன் பொருள்.

எனவே, கம்யூனிஸ்ட் மாதிரி மனிதனின் ஓர் அம்சம் உழைப்பு, இது அவனது ப்ரதான ஜீவாதார அவசியமாகிறது என்பதே. ஆனால் அதில் இதைவிட மேலதிக முக்கியத்துவம் உள்ளது. அவன் தனது சக்திக்கு ஏற்ப உழைக்க முடியும். இதன் பொருள் சமூகத்தின் செல்வம் தொடர்ந்து பெருகிவரும், இது அதன் உறுப்பினர் அனைவரின் நியாயமான தேவைகளை நிறைவு செய்யும் என்பதே.

சக்திக்கு ஏற்ற உழைப்பு தேவைக்கேற்ற பிரதிபலன் என்ற கம்யூனிசத்தின் பிரதான கோட்பாடு செயல்படுத்தப் பெறுகிறது, இதன் பொருள் சமூகத்தில் முழு சமத்துவம் நிலவும் என்பதே.

''ஒவ்வொருவருக்கும் அவர்களது தேவைகளுக்கு ஏற்ப'' என்ற கோட்பாடு சமத்துவம் என்ற கருத்துடன் எவ்வாறு பொருந்துகிறது என்பதைக் காண்போம்.

சோஷலிசத்தின் கீழ் சம வேலைக்கு சம ஊதியம் இருக்கிறது. இங்குதான் சோஷலிச வினியோகக் கோட்பாட்டின் நீதி காணக் கிடக்கிறது. ஆனால் மக்களுக்கு பல்வேறான ஆற்றல்கள் பல்வேறான பொறுப்புகள் உள்ளன. இதன் விளைவாக சிலர் மற்றவர்களைவிட அதிகமாக சம்பாதிக்கிறார்கள், உயர்ந்த வாழ்க்கைத் தரம் பெற்றிருக்கிறார்கள்: கம்யூனிஸ்டு வினியோகக் கோட்பாடு புகுத்தப்படும்பொழுது இந்த வித்தியாசம் ஒழிக்கப்படும். மேலும் வேறுபட்ட உழைப்பு ஆற்றல்களுடன் பிறந்து படைப்பாற்றல் முயற்சிகளில் ஈடுபடச் செய்யும் இயற்கையின் அநீதி ஓரளவுக்குக் களையப்படும்.

சுத்த சுயம்பிரகாசவாதிகள் கருத்துப் பிரகாரம் மிகவும் துல்லியமான பொருளில் இது உண்மையான சமத்துவம் அல்ல, ஏனெனில் கம்யூனிஸ்டு சமூக அமைப்பு ஒருவரின் வேலையின் அளவும் தன்மையும் எதுவாக இருந்த போதிலும் அனைவர் தேவைகளையும் நிறைவு

---

செய்துகொண்டிருப்பின் நல்ல பணிக்கு உபரியாக ஊதியம் தரப்படுவதில்லை, என்ற காரணத்தால் அரை பங்கும் குறை பங்குமாகப் பாடவோ, வாத்தியம் இசைக்கவோ போவதில்லை என்பது நிச்சயம்.

செய்கிறது: ஆனால் அத்தகைய சட்டரீதி அணுகுமுறை கம்யூனிசத்திற்கு நல்லதல்ல. கம்யூனிசம் அதைப் புறம் தள்ளி உயர் நீதியை உண்மையான மனிதாபிமான லட்சியமான சமத்துவத்தை வலியுறுத்துகிறது: ஒவ்வொருவரும் தமது ஆற்றல்களுக்கு ஏற்ப சமூகத்திற்குச் சிறப்புடன் உழைக்கட்டும், சமூகம் அவரது நியாயமான தேவைகள் அனைத்தையும் தாராளமாக வழங்கும்.

கம்யூனிஸ்ட் சமத்துவத்தின் இன்னொரு அம்சமாவது சமூக பொருளாதார உறவுகள் துறையிலும், வாழ்க்கை கலாசாரத் தரங்கள் விஷயத்திலும் நகரத்திற்கும் நாட்டுப்புறத்துக்கும் இடையிலான வேற்றுமைகளை அகற்றுவதாகும். மண்ணை வேலை தொழில்துறை உழைப்பின ஒரு கிளையாகிவிடும், தொழிற் துறையிலும் விவசாயத்திலுமான உழைப்பு விஷயத்தில் பல்வேறு தொழில்களிடை காணப்படும் வித்தியாசம் தவிர வேறு வித்தியாசம் எதுவும் இராது. உற்பத்தியில் ஈடுபடுத்தப்பெற்றுள்ள மூளை உழைப்பையும் உடல் உழைப்பையும் இரண்டற இணைப்பதற்கு விவசாயமும் தொழில்துறையும் ஒரு சமமான சாதகமான நிலைமைகளைப் படிப்படியாக வளர்த்து வருகின்றன.

சமுதாயத்தில் நிலவும் மாதர் சம்பந்தமான அசமத்துவத்தின் இறுதி மீதமிச்சங்கள் அகற்றப்படும். சமையல் வேலை துணி துவைத்தல் தையல் வேலை போன்ற வீட்டு வேலைத் தொல்லைகளிலிருந்து மாதர்கள் விடுவிக்கப்படுவார்கள். குழந்தைகள் பராமரிப்பு மேலும் எளிதாக்கப்படும்,

இறுதியாக, கம்யூனிசம் பிரதானமாகவும் பால் அடிப்படையிலான அசமத்துவத்தை வென்று அகற்றுவதை சாத்தியமாக்கும். இந்த அசமத்துவம் மகளிர் ஆடவர்களைவிட உடலளவில் பலவீனமானவர்கள் என்ற உண்மையிலிருந்து கிளைக்கிறது. உற்பத்தி மேலும் மேலும் யந்திர மயமாக்கப்பட்டு, தானியங்கி மயமாக்கப்பட்டு வருவதால் உடல் வலுவின் சாதகங்கள் வரவரக் குறைவாகி விடும். ஆடவருடன் சரி நிகராக மகளிர் பொருளாதாரத்தின் அனைத்து துறைகளிலும் பணியாற்றும் காலம் தொலைவில் இல்லை. வேறு சொற்களில் கூறினால், உழைப்பைப் பொருத்தவரை ''பலவீனம்'' ''பலசாலி'' எந்த பாலைச் சேர்ந்தவர்கள் என்ற கருத்துக்கள் நீடிக்காது. கம்யூனிஸ்டு யுகத்தில் வலிமை மிகு யந்திரங்களை இயக்கி வரும் அறிவாற்றல் பெற்ற மகளிர் ஆண்களுக்கு எந்த வகையிலும் தாழ்ந்தவர்களல்ல.

உற்பத்தி சாதனங்களின் கம்யூனிஸ்டு உடமை ஒன்று மட்டுமே இருப்பதாலும் வர்க்க வேறுபாடுகள் அகற்றப்படுவதாலும் இது வர்க்கங்களற்ற சமூக அமைப்புக்கு அழைத்துச் செல்லும். இதுவே சமத்துவத்தின் இறுதியான லட்சியம். இதை மேலும் தொடர நினைப்பதில் அர்த்தமில்லை. மக்கள் தமது ஆற்றல்கள், சுவைகள் மேலும் பல வகைகளில் எப்போதும் வேறுபட்டிருப்பர், அவர்கள் எல்லோரையும் ஒரே விதமாக்கு

வதற்கு முயல்வதல்ல நீதி. மாருக ஒவ்வொரு நபருக்கும் வாழ்க்கையி லும் படைப்பாற்றல் முயற்சிகளிலும் சாத்தியமான அளவு சிறந்த நிலைமைகளை உருவாக்குவதேயாகும். எனவே சமத்துவ லட்சியத்தின் பொதுக் கருத்தான இறுதி லட்சியம் வர்க்கங்களற்ற சமூக அமைப்பே. இது சாதனையாகும் பொழுது, இந்தச் சொல்லே அதன் இன்றைய ஜீவாதார முக்கியத்துவத்தை இழந்து விடும்.

சுதந்திரத்தைப் பொருத்தவரை அது சமத்துவத்தோடு கைகோர்த்துச் செல்கிறது. ஏனெனில் சுதந்திரமான மக்களே சமத் துவத்துடன் வாழ்வர், சமத்துவமுடைய மக்களே சுதந்திரமாக இருக்க முடியும்.

சோஷலிசப் புரட்சி உழைக்கும் மக்களை சுரண்டலிலிருந்து விடுதலை செய்கிறது. சமுதாயத்தின் இதற்குப் பிந்திய வளர்ச்சி முழுவதும் ஒவ்வொருவரும் வளர்ச்சியடைந்து தமது படைப்பாற்றல் திறன்களை சுதந்திரமாகப் பிரயோகிப்பதை சாத்தியமாக்குவதற்கான நிலைகளை உருவாக்கும் நோக்கம் கொண்டதாகும். இதுவே சுதந்திரம் பற்றிய கம்யூனிஸ்டு லட்சியம்.

மனிதனை அடிமைப்படுத்தும் பழைய உழைப்புப் பிரிவினையை அகற்றுவதோடு கம்யூனிசத்தின் கீழ் சுதந்திரமான ஆக்கபூர்வ முயற்சி களுக்கான பிரத்யேகமான சாதக நிலைமைகள் இணைந்துள்ளன. முதலாளித்துவத்தின் கீழ் தொழிலாளி வாழ்க்கை முழுதிலும் ஒரே குறிப்பிட்ட வேலையில் தளையுண்டு கிடக்கிறான். அவன் உற்பத்தி செய்யும் பொருட்கள் எங்கே பயன்படுத்தப்படுகின்றன என்பதைக்கூட அவன் பெரும்பாலும் அறிந்திருப்பதில்லை. பூட்டு வேலையின் சலிப்பும் சோர்வும் அவனை அலுப்படையச் செய்கின்றன.

சோஷலிசத்தின் கீழ் தொழிலாளி தனது வேலையின் சமூக முக்கியத் துவத்தை ஏற்சனவே காண்கிறான், தான் செய்யும் பொருட்களின் பின்னே விவசாயிகள் அமோகமான சாகுபடியைக் கொண்டுவர உதவும் யந்திரங்களையும் மேலும் அதிக வீடுகள் கட்ட உதவும் யந்திரங் களையும் அவர் காண முடியும், இந்த உணர்வுடன் அவர் உற்சாகத்தோடு வேலை செய்து நிர்ணயமான இலக்குகளை அடைய முடியும். இதையும் தவிர சோஷலிச நாட்டிலுள்ள ஒரு தொழிலாளி ஒரே வேலையில் கட்டுண்டு கிடக்கவில்லை. அவருக்குத் தமது கல்வித் தகுதியை மேம்படுத்திக் கொள்ள சகல வாய்ப்புகளும் உள்ளன. மேலும் பொறுப்புள்ள வேலையை மேற்கொள்ள அவர் படிக்கலாம்.

எனினும், கம்யூனிசத்தின் கீழ் மட்டுமே பழைய உழைப்புப் பிரிவினை யின் பின் விளைவுகளை அகற்றுவது சாத்தியம், ஒரே மாதிரியான வேலை களைச் செய்வதற்கு தானியங்கி முறைகள் உள்ளன. மனிதன் யந்திரங் களை கண்காணித்து ஏற்பாடுகள் செய்து கொண்டே படைப்பாற்றல் முயற்சிகளில் ஈடுபடலாம். உண்மையில் எல்லா வகையான உழைப்பும்

...பாடு தன்மை பெறும். உயர் கல்வி, கலாசாரத் தரங்கள் ...ர தமது பிரதான வேலைக்கும் அப்பாற்பட்ட துறைகளுக்கு விஸ் ...துக் கொள்ள உதவும். வேறு ஆற்றல்களையும் வளர்த்துப் பயன் ...த்த இயலும். வேறு சொற்களில் கூறினல் கம்யூனிஸ்ட் சமுதாயத் ...ன் மனிதன் ஓர் உயர் ஒழுக்கத்தாமுடைய ஆரோக்கியமான கலாசார ...னிதனுக இசைவான முறையில் வளர்க்கப் படுவான்.

மனிதனுடைய ஆயுட்காலமும் பெருமளவுக்கு விரிவடையும் என்று ...திர்பார்க்கப்படுகிறது, விஞ்ஞானிகள் 150 முதல் 200 ஆண்டுகள் ஆயுள் பற்றிப் பேசுகிறுர்கள். மிகவும் சாதகமான பொருளாயத கலா ...ார நிலைமைகள் இருப்பதாலும், உயிரியல், மருத்துவம் இதர ...விஞ்ஞானங்களில் வெற்றிகரமான மாற்றங்கள் ஏற்பட்டு வருவதாலும் ...து சாத்தியமாகிறது.

தற்போது மனிதன் 10—20 ஆண்டுகள் படிப்பதற்குச் செலவழிக் கிருன். 25 முதல் 40 ஆண்டுகள் தான் வேலைக்கும் படைப்பாற்றல் முயற்சிகளுக்கும் மீதமுள்ளன. மனிதன் பெருமளவு அறிவும் அனுபவ மும் அடைந்த பிறகு அவன் முதிர்ச்சியடையும் உச்சகட்டத்தில் அவனது பலம் குன்றத் தொடங்கும், எனவே பல அற்புதமான திட்டங்கள் நிறைவேற்றப்படாது மீதப் பட்டு நிற்கும். அறிவாற்றலின் பல படைப்பு களைப் பெருது இழக்க நேரும். எனவே மனிதன் தனது 100ம் வயதில் இளமையோடு இருக்க முடியுமானுல் இது பிரமாண்டமான அளவுக்குப் பொதுவான முன்னேற்றத்திற்கு வகை செய்யும்.

சுதந்திரத்தின் கீழ் ஆளுமை வளர்ச்சியின் ஆக முக்கியமான அம்சம் ஒவ்வொருவரும் கம்யூனிச சுயாட்சியில் பங்கு கொள்வதே. கம்யூனிசத் தின் கீழ் வேலை ஒரு மனிதனின் ஜீவாதாரத் தேவையாகி விடுகிறது. பொது விவகாரங்களும் அவ்வாறே.

ஒவ்வொருவரும் சுயாட்சியில் பங்கு கொள்வதும், போத பூர்வ மான உயர் மட்டக் கட்டுப்பாடும், பொது விவகாரங்களை நிர்வாகம் செய்யும் பணி சரளமாக்கப்படுவதை உத்தரவாதமாக்குவது திண்ணம். இதில் சுதந்திரத்தின் அறநெறி அம்சமும் அடங்கியுள்ளது, சிலர் சுதந்திரத்தை ஒரு லைசன்ஸ் என்று கருதுகிறுர்கள்—சட்டம் ஒழுங்கு சமுதாயத்தின் மற்ற பகுதியினர் நலன்கள் எதுவாக இருப்பினும் சரி தாம் விரும்பும் எல்லாவற்றையும் செய்வதற்கான அனுமதி—என்று கருதுகிறுர்கள். எல்லோரும் இந்த வழியில் செயல்படத் தொடங்கி ஞல் அதன் விளைவு சுதந்திரமாக இருக்காது, அராஜகமாகவே இருக்கும்.

எனினும் சமுதாயத்தின் சுதந்திரம் என்றுல் சமுதாயத்திலிருந்து சுதந்திரம் என்று பொருளல்ல. தனிநபர் சுதந்திரம் என்றுல் அவர் இஷ்டப்படி ஆசைகளில் ஈடுபடலாம் என்று பொருளல்ல, உண்மையான சுதந்திரம் என்பது தனிநபர் தனது சிந்தனையையும் செயல்களையும் தனது சகமனிதர்களுடனும் ஒட்டு மொத்தமாக

சமுதாயத்தோடும் ஒருங்கிணைப்பது என்பதாகும். ...
தனிநலமும் பொது நலமும் ஒன்றாக இருக்குமாறும் சுதந்தி...
அவர்கள் சமுதாயத்தின் நலனுக்குச் செயல்படும் ...
கூறுடைய ஒன்றாகவே கருதுவார்கள். இது போத பூர்வம் க...
னிசத்தைக் கட்டி வளர்ப்போரின் சுதந்திரம் பற்றிய கருத்தமை...
பாகும். இது கம்யூனிச சமூக அமைப்பில் வெற்றிவாகை சூடும்.

எங்கெல்லாம் சமத்துவமும் சுதந்திரமும் நிலவுகின்றனவே...,
அங்கெல்லாம் அனைத்து தொழிலாளர் தேசங்களின் சகோதரத்துவ...
வாழ்க்கை முறையாகும் என்பது திண்ணம். சோதர உறவுகள்
பற்றிப் பேசும் போது, அவை தோழமை நேச உறவு என்பது பட்...
பல்ல என்பதை நாம் வலியுறுத்துகிறோம். அவை மக்களிடையிலான
மானுட பந்தங்களின் ஆக உயர்ந்த வடிவமாகும். நட்புறவு...
தே முமையும் எங்கே முடிகிறது சகோதரத்துவம் எங்கே தொடங்...
கிறது என்பதைத் திடமாக வரையறுக்க நாம் முயலவில்லை. இதில்
எவ்விதப் பொருளுமில்லை. இதில் முக்கியமானது என்னவென்றால்,
சகோதரத்துவம் என்ற கருத்தமைப்பில் உண்மையான மனித உறவு
களும், மக்களிடையே நிலவிய ஆழ்ந்த நம்பிக்கையும் உட்படும்.
இவையின்றி கம்யூனிசம் பற்றி எண்ணிப் பார்க்க முடியாது.

இந்த உறவுகள் அணி உணர்வு, ஒத்துழைப்பு பரஸ்பர உதவி என்பதில் சங்கிரகமாகி உள்ளன. ஓர் அணியில் மக்கள் ஒருவரை ஒருவர் சார்ந்திருக்கிறார்கள், அவர்களது பொது வெற்றி ஒவ்வொருவரும் மேற்கொண்ட முயற்சியின் விளைவாக ஏற்படுகிறது.

கம்யூனிசத்திற்கான மாற்றம் ஏற்படும் பொழுது பொதுவுடைமையிலிருந்து பிறந்த அணி உணர்வு தொடர்ந்து அபிவிருத்தியடைந்து, மேலும் வளமான பொருளைப் பெறுகிறது. அது பல புதிய வடிவங்களில் முக்கியத்துவம் பெறுகிறது.

கம்யூனிசத்தைத் தனியாக எவரும் கட்டிவிட முடியாது. கூட்டுறவு முயற்சிகள் மூலம் முன்னணியில் உள்ளவர்கள் எந்தக் காரணத்தாலோ பின்தங்கி நிற்பவர்களுக்கு உதவுவது மூலம் கட்டப்பட வேண்டும்.

உலக முழுவதிலும் சோஷலிசமும் கம்யூனிசம் வெற்றிவாகை சூடும் பொழுது, மிகவும் துணிச்சலான பல கனவுகள் நனவாகும். அவற்றைக் குறித்தே கவி ராபர்ட் பர்ன்ஸ் உத்வேக மூட்டும் கவிதையை எழுதினார்:

அதற்குரிய தருணம்
அருகே வருகுது
அகில மெங்கும்
மனிதனுக்கு மனிதன்
அருமைச் சோதரன்
ஆவது திண்ணம்

# தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

## புகுமுக வகுப்பிற்குரிய நூல்கள்

## (Books for the P. U. C.)



| | | |
|---|---|---|
| 1. | புகுமுக வகுப்பு உலக வரலாறு | — N. பக்தவச்சலு |
| 2. | பொருளியல் | — S. சபாநாயகம் |
| 3. | வணிகவியலுக்கு ஓர் அறிமுகம் I | — K. ஆளுடைய பிள்ளை |
| 4. | ,, II | — ,, |
| 5. | பௌதிகம் | — டாக்டர் P. திருஞான சம்பந்தம், இரா. நாகராசன் |
| 6. | புகுமுக பௌதிகம் | — டாக்டர் M. A. தங்கராஜ் |
| 7. | பௌதிகம்—ஓர் அறிமுகம் | — S. சம்பத் |
| 8. | வேதியியல் | — P. T. முனியப்பா, R. முத்துலட்சுமி |
| 9. | புகுமுக வேதியியல் | — T. V. கிருஷ்ணமூர்த்தி |
| 10. | புகுமுக வகுப்புக் கணிதம்-I | — K. இராஜகோபாலன் |
| 11. | ,, II | — ,, |
| 12. | ,, III | — ,, |
| 13. | புகுமுக வகுப்புக் கணித நூல். I | — T. கோவிந்தராசன், K. முத்துசாமி |
| 14. | ,, II | — ,, |
| 15. | ,, III | — ,, |
| 16. | கணிதம்—ஓர் அறிமுகம்-I | — R. மகாதேவன் |
| 17. | ,, II | — ,, |
| 18. | ,, III | — ,, |
| 19. | விலங்கியல் | — S. ஆப்ரகாம் |
| 20. | புகுமுக வகுப்பு விலங்கியல் | — P. M. அண்ணுமலை |
| 21. | புகுமுக வகுப்புத் தாவரவியல் | — S. சுந்தரம் |
| 22. | புகுமுக வகுப்பு அளவை இயல் | — P. C. தாயுமானவர் |
| 23. | புகுமுக வகுப்புப் புவியியல் | — S. இராதாகிருஷ்ணன் |